# புதுமனை புகுவிழா

சிறுகதைகள்

ச. கலியாணராமன்

முத்தமிழறிஞர் இல்லம்
114, பெரியசாமி நகர்
குண்டு உப்பளவாடி
கடலூர் - 607 002

நூல் பெயர் : புதுமனை புகுவிழா

பொருள் : சிறுகதைகள்

ஆசிரியர் : ச. கலியாணராமன்

பதிப்பு : முதல் பதிப்பு 1599

உரிமை : ஆசிரியர்க்கு

வெளியிடுவர் : ஆசிரியரின் சொந்த வெளியீடு

பக்கங்கள் : 168

விலை : ரூ. 35/-

அச்சிட்டோர் : சபாநாயகம் பிரிண்டர்ஸ்
73-A, கீழரத வீதி
சிதம்பரம்.

## நன்றி!

வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு இதழ்களில் வெளியாகி யிருந்த சிறுகதைகளைத் தொகுத்து வெளியிடுவதில் இது என்னுடைய நான்காவது சிறுகதைத் தொகுப்பாகும். வெளியிட்ட இதழ்களான கலைமகள், ஆனந்த விகடன், அமுதசுரபி, குமுதம், தினமணிகதிர் ஆகியவற்றுக்கு நன்றி உரியதாகும். அச்சகத்தார்க்கும் தொழிலாளர்க்கும் என் வணக்கம்.

பந்தநல்லூர்
22—8—99

பணிவன்புடன்,
**ச. கலியாணராமன்**

**டாக்டர் மு. வ. சொல்கிறார்:**

"தமிழ் ஒன்றே தமிழரைப் பிணைத்து ஒற்றுமைப் படுத்த வல்லது. தமிழ் ஆட்சிமொழியாகவும் கல்வி மொழியாகவும் ஆனால் தவிர, தமிழுக்கு எதிர்காலம் இல்லை என நம்பு. ஆட்சிமொழி என்றால் சட்டசபை முதல் நீதி மன்றம் வரையில் தமிழ் வழங்க வேண்டும். கல்வி மொழி என்றால் எவ்வகைக் கல்லூரியிலும் எல்லாப் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க வேண்டும்...

"வெளிநாட்டுத் துணியை விலக்குதல் போல், தமிழ் நாட்டுக்கும், தமிழ் மொழிக்கும் நன்மை செய்யாத செய்தித் தாள்களை விலக்கு. நாட்டுக்கும் மொழிக்கும் இடையூறான நிலையங்களைப் போற்றாதே. உன் காசு அவற்றிற்குப் போகாமல் காத்துக் கொள். நாட்டுப் பற்றும் மொழிப் பற்றும் உடையவர் நடத்தும் உணவு விடுதி, மருந்துக் கடை, துணிக்கடை முதலியன சிறிது தொலைவில் இருந்தாலும் விலை சிறிது கூடுதலாக இருந்தாலும் வேறு குறை இருந்தாலும் அங்கேயே சென்று வாங்கு...

— "தம்பிக்கு"
**டாக்டர் மு. வ.**

# இடம் பெற்றவை:

# புதுமனை புகுவிழா

குடிசையைப் பிரிக்கச் சொல்லி விட்டார்கள். முன்பே பலர் பிரித்துக் கொண்டு போய்விட்டார்கள். தருமு வேறு இடம் பார்த்திருந்தான். அவன் விரும்பிய இடத்தில் மனை கிடைக்கவில்லை. ஆனால் கிடைத்த இடம் அவனுக்கு மன நிறைவாக இருந்தது.

தன்னோடு இன்னொருவனைத் துணைக்கு வைத்துக் கொண்டு இரவோடு இரவாக மூங்கிற் கால்களை ஊன்றி விட்டான். ஒன்றரை அடி உயரத்துக்காவது சுவர் வைக்க வேண்டும். கொஞ்சம் சுவர் வைப்பதற்குள் நள்ளிரவு ஆகிவிட்டது. விடிந்தால் வேலைக்குப் போக வேண்டும். பிறகு மாலையில் வந்ததும் வீட்டு வேலையைத் தொடர வேண்டும். எப்படியும் மூன்று நான்கு நாளில் வீட்டைக் கட்டி விடலாம் என்ற துணிச்சல்.

மறுநாள் சுவர் வைத்து விட்டான். ஈர மண் சுவர். அது காய்ந்த பிறகே மேல்கூரைக்கு மூங்கில் அடிக்க முடியும். மூங்கில் வாங்க பணம் போதாது. புதிய கீற்றுகள் விலை அதிகம். மேலே வைக்கோலை வேய்ந்தால் மேலைக் காற்றில் கூரை புரளாமல் இருக்கும். புது மூங்கில் வாங்க முடியாது. பழைய குடிசையைப் பிரித்து அந்த மூங்கில் களைக் கொண்டு வந்தால் புது வீட்டுக்குப் பயன்படுத்திக் கொள்ளலாம். கீற்றும் கிடைக்கும்.

அந்த எண்ணத்தில் பழைய வீட்டைப் பிரித்தான். வேறு ஆள் வைத்துக் கொள்ளவில்லை. அவனே பிரித்தான்.

அவனுடைய மனைவி உதவி செய்தாள். அவள் தலையில் முக்காடு போட்டுக் கொண்டு சிறிது நேரம் கீற்றுப் பிரிக்க உதவி செய்தாள். வேலை சுறுசுறுப்பாக இல்லை. மேலே, தலையில் தூசு ஆனாலும் ஆகட்டும் என்று அவள் முக்காட்டையும் எடுத்து விட்டாள். அவள் கண்ணெல்லாம் தூசு; கூரையின் கரித்தூள். அவள் கவலைப்படவில்லை. மூத்த பையனும் இரண்டாவது பெண்ணும் கூட கீற்றுகளை அடுக்கவும் மூங்கில்களைப் பிரிக்கவும் உதவினர். மூன்றாவது பையன் ஏறிக் குதித்து விளையாடுவதிலேயே தீவிரமாக இருந்தான். அவன் அடங்கவே இல்லை. அவனோடு கத்திக் கத்தித் தொண்டை வலி கண்டது அவர்களுக்கு.

கூரையைப் பிரித்துப் போட்டதில் சில மூங்கில்களே உருப்படியாய்த் தேறின. மற்றவை பயனற்றுப் போயின. அடுப்பு எரிக்கவே உதவும். எல்லாம் மடித்து உளுத்து விட்டன. கீற்றுகளில் முழுதாகப் பத்துக்கூடத் தேறவில்லை. எல்லாம் துண்டு துண்டாக உதிர்ந்து விட்டன. கூரையைப் பிரித்துப் பயனே இல்லை. அடுப்புக்கு ஆகும்; அவ்வளவே.

சட்டிப்பானைகள், பெட்டிகள், தட்டுமுட்டுச்சாமான்கள் கூரையின் மூங்கில் கீற்றுகளுடன் புதிய வீட்டுக்குக் குடியேறி வந்தார்கள் அவர்கள். எல்லாப் பொருள்களும் தலைச்சுமையாக நாலைந்து நடைகளில் வந்து சேர்ந்தன. இரவு ஒன்பதே முக்கால் சங்கு ஊதிவிட்டது.

புதிய வீட்டுக் கூரைக்காகத் தூண்களாகப் புதிய மூங்கில்கள் நின்றிருந்தன. சுற்றிலும் ஈரம் உலராத மண் சுவர். மேலே கூரைக்கு இன்னும் மூங்கில் அடிக்கவில்லை. வெளியே அடுப்பு மூட்டிச் சோறாக்கி விட்டாள் தருமுவின் மனைவி. அதற்குள் சாக்குகளைக் கட்டி மேலே கூரைபோல விட்டுக்குப் போட்டு வைத்தான் அவன். இரவுப் பொழுது அந்தச் சாக்குக் கூடாரத்துக்குள் கழிந்தாக வேண்டும்.

எப்படியும் பகலில் சுவர் காய்ந்து விட்டால் மறுநாள் இரவாவது கூரைவேலையைத் தொடங்கி விடலாம்.

குழந்தைகள் சாப்பிட்ட பிறகு புதிய விட்டுக்குள் படுக்கை போட்டுக் கொண்டார்கள். மேலே சாக்கின் இடுக்குகள் வழியே நட்சத்திரங்கள் அழகாக இருந்தன. மூன்றாவது பையன் அவற்றை எண்ணினான். 'வானம் எப்படி இவ்வளவு உயரத்துக்குச் சென்றது?' என்பது பற்றிக் கதை ஒன்று சொன்னாள் பெண். ஒரு கிழவி தயிர்ப் பானையைத் தலையில் வைத்துக் கொண்டு தயிர் விற்றுக் கொண்டு போனாளாம்—

"அதெல்லாம் வெறும் கதை" என்று சொன்னான் மூத்த பையன். அவன் ஏழாவது படிக்கிறான்.

அது கதையோ என்னவோ, குழந்தைகளுக்கு விசித்திரக் கற்பனைகளைக் கேட்பதில் எல்லையற்ற மகிழ்ச்சி. அதை யாராலும் தடுக்க முடியாது. மூன்றாவது பையன் கடைசி வரையில் கதையைக் கேட்ட பிறகே தூங்கினான்.

தகரப் பெட்டிகளின்மேல் துண்டை விரித்துப் போட்டுப் படுத்தான் தருமு. அது பெட்டிக்கும் பாதுகாப்பு. உள்ளே ஒரு நல்ல சின்னாளப்பட்டிப் புடைவையும் இரண்டு நான்கு முழ வேட்டிகளும் குழந்தைகளின் சட்டைகளும் இருந்தன. அவன் வேலை பார்க்கும் தொழிற்சாலையில் கொடுத்த சீர் உடைக்கான துணியும் அதில் இருந்தன. அதைத் தைப்பதற்குத் தையற் கூலியும் துணியுடன் கொடுத்து விட்டார்கள். ஆனால் சீருடை தைக்கவில்லை. பழைய உடையே போதும். இந்தத் துணியில் குழந்தை களுக்கு ஏதாவது தைத்துப் போடலாம். ஆனால் மெல்லத் தான் தைக்க வேண்டும். இந்த நெருக்கடியில் எங்கே தைப்பது? இப்படித் துணியாகவே கொடுக்கப்பட வேண்டும் என்றும், 'தைத்த சீருடை' தேவை இல்லை என்றும் ஒரு

கோரிக்கை வைத்துத் தொழிற்சாலையில் போராடித் துணி யாகவும் தையற் கூலியாகவும் தனித்தனியே வாங்கினார்கள் தொழிலாளர்கள். இல்லாவிட்டால் குழந்தைகளுக்கு இந்தச் சீருடைத் துணி எங்கே கிடைக்கப் போகிறது?

ஒரு துண்டுச் சாக்கின்மீது சுருண்டு கிடக்கிறாள் அவன் மனைவி. கடைசியாகப் படுத்தவள் அவள்தான். ஆனால் அவளுக்கு எப்படியோ உறக்கம் வந்து விட்டது. நல்ல உறக்கம் என்பது அவள் மூச்சிலேயே தெரிகிறது. வீட்டில் நல்லதோ கெட்டதோ மிகுதியான வேலை பெண்களுக்குத் தான். இந்த வீடு கட்ட ஆரம்பித்ததிலிருந்து அவளுக்கு ஓய்வே இல்லை. குழந்தைகள் தொந்தரவு வேறு. சாலையில் சென்ற லாரியின் ஓசையில் அவள் புரண்டு படுக்கிறாள். ஆனால் தூக்கம் கலைந்ததாகத் தெரியவில்லை.

பின் பனிக்காலம். குளிரடிக்க ஆரம்பித்துவிட்டது. அவளுக்குக் குளிரே தெரியாது போலும். கோடையாகட்டும் குளிர்கால மாகட்டும், அவளுக்குமேல் புடைவையோடு சரி. போர்த்திக் கொள்வதும் இல்லை; புழுக்கத்தினால் துன்புறு வதும் இல்லை. அப்படி உடம்பு. ஆனால், அவனுக்குக் கோடையும் தாங்காது குளிரும் தாங்காது. இப்பொழுது தான் குளிர் ஆரம்பித்திருக்கிறது. அவனுக்குத் தாங்க வில்லை. கூரைப்போல வெறும் சாக்குப் படுதாவைப் போட்டு வைத்தால் அது பனியைத் தாங்குமா? இன்னும் சிறிது போனால் மழை போலச் சாக்கு நனைந்து சொட்டத் தொடங்கிவிடும். அவனுக்கு எங்கே தூக்கம் வரப்போகிறது? விடிந்து வேலைக்குப் போக வேண்டுமே என்ற கவலைவேறு.

வீட்டைக் காலி செய்ய வேண்டிய நிலைவந்து, புதுமனை பார்த்து, புதுவீடு கட்டத் தொடங்கியதிலிருந்து அரை நாளும் முழுநாளுமாக விட்டு விட்டு லீவு எடுத்துக் கிட்டத்தட்ட எல்லா லீவுமே தீர்ந்து போயிற்று. இனிச்

சம்பளமில்லாத விடுப்பு எடுக்க வேண்டியதாகிவிடும். மாதம் முழுச் சம்பளம் வாங்கியே முடியவில்லை; அரைகுறைச் சம்பளம் வாங்கி என்ன செய்ய? எப்படியும் வேலைக்குச் சென்றாக வேண்டும். அங்கே போய் தூங்கி விழுந்தாலும் சரி, அல்லது போர்மேனிடம் கொஞ்சம் அனுமதி பெற்றுக் கொண்டு இடைவேளை நேரத்தில் கண்ணை மூடினாலும் சரி வேலைக்குப் போய்விட வேண்டியதுதான்.

மூன்றாவது பையன் புரண்டு எழுவது தெரிகிறது. எங்கே எழுந்திருக்கிறான்? லாந்தரைச் சிறிது தூக்கி விட்டான் தருமு. மூன்றாவது பையன் கொஞ்சம் உளறக் கூடியவன். தூக்கத்தில் என்ன என்னவோ பிதற்றுவான். கேட்க வேடிக்கையாகக் கூட இருக்கும். பள்ளிக்கூடம் போகாமலே, யார் யாரோ படிப்பதையெல்லாம் கேட்டு வைத்துக் கொண்டு சொல்வான். தூக்கத்திலும் அதே பழக்கம். இப்பொழுது என்ன செய்யப்போகிறான் என்று பார்த்தான் தருமு.

பையன் நினைவோடுதான் எழுந்து உட்கார்ந்திருக் கிறான். அது தெரிகிறது.

"அப்பா! அப்போவ்!"

"என்னப்பா!"

"குளிருதுப்பா! குளிரு நடுக்குதப்பா!" அவன் குரலி லேயே உதறல் தெரிந்தது.

பதைத்து எழுந்து சென்றான் தருமு.

"இருப்பா போர்த்தி விடறேன்!"

துணிக்காகத் தடுமாறினான் அவன். சில கந்தல்களே அகப்பட்டன. அவற்றை எடுத்துப் போர்த்தி விட்டான்.

ஆனால், அவை குளிரைத் தாங்கக் கூடியன அல்ல. வேறு சாக்குகளும் இல்லை.

"என்ன பார்க்கிறீங்க?" அவள் விழித்துக் கொண்டாள்.

"ஒன்றுமில்லே. தூங்கு!"

அவளுக்கு ஒன்றும் நிதானமாகவில்லை. அரை குறை தூக்கம்.

அவன் பெட்டிகளைத் திறந்தான். மேலே அடுக்கி வைத்திருந்த சில காகிதப் பொட்டலங்கள், பீங்கான் தட்டுகள், ஈயப் பாத்திரங்கள். கற்சட்டிகள் ஆகியவற்றை அகற்றிவிட்டு அடியிலிருந்த வேட்டிகளையும் புடைவை யையும் சிருடைத் துணியையும் எடுத்தான்.

"அப்பா! இன்னும் குளிருதப்பா!" பையன் சிணுங்கினான்.

"இதோ வரேன்பா!" விரைவாகச் சென்று சிருடைத் துணியை விரித்துப் போட்டு அவனுக்கு முகம் முழுவதும் மூடிப் போர்த்தினான். மற்ற வேட்டிகளால் மூத்த பையனையும் பெண்ணையும் போர்த்தினான்.

பனி சொட்டத் தொடங்கி விட்டது. அவனுக்குச் சிலிர்த்து மரத்து விட்டது போலத் தோன்றிற்று.

"சே! இந்தக் குளிரிலும் எப்படித்தான் அடித்துப் போட்டது போலத் தூங்குகிறாளோ?" என்று வெறுப்புடன் முனகிய அவன், "ஏய் ஏய்! எழுந்திருடி!" என்று கத்தினான்.

"உம் ... ஏன்க? என்னா பண்றீங்க?" அவள்தலையைச் சொறிந்து கொண்டாள்.

"உம். பண்ணுது பானையும் சட்டியும். எருமை மாடு மாதிரி தூங்கிறியே. உனக்குக் குளிரலே? மேலே பனி

கொட்டுது. சொரணை இல்லாமே தூங்குறியே! இந்தாடி! இந்தப் புடைவையைப் போர்த்திக்கிட்டுத் தூங்கு!'' அவன் அந்தப் புடைவையை உதறி அவள் மீது போர்த்திவிடச் சென்றான்.

''ஏதுங்க பொடவை? பொட்டிக்குள்ளே இருந்ததா?''

''ஆமாம்டி! குளிருக்கு இல்லாமே பொட்டிக்குள்ளே எதுக்கடி பொடவை? போர்த்திக்க.''

''ஐயையோ! அதையா எடுத்திங்க?''

''வேறே என்னா இருக்கு?''

''இருக்கிற அந்த நல்ல பொடவையையும் ஏங்க போட்டு வீணாக்குறீங்க? எங்காவது போனா வந்தா இருக்கட்டும்னுதானே வைச்சிருக்கேன்?''

''எங்கேடி போறே சீமைக்கு? போனா வந்தா வைச்சிருக்கிறளாம். அப்படி மிஞ்சி மிஞ்சிப் போனா சினிமாவுக்கு போவே. போர்த்திக்கடி புடைவையை!''

''அதுக்குத்தான் சொல்லுங்க. இப்போ ஏன் இதைப் போட்டுக் கசக்கணும்?''

''நீ கசக்க வேணாம்; போத்திக்க.''

''எனக்குக் குளிரிலேங்க. நீங்க வேணுமானா போர்த்திக்கிட்டுக் காலையிலே மடிச்சு வைச்சுடுங்க.''

''எனக்கு நான் கட்டியிருக்கிற வேட்டி இருக்கு. அதையே போர்த்திக்கிறேன். நீ இதைப் போர்த்திக்க.''

''எனக்கு வேணாம். நீங்க போர்த்திக் கொள்ளுங்க. உங்களுக்குத்தான் குளிர் தாங்காது.''

அவனுக்குச் சினம் மூண்டுவிட்டது.

"சரி எக்கேடாவது கெட்டுப்போடி! சொன்னால் தான் நீ கேட்கமாட்டியே."

எரிச்சலுடன் மீண்டும் பெட்டிகளின் மீது படுத்துக் கொண்ட அவன் அந்தப் புடைவையை விரித்துவிட்டுப் போர்த்திக் கொண்டான். குளிருக்கு அடக்கமாக இருந்தது. தலைமாட்டில் இருந்த லாந்தரைச் சிறியதாக் கினான். மீண்டும் தூங்குவதற்கு முயற்சிசெய்தான்.

இவள் எப்படித்தான் இந்தக் குளிரிலும் இப்படித் தூங்குகிறாளோ என்ற எண்ணக் கவலையிலேயே அவனுக்குத் தூக்கம் வரவில்லை. மெல்ல எழுந்தான். தன்மீது போர்த்திக் கொண்டிருந்த புடைவையை எடுத்துக் கொண்டு அவளருகில் சென்றான். ஓசைப் படாமல், அவளே அறியாதபடி அந்தப் புடைவையால் அவளுக்கு முழுவதும் போர்த்தி விட்டான். இப்பொழுது அவனுக்கு நிம்மதி.

தொலைவில் ஏதோ சத்தம் கேட்டது. தொடர்ந்து நாய் ஒன்று குரைத்தது. அவன் பழையபடி வேட்டியைப் போர்த்திக் கொண்டு படுத்தான்.

மூன்றாவது பையன் புரண்டு படுத்தான். அவனுக்குப் போர்த்தி விட்டிருந்த சிருடைக்கான துணி விலகிவிட்டது. முதற் பையனின் போர்வை முழுவதும் பெண்ணின் மேல் சுற்றிக் கொண்டு விட்டது.

தருமுவுக்கு எதையும் பொறுத்துக் கொள்ள முடியாது. குழந்தைகள் பனியில் கிடக்கிறார்களே! அவன் எழுந்து சென்று போர்த்தி விட்டான். மூன்றாவது பையன், "அப்பா!" என்றான்.

"ஏன்டா! தூங்கலேயா?"

"குளிருதப்பா!"

"அதான் போர்த்தி விட்டேனே?"

"இன்னும் குளிருதப்பா!"

அவனுக்கு உண்மையிலேயே நடுங்கியது. காய்ச்சல் வந்து விட்டதோ?

அவன் தொட்டுப் பார்த்தான். கதகதவென்று இருந்தது. காய்ச்சல் வந்தாலும் வந்துவிடும்.

"எப்போப்பா வூடு கட்டப்போறே?"

"நாளைக்குக் கட்டிடுறேன்'பா. நீ தூங்கு. கட்ட முடியாட்டி அஞ்சு ரூபாய் வாடகை கொடுத்தாவது ஒரு பத்து நாளைக்கு எங்கேயாவது குடி இருந்துக்குவோம்!"

மகனுக்கு அது புரிகிறதோ இல்லையோ அவனுக்குத் தெரியாது. ஆனால், அப்படித் தனக்குத் தானே சொல்லிக் கொள்வதில்கூட ஓர் ஆறுதல்.

"குளிருதுப்பா!"

"இன்னுமாடா குளிருது?"

"ரொம்பக் குளிருதுப்பா!"

"சரி இரு. என் வேட்டியையும் போர்த்தி விடறேன்,"
"சீக்கிரம் போர்த்தி விடப்பா"

தான் கட்டியிருந்த வேட்டியை தனக்குப் போர்வை யாக்கியிருந்தான் தருமு. அதையே இப்பொழுது மகனுக்குப் போர்த்தி விட்டான்.

"போதுமா?"

"உம்..."

திரும்பச் சென்று பெட்டியின்மேல் படுத்துக் கொள்ளா மல் மகனுக்கு அருகிலேயே காலைக் கட்டிக் கொண்டு உட்

கார்ந்திருந்தான். வானத்தை அண்ணாந்து பார்த்தான். எப்போது விடியுமோ? பனியாகவா கொட்டுகிறது? மழை போல அல்லவா பொழிகிறது? மேலே சாக்குப் படுதா தெப்பமாக நனைந்து விட்டது. வெறும் 'அன்டர்வேருடன்' எவ்வளவு நேரம் இப்படியே உட்கார்ந்திருப்பது?

மகனுக்குப் பக்கத்திலேயே துண்டை விரித்துப் போட்டு சுருண்டு கொண்டான் அவன். அப்படியே பையனைப் போர்வையோடு அணைத்துக் கொண்டாலும் கொஞ்சம் குளிர் தாங்கும். ஆனால், போர்த்திக் கொள்ளாமல் அவனுக்கு வெடவெடவென்று நடுங்கிற்று. இந்தப் பிள்ளைகள் எல்லாம் எப்படித்தான் குளிரைத் தாங்கிக் கொண்டு —

அவன் எப்பொழுது தூங்கினானோ தெரியவில்லை. சிறிது நேரந்தான் கண்ணை அசத்தியிருக்கும். ஏனென்றால் அப்பொழுதும் பொழுது விடிந்திருக்கவில்லை. ஆனால் விடியற்காலை முதல் 'ஷிப்டு'க்கான சங்கு ஊதி ஓய்ந்தது. அப்பொழுது தான் விழித்துக் கொண்டான் போலும். அவன் மேலே ஏதோ போர்த்தப் பட்டிருந்தது. அதனால் தான் குளிர் அதிகமாகத் தெரியவில்லை. போர்த்திக் கொள்ள ஏது துணி?

இழுத்துப் பார்த்தான். புடவை அது. அவனுடைய மனைவிக்கு அவன் போர்த்தி விட்டிருந்தது. எப்படி வந்தது? எழுந்து பார்த்தான். அவள் போர்வையின்றி முன்போலவே படுத்திருந்தாள். அவள் தான் போர்த்தி யிருக்கிறாள்—வேலையற்றவள்!

முணுமுணுத்தவாறே மீண்டும் புடைவையை இழுத்துப் போர்த்திக் கொண்டு படுத்தான்.

சற்று நேரத்தில் பொழுது புலர்ந்தது அவனுக்குத் தெரியாது.

# மகிழம்பூ

சில்லென்ற உணர்வு நெஞ்சத்தில் ஊடுருவியது; திடுக்கிட்டுக் கண் விழித்தான் அவன்.

குளிர் காலத்தில் புல்வெளியில் துளித்திருக்கும் முத்து முத்தான பனி நீர் போல, தன் முகத்தில் நீர்த்துளிகளை உணர்ந்தான். அழுக்கேறிய வலிய கைகளால் முகத்தைத் துடைத்துக் கொண்டே 'யாரது?' என்று அதட்டியபடி எழுந்து உட்கார்ந்தான்.

சற்று முன்தான் களத்தில் வேலையை முடித்துக் கொண்டு வைக்கோல் போர் அருகில் இருந்த வைக்கோல் கூண்டிற்குள் 'அப்பாடா' என்று அவன் சாய்ந்தான். அப்போது மாலைக் கதிரவன் செந்தூரக் குழம்பில் மூழ்கிக் களித்துக் கொண்டிருந்தான். இப்போது கண் விழித்ததும், அரை வட்ட உருவில் வளர் பிறையைக் கண்டான். நிலவொளியைத்தழுவிக் குளிர்ந்த தரை போலவே அவன் மனமும் குளிர்ந்தது. உழைத்து ஓய்ந்திருந்தால் உடலில் வேதனை படர்ந்திருந்தது.

"தில்லை!"

எல்லை மீறிய ஆர்வத்தில் அவன் கத்தி விட்டான். 'கண்ணாமூச்சி விளையாட்டு' ஆடிய இன்பம்; அந்த உருவைக் கண்டுபிடித்து விட்டதில் அவ்வளவு மகிழ்ச்சி அவனுக்கு!

புன்னகை பொங்க அவன் எதிரில் தோன்றினாள் அவள். நிலவில் திளைத்து நின்றுகொண்டிருந்த அவளைத் தன் ஆசை விழிகளால் கவ்வுவது போல நோக்கினான்.

அன்பின் எல்லைக் கோட்டில் பெண்ணழகின் நாணம் பிறக்கிறது போலும்! கூண்டு நிழலில் அமர்ந்திருந்த அவனுடைய கண்கள் அவளுக்கு எவ்வாறு தெரிந்தனவோ? அவள் தன் பார்வையைத் தாழ்த்திக் கொண்டாள். தலையில் இருந்த சிறிய கூடையைக் கீழே இறக்கி வைத்தாள்.

"உண்மையா தூங்கி யிருந்தீங்களா, அத்தான்? கண்ணை மூடிக்கிட்டு, பாசாங்கு செய்யறதாயில்ல நினைச்சேன்!" என்றாள் அவள். முகத்தில் தண்ணீர் தெளித்து எழுப்பியது குற்றம் என்பதை அவள் குரலில் இழைந்த மென்மை மறைமுகமாகக் கூறியது.

"நீ பன்னீர் தெளிச்சபோது விழிச்சுக்கிட்டுதான் இருந்தேன், தில்லை! கையும் களவுமாக உன்னைப் பிடிக்கிறதற்குள்ளே நீ ஓடி ஒளிஞ்சுட்டே!" என்றான்.

"புறப்பட ரொம்ப நேரமாயிடுச்சு, அடுத்த வீட்டுக் கைக் குழந்தைக்குக் காய்ச்சல். பாவம், அந்தப்பொண்ணு தனியா துன்பப்பட்டுக் கொண்டிருந்திருச்சு. நான்தான் மருந்து கொடுத்து அழாமல் தூங்கவைச்சேன்." அவள் பேசிக்கொண்டே கிண்ணியில் சோறு பரிமாறினாள்.

"ஏன், வைத்தியரிடம் காட்டலையா?" என்று அவன் வினவினான்.

"வைத்தியர் கொடுத்த மருந்துதான்! நாளைக்குப் பார்த்ததுக்கப்பாலே நகரத்து டாக்டர் கிட்டே போய்ப் பார்க்கலாம்னு அவள் கிட்டே சொல்லியிருக்கேன். அவள் தனியாப் போகப்பயப்படறா. நீங்களும் துணைக்குப் போயிட்டு வாங்க."

"அவன் - முத்து எங்கே?"

"அவரு இருந்தா நீங்க ஏன் போகணும், அத்தான்? அந்த மனுசன் மாடு வாங்க சந்தைக்குப் போனவருதான், ரெண்டுநாளாச்சு திரும்பலே. சரி கதை கேட்டுக்கிட்டே உட்கார்ந்திட்டீங்களே? எழுந்திருச்சு கையலம்புங்க."

அவனுக்கு நல்ல பசி. 'விறுவிறு' என்று உண்டான். தேவை அறிந்து அவள் பரிமாறினாள். அவன் பசி கரைந்தது. "நீயும் சாப்பிடு, தில்லை!" என்றான்.

"எனக்கு வீட்டிலே எடுத்து வைச்சிருக்கேன். நீங்க சாப்பிடுங்க," என்றாள் அவள்.

"நான் உனக்கு எத்தனை தடவை சொல்றது? சாப்பிட்டு விட்டு இங்கே வா. இல்லா விட்டால் என்கூடச் சேர்ந்து சாப்பிடு!"

"ஆமாம். நீங்க புதுப்புதுப் பழக்கமெல்லாம் செய்விங்க; இன்னும் கொஞ்சம் சோறு வச்சுக்கிடுங்க, அத்தான்."

"எனக்கு போதும்; இருப்பதை நீ இங்கேயே சாப்பிடு."

"அந்தக் குழந்தை நைநையின்னு கத்திக்கொண்டிருக்கும். அத்தான், நான் வீட்டுக்குப் போய்த்தான் சாப்பிடணும்."

அவன் கேலியுடன் நகைத்தான்.

"ஏன் சிரிக்கிறீங்களாம்?" என்று முகத்தைக் கோணிக் கொண்டாள் அவள்.

"இல்லே, எனக்கு ஒன்று நினைவுக்கு வந்திச்சு".

"என்னாது?"

"ஒரு தடவை உன் அண்ணன் ஊருக்கு ரயில் ஏறிப் போனோமே?"

"ஆமாம்".

"உனக்கு நினைவிருக்கா? முழுக்கால் சட்டை, முழுக் கைச் சட்டை எல்லாம் போட்ட ஒரு ஆள் ஒரு வயசுக் குழந்தை ஒன்றைக் கையிலே வைச்சுக்கிட்டு அந்தப் பெரிய ஸ்டேஷன்லே நின்றாரே?"

"ஆமா, ஆமா, நிறைய நகை போட்டுக்கிட்டு பட்டுச் சேலை, பட்டு ரவிக்கையோட ஒரு பெண்ணு ரயில் வண்டிக் குள்ளே உட்கார்ந்தா. வண்டி புறப்படுற சமயத்திலே அவருகிட்டேயும் குழந்தைகிட்டேயும் கொஞ்சிப் பேசிட்டு 'வரே'ன்னு சொன்னாள். அந்தக் குழந்தை கூட அம்மா அம்மான்னு அழுது தீர்த்திச்சு; பரிதாபமா இருந்திச்சு!"

"அதைத்தான் சொல்லவாரேன்; நடக்கக்கூடத் தெரியாத பிள்ளையைக் கணவனிடம் விட்டுட்டு எங் கேயோ ஊருக்குப் போனாள் அந்த மகராசி. நீ என்ன டான்னா அடுத்த வீட்டுக் குழந்தையைக் கொஞ்சங் கூடப் பிரிஞ்சு இருக்க மாட்டேங்கறே? வேடிக்கை!"

"அந்தச் சவங்களுக்கு அது பழக்கம் போலேருக்கு. எதிர்த்த வீட்டுப் பையன் கலியாணம் பண்ற வயசாச்சு. என்னமோ ஊருக்கு வேலைக்காகப் போறானாம். அந்த அம்மா என்ன அழுகை அழுதுட்டாங்க!"

"அது சரி. வேறே வெத்திலையில்லையா? இந்தச் சருகு தான் அகப்பட்டுதா?"

"இது தேவலாமா, பாருங்க!"

வாய் சிவக்க அவள் இருந்தாள்; பல் சிவக்க அவன் இருந்தான்!

மாமரத்திலிருந்து ஆந்தை ஒன்று அலறியது.

“ஆகா, என்ன இனிமையான குரல்! இன்னும் கொஞ்சம் பாடம்மா. நீங்க ரெண்டு பேரும் மரத்திலே பாடுறீங்க; நாங்க ரெண்டு பேரும் இந்த நிலவு வெளிச்சத்தையும் களத்து மேட்டையும் மறந்துட்டு ஏதோ ஊர்க் கதை பேசி விண்பொழுது போக்குறோம். நீங்களாவது மகிழ்ச்சியாப் பாடுங்க...ம்!” — அவன் நகைத்தான்.

“அப்பா! அது குரலைக் கேட்டாலே எனக்கு ஒரே அருவருப்பாயிருக்கு. குயில் கூவுறதைக் கேட்டது போல ‘ஆகா’ போடறீங்களே!”

“ஆந்தைன்னு அலட்சியமா நினைச்சிடக் கூடாது, தில்லை! இதனுடைய அருமையைச் சொல்றேன் கேளு. பகலிலே குயில் கூவாத போது கிளி பேசிக்கிட்டிருக்கும்; இல்லா விட்டால் மைனா மழலை பழகும். காக்கா நெல்லு பொறுக்க நம்மையே சுற்றித் திரியும். இதைப்போல வெள்ளைப்புறாவிலிருந்து பிணந்தின்னிக்கழுகு வரைக்கும் எவ்வளவோ பறவை! ஆனா, இரவில் களத்துக் காவலுக்கு எனக்குத் துணையாயிருப்பது இந்த ஆந்தைதான். ஏழைக்கு ஏழை துணை!. எப்போதாவது நான் அசந்து தூங்கி விட்டால், ஆந்தை அண்ணன் சத்தம் போடுவார். மாடு கீடு வந்தாக்கூட இரைச்சல் போட்டு என்னை எழுப்புவார். இந்த உதவிக்காக அவரை நான் புகழ வேண்டாமா, தில்லை?”

இருவரும் கலகலவெனச் சிரித்தனர்.

“நீங்க வீட்டிலே போயிசுகமா தூங்குங்களேன், அத்தான்! இங்கே நான் இருந்துக்கிடறேன்.”

“சரி, நீ இங்கே காவல் பார்த்துக்கோ. நான் சமைச்சு சோறு கொண்டுகிட்டு வாரேன்!”

“ஐயோ- நீங்க சமைச்சதை நான் சாப்பிடுறதா?”

"ஏன்? எனக்குச் சமைக்கத் தெரியாதுன்னு நினைச்சியா?"

"இல்லே. உங்களைச் சமைக்கச் சொல்லி கல்லுப் பிள்ளையாரு போல நான் உட்கார்ந்துகிட்டு சாப்பிடறது பாவம், அத்தான்!"

"நல்ல பாவத்தைக் கண்டே போ! அப்படின்னா நீ என் வேலையைச் செய்யறது மட்டும் பாவமில்லையா?"

"இல்லை அத்தான், வேடிக்கையாக—!"

"இங்கே நீ தனியா எப்படியிருப்பேயாம்?"

"வீட்லே மட்டும் தனியா இருக்கலேயோ?"

"தெருவிலே இருப்பதற்கும்?"

"தெருவிலே கூட்டத்தோட இருந்தாலும் என் மனசு தனியாகவே கிடக்குதே, அத்தான்!"

ஏதோ சரசர வென்று ஒலி கேட்டது. அவர்கள் உற்றுக்கவனித்தனர். அந்த ஓசை வைக்கோற் போருக்குப் பின்புறமிருந்து வந்தது. அவன் கையில் தடியை எடுத்துக் கொண்டு எழுந்தான்.

"நீங்க உட்காருங்க அத்தான்! நான்போய் அந்த திருட்டு மாட்டை ஓட்டி வந்து கட்டிப்போடேறேன்."

"ஏன் தில்லை, நமக்குன்னு ஒரு மகன் இருந்தா மாட்டை ஓட்டுவதற்கு ஓடுவான். மடையை வெட்டி விடுவதற்குப் போவான்" - அவன் பேச்சில் ஆசை கொப்புளித்தது. அங்கே குவிந்து கிடந்த வைக்கோல் கட்டின்மேல் சுழற்சியுடன் அமர்ந்து பெருமிதப்பார்வை யொன்றை அவள்மேல் வீசினான்.

அவன் எதிரில் உட்கார்ந்த அவள், "உங்களுக்கு மாடு ஓட்ட மட்டும் தான் மகன் வேணுமா...? பண்ணையாரு மகன் படிக்கிறது போல படிக்க வைக்கணுங்கறேன். நாம துன்பப்பட்டாலும், அவனாவது பெரிய சர்க்கார் வேலைக்குப் போயி..." என்றாள்.

'அப்படி யென்றால் பயிர்த் தொழில் செய்வது இழிவா? பயிர்த்தொழிலை நம்பி வாழ்க்கை நடத்தியதால் தான் என்றும் ஏழையாகவே இருக்க வேண்டியதாய் விட்டதா? இந்த நிலை நீடித்துக் கொண்டே சென்றால் சமுதாயத்தின் வளர்ச்சி என்னவாகும்?' என்ற சிந்தனையில் அவன்மனம் புகவில்லை. ஏதோ சிரித்தான்.

"முதலில் மகன் பிறக்கட்டும், பிறகு பார்த்துக் கொள்ளலாம்," என்று கூறிச் சிரித்தான்.

அவள், "இன்னும் நாலைஞ்சு மாசம் தானே அத்தான்!" என்று கடைக் கண்ணால் அவனைப் பார்த்து உவகைக் கொண்டாள். அந்த உவகையைமனத்தால் பருகி அவன் மகிழ்ந்தான்.

"சரி நேரமாய்க் கொண்டேயிருக்குது இல்லை. சீக்கிரம் புறப்படு. இவ்வளவு நேரம் இங்கே நீ இருக்கக் கூடாது!" என்றான் வேலன் கவலையுடன்.

அதை அவள் புரிந்து கொண்டவள் போலக் கூடையைத் தூக்கி இடையில் வைத்துக் கொண்டு புறப்பட நின்றாள்.

"நீங்க ஏன் அத்தான் வீணாக வாரீங்க? நான் போயிடுவேன்; திரும்புங்க," என்றாள் அவள்.

"அந்த வாய்க்கால் தாண்டி உன்னைக் கொண்டு வந்து விடுகிறேன், இல்லை" என்று அவன் அவளைத் தொடர்ந்தான்.

நிலா வெளிச்சத்தில் விளங்கிய ஒற்றையடிப் பாதையில் அவர்கள் நடந்து கொண்டிருந்தார்கள், சில ஆண்டுகளாக இல்லை, வழி வழியாக முடிவில்லாமல் அதே பாதையில் நடந்து அவர்கள் பழக்கப்பட்டிருந்தார்கள். பக்கத்தில் வளர்ந்து பெருகி விட்ட முட்செடிகள் அவர்களுக்குத் தெரியாது. பெரிய மரங்களை எட்டி நின்று பார்த்திருக்கிறார்கள்; கனி கொழுத்து இருந்தாலும் அவை யாருக்கோ சொந்தம்! அதைப் பற்றி அவர்கள் கவலைப் பட்டதில்லை. கவலைப்படநேரமில்லை. கதிரவன் போல் கடமையைச் செய்து ஓய்வு பெறும் பகல் பொழுதுகள் இன்ப நிலாப் பொழுதான இரவுகள் அவர்களுக்கு எத்தனையோ!

அந்தப் பாதையில் இருந்த மகிழ மரத்திலிருந்து நட்சத்திரங்கள் சிந்திக் கிடப்பன போல சின்னஞ்சிறு பூக்கள் உதிர்ந்துகிடந்தன. அவன் சில மலர்களைப் பொறுக்கி அவளது கூந்தலில் செருகினான்.

அவள் அதைச் சரிப்படுத்திக் கொண்டு அவனைத் திரும்பிப் பார்த்தாள். அவன் அவள் தோள் மேல் கை வைத்து நடந்து கொண்டிருந்தான். ●

---

சிறுகதையில் கலையின் தூயவடிவத்தைப் பெரும்பாலும் அடைந்திட முடியும் அமைப்பில் அது கவிதைக்கு நெருக்கமானது. முழுமையான கலைவடிவைப் பெறுகின்ற வரையில் தேவையற்ற பகுதிகளை ஒதுக்கிவிட்டு அதனைச் செதுக்கிக் கொண்டே போகலாம்.

— எம். டி. வாசுதேவன் நாயர்

தன்னால் இயன்றதை எல்லாம் எழுதுவதற்காக இல்லை ஒரு எழுத்தாளன்; ஆனால் எதை எழுத வேண்டுமோ அதை எழுதுவதற்காக உள்ளவன் அவன்.

— ஜான் டிரைடன்

---

# பாடம்

உயர்ந்து பரந்து நின்ற மாளிகைக்கும் சுற்று மதிலுக்கும் இடையில் அழகை அள்ளி வீசிய தோட்டப் பகுதியில் சாமிநாதன் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தான் — தனிப் பயிற்சி.

பாடம் சொல்லிக் கொண்டவள் — மாளிகைக்கும் சுற்று மதிலுக்கும் தோட்டத்துக்கும், ஆசிரியர் சாமிநாதனை அமர்த்திக் கொண்ட வகையில் அவனுக்கும் சேர்த்து முதலாளியாக இருந்தவரின் ஒரே வாரிசு — குழந்தை இராஜேஸ்வரி.

"ஏழில் எட்டு போகுமா?"

சாமிநாதனின் குரல் அந்த மாளிகையில் கடைசிக் கட்டின் சமையல் அறையில் மேற்பார்வையிட்டுக் கொண்டிருந்த வீட்டின் தலைவி மீனாட்சியம்மாளின் காதில் போய் மோத வேண்டும்.

அப்படி மோதினால்தான் அவன் பாடம் நடத்திக் கொண்டிருப்பது தெரியும். தெரிய வேண்டும் என்பதற் காகவே அப்படிக் கத்தும்படி உத்தரவு!

"உம். சொல்லு. ஏழில் எட்டு போகுமா?"

"போகாது சார்!"

"என்ன செய்யணும்?"

"கடன் வாங்கணும்"

"வாங்கு!"

"வாங்கிட்டேன்."

"இப்போது எவ்வளவு?"

"பதினேழு."

"பதினேழில் எட்டு போனால்?"

"ஒன்பது."

"அப்புறம்?"

"பாக்கி எட்டு."

"எட்டில் ஒன்பது போகுமா?"

"போகாது."

"என்ன செய்யணும்?"

"கடன் வாங்கணும்!"

"உம் வாங்கு கடனை!... வாங்கினியா?"

"வாங்கினேன் சார்!"

சாமிநாதன் வாயிற்படியைப் பதினைந்தாவது முறையாகப் பார்த்தான்.

மீனாட்சியம்மாள் இந்த நேரத்திற்குள் வந்துவிடுவாள். இன்று ஏனோ காணோம்.

"கடன் வாங்கிக் கழித்தல் போட்டுட்டேன் சார்!" என்றாள் இராஜேஸ்வரி.

"கடனை வாங்கிக் கழித்தலைப் போட்டியா? போடு போடு. உனக்கும் எனக்கும் வித்தியாசமே இல்லை. நீ கடனை வாங்கிக் கழித்தலைப் போடு. நான் கடனை வாங்கியே காலத்தைக் கழிக்கிறேன்!" என்ற சாமிநாதன், "ஏன் பாப்பா, அம்மா வீட்டிலே இல்லையா?" என்று கேட்டான் மெல்ல.

பாடத்தை விட்டு விட்டு வேறே. செய்தி பேசியதில் அந்தப் 'பாப்பா' வுக்கு மெத்த மகிழ்ச்சி.

"ஓ! அம்மா இருக்கிறாங்களே. போய்க் கூட்டியா ரட்டுமா, சார்?"

"வேண்டாம் வேண்டாம். நீ பாடத்தைக் கவனி. கணக்குப் போட்டது போதும். இங்கிலீஷ் புத்தகத்தை எடு!" என்று சொல்லிக் கொண்டே வாயிற்படியை நோக்கிய சாமிநாதனின் கண்களில் மீனாட்சியம்மாளின் வஞ்சகமில்லாமல் வளர்ந்த உடம்பில் ஒரு பகுதி தட்டு பட்டது.

வீட்டுவேலை முடிந்துவிட்டது போலிருக்கிறது. இனி அடுத்த வேலை அவளுக்கு அவனிடம்தான்.

"என்ன பாடம் நடத்தினீர்? எனக்கு ஒன்றும் காதில் விழவில்லையே? இராஜேஸ்வரி இன்னமும் அவள் கிளாசில் கடைசி தானாம். கணக்குச் சொல்லிக் கொடுத்தீரா? குழந்தையை அதட்டாதீர். அன்பாகப் பொறுமையாகச் சொல்லிக் கொடும்!" படபடவென்று பல கட்டளைகள் பறந்து வந்து தாக்கின சாமிநாதனை.

குரலைத் தாழ்த்திக் கொண்டான் சாமிநாதன். இனிமையாக மாற்றிக் கொண்டான்.

"ஏம்மா கண்ணு! இன்றைக்கு எத்தனையாவது பாடம் நடத்தணும்? பதினோராவது பாடம் இல்லை? அட! ஒரு வாரத்துக்குள்ளே ஐந்து பாடம் படிச்சுட்டியே! ஒரே மாசத்திலே உனக்கு எல்லாமே தலைகீழ்ப்பாடம் ஆகிவிடும்!... 'இன்டலிஜண்ட்' குழந்தையாச்சே!... உம்... படிம்மா கண்ணு!" என்று தொடங்கினான்.

மீனாட்சியம்மாள் அவர்கள் எதிரே சிமெண்டு பலகையில் வந்து அமர்ந்து கொண்டாள். வீட்டை விட்டுத்

தோட்டப்புறம் வந்து அவர்கள் எதிரில் உட்காருவது என்றால் சும்மா இருக்கிறதா? கொஞ்ச நேரமாவது மூச்சு வாங்கி இளைப்பாற வேண்டும்.

சில நிமிடங்கள் கழித்து, "என்னய்யா? நேற்றைக்கு 'டிக்காஷன்' போட்டுப் பார்த்தேன். ஒரு வரிக்கு ஒரு தப்பு பண்றாளே குழந்தை!" என்றாள் மீனாட்சியம்மாள்.

"டிக்காஷன் இல்லேம்மா! டிக்டேஷன்!" என்று அவளைத் திருத்திய இராஜேஸ்வரி, "அம்மா ஒண்ணும் போடலை, சார். சும்மா சொல்றாங்க?" என்றாள்.

அது பொய்யோ மெய்யோ அதைப் பற்றிக் கவலைப் படவில்லை சாமிநாதன். மீனாட்சியம்மாள் 'டிக்டேஷன்' போட்டாலும் சரி, 'டிக்காஷன் இறக்கினாலும் சரி. அவன் தன்னுடைய காரியத்தை நிறைவேற்றிக் கொள்ள முனைந்தான்.

"இப்போது தான் பாப்பாகிட்டே கேட்டேன் அம்மா இருக்கிறாங்களான்னு..." என்று இழுத்தான் அவன்.

"ஏன்? என்ன சேதி?" என்ற குறிப்போடு அவனை ஏறிட்டுப் பார்த்தாள் மீனாட்சியம்மாள்.

"வந்து... ஒரு பத்து ரூபாய் கொடுங்கம்மா... சம்பளம் வாங்கிக் கொடுத்துடறேன். இல்லே, 'டியூஷன்' சம்பளத்திலே இருந்தாலும் இருக்கட்டும். வீட்டிலே ஒரு பிடி அரிசி இல்லை. கடைசி தேதி சமயம் கையில் காசு இல்லை. அதே கவலை தான். அம்மாவைக் கேட்டால் தட்டாமல் கொடுப்பாங்கன்னு 'வீட்டிலே'யும் சொன்னாள்..." சொல்ல வேண்டியதை விடுவிடு என்று சொல்லி முடித்தான். எங்கே ஆரம்பிப்பதற்கு முன்பே கையை விரித்து விடுவாளோ, உதட்டைப் பிதுக்கி விடுவாளோ என்ற அச்சம் அவனுக்கு.

மீனாட்சியம்மாள், எடுத்ததும் உணர்ச்சியைக் கொட்டி விடமாட்டாள். அவளுக்குக் கோபம் வந்தாலும் மெல்லத் தான் வரும். மகிழ்ச்சி வந்தாலும் அசைந்தாடித்தான் வரும்.

இப்பொழுது கோபம் வரவேண்டிய நேரம். இன்னும் வராததால் அவள் பேசவில்லை.

அவள் பேசாததால் சாமிநாதனே தொடர்ந்து பேசினான். "ஏது சும்மா சும்மா கடன் கேட்கிறேனே என்று அம்மா கோபித்துக் கொள்ளக்கூடாது. அம்மா மனசு வைத்தால்தான் இன்னும் ஏழெட்டு நாள் ஓடும். ஒரு பத்து ரூபாய் கொடுத்தால் போதும்..."

மீனாட்சியம்மாள் வாயைத் திறந்தாள். "என்னய்யா பண்ணச் சொல்றீர்? இது வரைக்கும் எவ்வளவு என்னிடம் வாங்கியிருக்கிறீர் தெரியுமா? நாற்பத்தைந்து ரூபாய். டியூஷன் பணம் தான் ஒரு மாதத்துக்கு முன்னாலேயே 'அட்வான்சா' வாங்கிவிடுகிறீரே? இனிமேல் பைசா கொடுக்க முடியாது. நீர் வாங்கியிருக்கிற கடனுக்குக் கணக் கைத்தீர்த்துவிட்டு நின்றுவிடும். நான்வேறே ஒரு ஆள் பார்த்துக் கொள்கிறேன். இந்தத் தெருவிலேயே ஒரு பெண் டீச்சர் வேலை பார்க்கிறாள். அவளை அமர்த்திக் கொள் கிறேன். நீர் வாங்கியிருக்கிற பணத்தை பள்ளிக் கூடத்தில் நீர் சம்பளம் வாங்கினதும் திருப்பிக் கொண்டு வந்து கொடுத்து விடும். இல்லையோ அந்தக் கணக்குத்தீரும் வரைக்கும் டியூஷன் சொல்லிக் கொடுத்துவிடும். பணம் இங்கே என்ன கொட்டியா கிடக்குது? உமக்கு ஆசை அதிகம்! பங்களாவையும் காரையும் தோட்டத்தையும் பார்த்த வுடனே எவ்வளவு வேண்டுமானாலும் கறக்கலாம்னு நினைச் சுட்டீர் போலேருக்கு?..."

அவளுக்கு இரைத்தது. அதனால் பேச்சு நின்றது.

"அதெல்லாம் ஒன்றுமில்லேம்மா. என்னுடைய வறுமை உங்ககிட்டே கேட்கச் சொல்லுது. இல்லேன்னா உங்களுடைய வாசப்படி தேடி வருவேனா? இல்லை, நீங்க பேசறதைத் தான் கேட்டுக் கொண்டு இருப்பேனா?" என்றான் சாமிநாதன் சூடுகண்டவனாக.

"ஓகோ! அத்தனை தூரம் ஆகிப்போச்சா? இவங்க அப்பா கூட என்னை இப்படி அலட்சியப்படுத்திப் பேசின தில்லை! போதுமய்யா போதும். நாளையிலிருந்து உமக்கு இங்கே வேலை இல்லை. நீர் போகலாம்!" மீனாட்சி யம்மாளின் கண்கள் மிளகாய்ப் பழமாகச் சிவந்தன. ஆத்திரத்தில் அவள் எழுந்து நின்றுவிட்டாள்.

சாமிநாதனுக்குக் குரல் தழுதழுத்து விட்டது. "அம்மா, அம்மா! நான் உங்களை ஒன்றும் அலட்சியமாகப் பேச வில்லையே! ஏதோ வறுமையைப் பற்றிச் சொன்னேன். கோபித்துக் கொள்ளாதிங்கம்மா! தப்பாயிருந்தால் மன்னிச் சுடுங்க. இனிமேல் கடன் கேட்கலே," என்றான்.

அம்மாவுக்கும் ஆசிரியருக்கும் இடையில் ஏற்பட்ட போரைக் கவனித்துக் கொண்டிருந்த குழந்தை இராஜேஸ் வரிக்கு நியாயம் புரிந்தது. "ஏம்மா, நம்ம கிட்டேதான் நிறையப் பணம் இருக்குதே? சாருக்குப் பணம் கொடும்மா பாவம், நாம் கொடுக்காட்டி யாரும்மா கொடுப்பாங்க?" என்றாள் அவள்.

"சமர்த்துக் கண்ணு!" என்று சிரித்து, குழந்தையைத் தட்டினான் சாமிநாதன். தாயின் எதிரில் குழந்தையைப் பாராட்டினால் எந்தத் தாயின் உள்ளம் தான் குளிர்ந்து போகாது? ஆனால் மீனாட்சியம்மாள் குளிர்ந்து போக வில்லை.

"சரிதான் எழுந்து வாடி! உனக்குவேறே வாத்தியார் வைச்சு நல்லா பாடம் சொல்லி வைக்கிறேன்!" என்று

இராஜேஸ்வரியின் புத்தகங்களைச் சுருட்டிக் கொண்டு அவளையும் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு நடந்தாள் மீனாட்சியம்மாள்.

சாமிநாதன் எழுந்துநின்றான். கண்ணீர் முட்டிய அவன் கண்களுக்கு மீனாட்சியம்மாள் இராஜேஸ்வரியை இழுத்துக் கொண்டு சென்ற காட்சி மங்கலாகத் தெரிந்தது. கைகால்கள் வெலவெலத்து நடுங்கின. என்ன செய்வது? என்ன செய்யலாம்? என்னதான் செய்ய முடியும்? அவனுக்கு நாக்கு அசையவில்லை.

நெடுநேரம் நின்று கொண்டிருந்தான். வீட்டுக்குள் சென்றவர்கள் வெளியில் எட்டிப் பார்க்கவே இல்லை. தொங்கப் போட்ட தலையை நிமிராமல் பங்களாவை விட்டு வெளியேறினான்.

மறுநாள். பள்ளிக்கூட நேரம். இராஜேஸ்வரியை எதிர் பார்த்துக் கொண்டிருந்தான் சாமிநாதன். "எங்க அம்மா உங்களை டியூஷனுக்கு வரச் சொன்னாங்க சார்! பணம் கொடுத்து அனுப்பியிருக்காங்க வேலைக்காரிக்கிட்டே!" என்று அவள் சொல்வது போல ஒரு பொய்த் தோற்றம்.

அவன் என்ன தவறு செய்து விட்டான்? கடன் கேட்டது ஒரு தவறா? மீனாட்சியம்மாளின் குத்தலான பேச்சு அவனுக்குத் தலைக்குனிவை உண்டாக்கவில்லையா? மான அவமானம் அவனுக்கு மட்டும் சொந்தமில்லையா?...

"சார்!" என்று ஓடி வந்தாள் இராஜேஸ்வரி.

முத்துமுத்து மணிகளால் அழகாகச் செய்யப்பட்ட பணப்பை ஒன்றை அவனிடம் எடுத்துக் கொடுத்தாள்!

திடுக்கிட்டான் சாமிநாதன்.

"என்ன இது? ஏது பணம்? எவ்வளவு இருக்கு? அப்பா கொடுத்தாங்களா?" கேட்டுக்கொண்டே பையைத் திறந்து பார்த்தான். ஐயோ!

"அப்பா கொடுக்கலே சார்! அம்மா வைச்சிருந்தாங்க. நான் எடுத்துகிட்டு வந்துட்டேன். நீங்க எடுத்துக் கொள்ளுங்க சார்! அம்மா கேட்டால் நான் உங்ககிட்டே கொடுக்கலேன்னு சொல்லிடறேன்!" என்றாள் இராஜேஸ்வரி.

சாமிநாதனின் கண்கள் வியப்பிலும் அச்சத்திலும் விரிந்தன. அவன் நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. பணப் பையில் நூறு ரூபாய் நோட்டுக்களும் பத்துரூபாய் நோட்டுக்களுமாக ஐந்நூறு ரூபாய்க்கு மேல் இருந்தது. யாருக்கும் தெரியாமல் இதை...

ஒரே வினாடியில் அவன் எண்ணம் மாறியது. நாற்காலியை விட்டு எழுந்தான் சாமிநாதன். பணப் பையை எடுத்துக் கொண்டான். இராஜேஸ்வரியை அழைத்துக்கொண்டு தலைமை ஆசிரியரிடம் சென்றான். செய்தியைச் சொல்லி, அனுமதி பெற்றுக் கொண்டு மீனாட்சியம்மாளைச் சந்திக்கப் புறப்பட்டான்.

பள்ளிக்கூடம் சென்ற மகள் "அம்மா!" என்று அழைத்துக்கொண்டு நேரமில்லாத நேரத்தில் வீட்டுக்குள் வந்ததைக் கண்ட மீனாட்சியம்மாளுக்குக் காரணம் விளங்க வில்லை.

முந்திக் கொண்டான் சாமிநாதன்.

"அம்மா! உங்க மகள் செய்திருக்கிற காரியத்தைப் பார்த்திங்களா? நான் உங்களிடம் கடன் கேட்டேன். நீங்கள் சண்டை போட்டு அனுப்பிவிட்டிங்களா? உங்க

கிட்டே பணம் கேட்டிருக்கு பாப்பா. நீங்க கொடுக்கலே போலிருக்கு. அதனாலே உங்களுக்கு தெரியாமே...''

பணப்பையை அவளிடம் நீட்டினான். உள்ளே பெரிய பெரிய நோட்டுகள் பல்லை இளித்தன.

மீனாட்சியம்மாள் அவைகளை எண்ணிச் சரிபார்த்துக் கொண்டிருந்தபோது அவன் கடகடவென்று ஒப்பித்தான். ''சரியா எண்ணிப் பார்த்துக் கொள்ளுங்கள். ஒரு காசு கூடக் குறையாது. நான் ஏழைதான் என்றாலும் பிறருடைய காசுக்கு ஆசைப்பட மாட்டேம்மா! நீங்க சொன்னீங்களே 'பங்களாவையும் காரையும் பார்த்த உடனே எனக்கு ஆசை அதிகமாயிட்டுது. முடிந்தவரையில் பணம் பிடுங்கப் பார்க்கிறேன்' என்று. அதைப்போல ஆசை எனக்கில்லை. உங்களுடைய பெரிய மனசு உதவி செய்யும் என்கிற நம்பிக்கை இன்னமும் எனக்கு இருக்கிறது.''

சாமிநாதன் தயங்கி நின்றான்.

மீனாட்சியம்மாள், ''சரி, போயிட்டு வாரும்! பணம் சரியாக இருக்கு. நல்ல காலம் நீரே கொண்டு வந்து கொடுத்திரே. நாங்க போலீசுக்குப் போய் அவங்க உமக்குத் தொந்தரவு கொடுப்பதற்கெல்லாம் இடம் கொடுக்காமல் நல்ல விதமாக நடந்து கொண்டுவிட்டீர்!'' என்றவள், ''வாம்மா கண்ணு! கொஞ்சம் பால் ரொட்டி சாப்பிட்டு விட்டு மறுபடி நீ பள்ளிக்கூடம் போகலாம்,'' என்று குழந்தையை அழைத்தாள்.

''என்னம்மா... வந்து... நீங்க...... எனக்கு...'' சாமி நாதனின் கூச்சம் அவன் நெஞ்சை அடைத்தது.

''என்ன வேணும் உமக்கு? பணத்தை நாணயமாகத் திருப்பிக் கொண்டுவந்து கொடுத்ததற்குப் பத்து இருபது பரிசு எதிர்பார்க்கிறீரா என்ன? நல்லாயிருக்கு! ஏதோ

சின்ன குழந்தை தெரியாமே கொண்டு வந்து கொடுத்து விட்டது உம்மிடம். அதற்காக? நான்கூட, சின்னப் பிள்ளையாக இருந்தபோது இப்படித்தான் வீட்டில் இருக்கும் பண்டங்களை ஊராருக்கு அள்ளிக் கொடுப்பேன். அவங்க திருப்பிக் கொண்டுவந்து எங்க அம்மாகிட்டே கொடுத்துவிட்டுப் போவாங்க. சின்னக்குழந்தை தானே இராஜேஸ்வரி? பெரியவளா ஆகிவிட்டால் திருந்திவிடுவாள். ஒரு பள்ளிக்கூடத்து வாத்தியார், 'திருடாதே, பொய் சொல்லாதே' என்று பாடம் சொல்லிக் கொடுக்கிறவர், குழந்தைகள் தெரியாத்தனமா கொண்டுவந்து கொடுத்தால் அதைப் பெற்றவர்களிடம் கொடுக்க வேண்டியது கடமை தானே? அதற்காகப் பரிசு கிடைக்கும் என்று எதிர் பார்க்கலாமா? அழகாய்த் தானிருக்கிறது!'' என்று கூறிக் கொண்டே குழந்தை இராஜேஸ்வரியுடன் உள்ளே சென்று மறைந்தாள் மீனாட்சியம்மாள்.

சாமிநாதனின் கண்களில் இப்பொழுது ஏக்கம் இல்லை. கண்ணீர்தான் முட்டியது. ●

---

என்னுடைய மக்கள் பேசுகிற பாஷையில் அவர்கள் சிந்திக்கிற மனோ இயலில், அவர்கள் வசிக்கிற சூழ்நிலையில் அமைய வேண்டும் என்னுடைய சிருஷ்டிகள் என்று நினைக்கிறவன் நான்.

கதைக் கருவின் வகைகளைக் கேள்விப்பட்டது, பார்த்தது, அனுபவிப்பது, கற்பனை என்றும் 'அனுபவித்தது' என்ற அடிப்படையிலான கருவே சிறந்தது...

தூங்குகிற போது, நம்முடைய மூளை உறுப்புக்களில் சில தூங்காமல் கனவை எழுப்பிக் கொண்டிருப்பது போல், ஒரு எழுத்தாளன் விழித்துக் கொண்டிருக்கும் போதும் அவனுள் சிலது தூங்கிக் கொண்டு ஒருவகையான கனவு களை எழுப்பிக் கொண்டேயிருக்கும்.

**கி. ராஜநாராயணன்**

---

# நண்பன் வீட்டு விருந்து

அது தங்களுடைய வீடுதானா என்னும் ஐயம் சிவப்பிரகாசத்துக்கு வந்துவிட்டது, வீட்டுக்குள் நுழையும் போதே.

குழந்தைகளின் கூச்சல், இளைய பையனின் அழுகை, மூத்த பெண்ணுக்கும் அடுத்த பையனுக்கும் அடிபிடி பூசல் எதுவும் இல்லை. அவனுடைய குழந்தைகள் மூவர்க்கும் அம்மாவாகிய அன்பரசியின் கத்தும் குரலோசையும், யாரையாவது திரும்பத் திரும்ப வாழ்த்திவசை பொழிந்து கொண்டிருக்கும் கிள்ளை மொழியும் செவியில் வந்து பாய வில்லை. மொழிதான் பாயவில்லை என்றாலும், பாத்திரங்க ளாவது பாய்ந்து விளையாடி ஜலதரங்கம் வாசித்துக் கொண்டிருக்க வேண்டுமே?

எங்கு சென்றனரோ?

கையிலே வெறும் பை; நெஞ்சிலே வெறும் சுமை; வயிற்றிலே அரும் பசி; நண்பகல் உணவு மூன்று சப்பாத்தி யோடும் தொழிற்சாலை நண்பன் ஒருவன் பெரிய மனசு வைத்து வாங்கிக் கொடுத்த ஒரு தேநீரோடும் முடிந் திருந்தது அவனுக்கு. மாலையில் தொழிற்சாலை வேலை நேரம் முடிந்து அவன் திரும்பிக் கொண்டிருந்தபோது, வழிநெடுகப் பெரிய பெரிய உணவு விடுதிகளும் அவற்றின் உணவு வகைப் பட்டியலும் அவன் பார்வையில் குறுக்கிட்ட போது அவனுடைய வயிற்றுக் கொதிகலனிலிருந்து புறப்

பட்ட வெப்ப அழுத்த மண்டலம் அவனுடைய ஈரலைச் சுட்டு, நெஞ்சை உடைத்து, தொண்டையை விட்டு வெளி யேறிப் போகாமல் உள்ளேயே அவிந்தது. வீட்டுக்குப்போய் எதையாவது பார்த்துக் கொள்ளலாம் என்கிற ஆறுதலோடு டீசலும் கிரீசும் படிந்த தளர்ந்த அழுக்கு பேண்டின் பெல்டை ஒரு துளை இறுக்கிப் போட்டுக் கொண்டு வந்து சேர்ந்து, உள்ளே நுழைந்தால்—

"அன்பு!" இறுகிய குரலின் இளைத்த அழைப்பு.

"ஏன்? நான் இங்கேதான் இருக்கேன்!"

சமையலறை என்னும் தட்டி மறைவு முடுக்கிலிருந்து வந்தது அருமை மனைவியின் அன்பான உறுமல்.

"என்னது? யாருமேலே கோபம்?"

"இந்தச் சனியனோட மல்லுக்கு நிற்கிறேனே, பின்னே கோபம் வராமல் குதூகலமா வரும்?"

அவள் மற்போர் புரிந்து கொண்டிருப்பது தெரிந்தது கோதுமை மாவோடு.

"என்னங்க? இன்றைக்காவது அரிசி வாங்கிட்டு வந்திங்களா இல்லையா?"

மெல்லத்தான் கேட்டாள் அவள்.

ஆனால், அவன் வெறும் பையைத் தூக்கி எறிந்தான். வெளியுலகக் கோபத்தை வேறெங்கே காட்டுவான் அவன்?

"ஒன்னும் வயிற்றெரிச்சலைக் கிளப்பாதே. வேலையைப் பாரு!" என்றான் அவன் சட்டையைக் கழற்றிச் சுவர் ஆணியில் மாட்டியபடி.

"இனிமேலே என்னாலே முடியாது. நீங்களே பார்த்துக் கொள்ளுங்க—" அவள் கையைச் சொடுக்கிக் கொண்டு எழுந்து விட்டாள்.

"அன்பு! எனக்குப் பசியோ பசி! முதல்லே எதையாவது கொடு. வயிற்றுக் கொடுமையைத் தீர்த்துக்கிறேன். அப்புறம் இதெல்லாம் நானே கவனிச்சுக்கறேன்—" அவன் உட்கார்ந்து விட்டான். அவள் கொடுக்கப்போவதை உட்கார்ந்து கொண்டு சாப்பிடும் மனக்கோட்டை.

"என்ன? நீங்களும் சின்னப்பிள்ளையாட்டம்? இங்கே. கொடுக்கிறதுக்கு என்ன இருக்கு?"

"ஆமாம், எங்கே அதெல்லாம் ஒன்றையும் காணோம்? எங்கேயாவது விளையாடப் போயிருக்குதா? ஒன்றும் கீச்சு மூச்சைக் காணலேயே—"

தானும் சிரித்து அவளையும் சிரிக்க வைத்து அவள் சினத்தை ஆற்றுவதற்கு அவன் எடுத்துக்கொண்ட முயற்சி அது.

"போவுது. இப்போதாவது உங்களுக்குப் பிள்ளைகள் நினைப்பு வந்திச்சே. பெட்டி பக்கத்திலே ரெண்டு தூங்குது. ஒன்னு அடுத்த வீட்டுப் பக்கம் போச்சு", என்றாள் அவள்.

"இந்நேரத்திலே என்ன தூக்கம்?"

"ரெண்டுக்குமே உடம்பு சரியில்லே. வயிற்றுப் போக்காக இருந்திச்சு. ஆஸ்பத்திரிக்குத் தூக்கிட்டுப் போனேன். வெள்ளை மாத்திரையும் வெள்ளைத் தண்ணியும் கொடுத்தாங்க. இப்போ கொஞ்சம் பரவாயில்லே. அந்தக்களைப்போட ரெண்டும் தூங்குது எல்லாம் இந்தக் கோதுமை மாவாலே வந்ததுதான்னு எதிர்வீட்டு அம்மா சொல்றாங்க. நாம் தான் எதையோ தின்னு நாளை ஓட்டறோம். குழந்தைகளுக்கு அதெல்லாம் வயிற்றுக்கு ஒப்புக் கொள்ளுதா? அதுகளுக்காவது சோற்றை, கஞ்சியைக் கொடுக்க வேணும்ா? ரெண்டும் பசியோடு தூங்கிடுச்சு.

எழுந்திருச்சா கத்தும். அதுக்குள்ளே எதையாவது செய்து முடிக்கலாம்னு நினைச்சுதான்—''

''வயிறுக்கு ஒப்புக் கொள்ளலே என்கிறியே, அப்புறமும் குழந்தைகளுக்குச் சப்பாத்தியைத்தான் கொடுக்கப் போறியா?''

''வேறே என்னத்தைக் கொடுக்கச் சொல்றீங்க? அதான் வெறும் பையைத் தூக்கி மூஞ்சிலே எறியிறீங்களே. பிள்ளைகள் சோற்றைக் கண்டு மூணு நாளாகுது. தினம் கோதுமைன்னா என்னதான் செய்யறது? இந்த லட்சணத்திலே விருந்தாளி வேறே வரப்போறாரு... தபால் வந்திருக்கு பாருங்க...''

''விருந்தாளியா? யாரு, மாசிலாமணி மாமாவா? நாமே ஆலாப் பறக்கிறோம். இதிலே விருந்துபசாரம் வேறா?''

''ஏங்க, ஒன்னு சொல்ல மறந்துட்டேனே. உங்களோட வேலை செய்கிறாரே உங்க சினேகிதர் ஆரோக்கியசாமி? அவர் உங்களைத் தேடிட்டு வந்தாருங்க!''

ஆரோக்கியசாமி என்றதும் அவன் முகம் சூம்பியது.

''அவனுக்கென்ன? தொழிற்சாலையிலே 'செலக்ஷன் கமிட்டி மெம்பர்கள்' ரெண்டு பேர் அவனுக்கு வேண்டியவங்க. ஆளைப் பிடிச்சுக் கிடுகிடுன்னு ரெண்டு வருசத்திலே ரெண்டு 'பிரமோஷன்' வாங்கிட்டான். அதோட தன்னுடைய பெண்டாட்டிக்கும் கிளார்க்கு வேலை வாங்கிக் கொடுத்துட்டான்—'' அவன் பொருமினான்.

''நாம்தான் நல்லா இல்லாட்டாலும் நமக்கு வேண்டியவங்களாவது நல்லபடியாயிருந்தால் நமக்கு நல்லதுதானே? அவர் இன்றைக்கு விடுமுறை எடுத்துக்கிட்டிருக்கிறாராமே? அவருடைய வீட்டிலே இன்றைக்கு ஏதோ விழாவாம்;

விருந்தாம்; பிறந்த குழந்தைக்குப் பேர் வைக்கிறது போலிருக்கு. நம்மைக் குடும்பத்தோடே ராத்திரி கட்டாயம் வரச் சொன்னாருங்க. நேற்றே உங்களைப் பார்த்துச் சொல்ல மறந்து விட்டாராம். அவர் வந்து சொல்லி விட்டுப் போனார்."

அவன் அசைவற்று உட்கார்ந்திருந்தான். விருந்து என்றதும் அவன் நெஞ்சில் பிறந்த ஆசை வயிற்றைத் தாக்கி, நாக்கில் சுரந்தது. அன்பரசியின் அரைப் பட்டினி கால் பட்டினி நிலைமையை ஒரு வேளையாவது போக்கி மகிழக் கிடைத்திருக்கும் வாய்ப்பினை நழுவவிடுவதா? குழந்தைகள் வயிற்றுக்கு ஒப்புக் கொள்ளாத கோதுமை மாவின் விடாப் பிடியிலிருந்து ஒரு வேளைக்காவது விடுதலை அளிப்போமே என்று விருப்பம் கொண்டான்.

"இதை முன்னாலேயே சொல்லக் கூடாதா அன்பு?" ஆவல் முகிழ்த்தது அவனுக்கு.

"கூப்பிட்டீங்களா?"

"ஆமாம். புறப்படு அன்பு! ஆரோக்கியசாமி இரவு சாப்பாட்டுக்குத்தானே சொன்னான்? இப்போதே போனால் சாயங்கால டிபனும் இருக்கும். எனக்கும் இன்றைக்கு அரிசி சாப்பாடு சாப்பிட்டால் தேவலாம் போலிருக்கு. புறப்படு. மாசிலாமணி மாமா வந்து பூட்டின கதவைப் பார்த்துவிட்டுப் போகட்டும். ஒரு தடவையாவது அப்படிப் பண்ணினால்தான் அவருக்கும் புத்தி வரும்!"

"அடே! சிவப்பிரகாசமா? வாய்யா, வா வா! குடும்பத்தோடே வந்துட்டியே? அதுதான் சரி. இதோ பாரு இவனை, தான் மட்டும் தனியாக வந்திருக்கிறான். சும்மா விசாரிச்சுட்டுப் போக. இவனைப்போல இல்லாமே நீயாவது குடும்பத்தோட வந்தியே—" கோலாகலமாக வரவேற்றான் ஆரோக்கியசாமி.

"நான் இப்போதுதான் வந்தேன். 'வீட்டிலே' சொன்னாள். உடனே புறப்பட்டுவிட்டேன்" என்றான் சிவப்பிரகாசம்.

"சரி கொஞ்சம் இரு. இதோ வந்துட்டேன்."

ஆரோக்கியசாமி எதற்கோ ஓடினான்.

மாலைச் சிற்றுண்டிக்காக ஏற்பாடு செய்யவோ?

ஆரோக்கியசாமியின் மனைவி வந்தாள். அன்பரசியை வரவேற்றாள். அவளோடு குழந்தைகள் மூன்றும் உள்ளே சென்றன.

"ஒன்றும் கூச்சப்படாமே போ அன்பு! நம்ம ஆரோக்கியத்து வீட்டு விருந்துதான்!" என்று அனுப்பி வைத்தான் சிவப்பிரகாசம். அவன் அப்படிக் கூறியதாலேயே அன்பரசி பின்னும் கூச்சப்பட்டாள்.

எங்கோ ஓடிய ஆரோக்கியசாமியைக் காணவில்லை. எங்கே போனான்?

"சிவப்பிரகாசமா? இப்போதான் வந்தியா? டிபன் ஆச்சா?" என்று அவன் கையைக் குலுக்கிக் கேட்டான் அங்கே வந்திருந்த அவனுடைய தொழிற்சாலைத் தோழன் ஒருவன்.

"இப்போதான் வந்தேன். நீ டிபன் சாப்பிட்டாச்சா?"

"அதெல்லாம் எப்போதே முடிஞ்சுபோயிட்டுதே. நீ நேரம் தவறி வந்திட்டே போலிருக்கு. சரி, நான் ஆரோக்கியத்து கிட்டே சொல்லிட்டேன். போயிட்டு வரேன்!" அவன் விடை பெற்றுக் கொண்டு விட்டான்.

இனி விருந்து எப்போது?

சிவப்பிரகாசத்துக்குப் பசி மறைந்து இப்போது வயிற்றைப் புரட்டவே தொடங்கி விட்டது. சிறு குடலைப் பெருங்குடல் விழுங்கும் பசி என்பார்களே — அது அவனுக்கு.

ஆரோக்கியசாமியின் நண்பர்களில் சிலர் சிவப்பிரகாசத்துக்கும் தெரிந்தவர்களாக இருந்தனர். எங்கும் விசாரணை; மகிழ்ச்சி; அரட்டை வம்பு; அரசியல்பேச்சு.

அவனுக்கு எதிலும் நாட்டமில்லை.

விருந்து எப்போது?

இரவு வந்து விட்டது. மணி ஏழுக்கும் மேலே!

உள்ளேயிருந்து சிவப்பிரகாசத்தின் பெண் ஐந்து வயதுச் சிறுமி அழுது கொண்டே அவனைத் தேடிவந்தாள்.

"அப்பா! எப்போப்பா வீட்டுக்குப் போவலாம்?"

"ஏம்மா?"

"உகும். எனக்குப் பசிக்குதுப்பா. அம்மா அடிக்கிறாங்க சோறு கேட்டதுக்கு—"

"சத்தம் போடாமே இரும்மா, இங்கேயே மாமா வீட்டிலே சாப்பிடுவோம். அம்மாவைத் தொந்தரவு பண்ணாமே விளையாடு, போ!"

"இங்கேயே சோறு போடுவாங்களாப்பா? எனக்குச் சப்பாத்தி வேணாம். சோறுதான். உகும்—"

"அழுவாமே இருந்தால் தான் சோறு போடுவாங்க. அழாதே" பெண்ணுக்கு ஆறுதல் கூறி அனுப்பினான் அவன்.

ஆரோக்கியசாமி வந்தான்.

"ரொம்ப நேரமாகுமோ ஆரோக்கியம்!"

"எதுக்கு?"

"ஒன்னுமில்லே நாங்க புறப்படலாம்னு பார்த்தோம்—"

"அதுக்குள்ளேயா? இருந்து எல்லோரும் சாப்பிட்டுப் போங்க!"

"பரவாயில்லை ஆரோக்கியம்!"

"அதெல்லாம் முடியாது. சரியா ஒன்பது மணிக்குள்ளே முடிஞ்சுடும். இரு வரேன். அப்புறம் பேசிக் கொள்ளலாம்."

அவன் போய்விட்டான்.

ஒன்பது மணிக்கா!

அன்பரசி கைக்குழந்தையைத் தூக்கிக் கொண்டு அவனுக்காக வந்து எட்டிப் பார்த்தாள். அவள் புடைவையைப் பற்றிக் கொண்டு இரண்டாவது பையன் அழுது அடம் பிடித்தான்.

"ஏன் இவனை அழவிடறே?" என்று வினவிக் கொண்டே அவள் அருகே சென்றான் சிவப்பிரகாசம்.

"நானா அழவிடறேன்? அங்கே சமையல் எல்லாம் ஆகி விருந்துச் சாப்பாடெல்லாம் எடுத்து வச்சிருக்காங்க. அதைப் பார்த்துட்டுச் சோறு போடச்சொல்லி அழறான். அங்கே இருக்க வேணாம்னு இங்கே இழுத்துக்கிட்டு வந்தேன்" என்றாள் அவள்.

"நீ ஏதாவது 'டிபன் கிபன்' சாப்பிட்டாயா? உள்ளே போனியே?" என்றான் மெதுவாக அவன்.

"அதெல்லாம் ஒண்ணுமில்லே. சும்மாப் பேசிக்கிட்டு இருந்தோம். அதுக்குள்ளேதான் இதுகள் தொந்தரவு பெரிசா இருக்கே," என்றாள் அவள்.

"எங்கே உன் பெண்ணைக் காணோம்? அதுக்கும்தான் பசிக்குதாம்!" என்றான் அவன்.

"எனக்கு மானம் போகுது. ஒரு பிள்ளைத் தின்னுக் கிட்டு இருந்துச்சு. இவன் அதைப் பிடுங்கித் தின்னுட்டா னாம். அந்தப் பிள்ளை இவனை அடிச்சுட்டான். உங்க சிநேகிதர் வீட்டு அம்மா சிரிக்கிறாங்க!"

"சிரிச்சா சிரிச்சுட்டுப் போகட்டும். குழந்தைகளைக் கொஞ்ச நேரம் அழவிடாமல் பார்த்துக் கொள். விருந்து முடிந்த உடனே புறப்பட்டுவிடலாம், என்ன?"

அவளுக்குப் பொறுமை சொல்லிக் கொடுத்தான் அவன்.

அப்பொழுது, "அடடே சிவப்பிரகாசம்!" என்று பதட்டத்தோடு அழைத்துக் கொண்டு அங்கே வந்தான் ஆரோக்கியசாமி.

"என்ன ஆரோக்கியம்?"

"இங்கே வாயேன். இங்கே வந்து பாரேன். ஒரு கண்ணராவிக் காட்சியை." அவன் சிவப்பிரகாசத்தை இழுத்துக் கொண்டு சென்றான்.

அவர்களைத் தொடர்ந்து அன்பரசியும் அவளோடு இரண்டு குழந்தைகளும் சென்றன.

"சே! இதென்னடி இது! இது என்ன பிள்ளையா இல்லே, பூதமா? தவலையிலே இருந்த சோற்றைத் தானே தட்டில் அள்ளிக் கொட்டிக்கிட்டு அதுபாட்டுக்குத் தின்குதே வெறும் சோற்றை. கையைச் சுடலே. அட ஆண்டவனே!"

முழக்கிக் கொண்டிருந்தவள் ஆரோக்கியசாமியின் மனைவி.

அவர்களுடைய வருகையைக் கண்டதும் அவள் முழக்கம் முணுமுணுப்பாகத் தேய்ந்தது.

வேடிக்கைப் பார்த்த பெண்கள் சிலர் சிரித்தனர்.

அங்கே ஆரோக்கியசாமி காட்ட வந்த காட்சியைக் கண்ட சிவப்பிரகாசம் திணறினான். மானக் குறைவு. அவனுடைய பெண்தான் ஒரு பெரிய தட்டில் சோற்றைக் கொட்டிக் கொண்டு விழிகள் பிதுங்க, கன்னங்கள் புடைக்க, கவுன் மீதெல்லாம் சிந்தச் சிந்த வாயில் சோற்றைத் திணித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். விருந்துக்காகத் தயாரான உணவு வகைகள் நிரம்பிய அறை அது.

"பார்த்தியா சிவப்பிரகாசம் உன் பெண்ணை? தானே எடுத்துப் போட்டுக்கிட்டுத் திருட்டுத்தனமா 'அபக் அபக்' குன்னு தின்கிறதைப் பார்! சோற்றைத் தின்னட்டும். அதற்கு நான் ஒன்னும் சொல்லலை. இதே பழக்கம் தானே எங்கே போனாலும் வரும்? அது கிடக்கட்டும். சோற்றை எடுக்கிற அவசரத்திலே அதோ பார் நெய்ப் பாத்திரத்தை உருட்டி எல்லாம் தரையிலே போயிடுச்சு! நீ என்ன தான் பிள்ளை வளர்க்கிறியோ போ. பறவாப் பறக்குதுகளே பிள்ளைகள்! சோறு தண்ணியே காட்ட மாட்டியோ?" குத்தல், வேடிக்கை, சினம்; அருமையான கேள்வி; எங்கேயோ கேட்கப்பட வேண்டியகேள்வி, யாரையோ பார்த்து— அதை ஆரோக்கியசாமி கேட்டான்.

சிவப்பிரகாசத்துக்கு என்ன பதில் கூறுவது என்றே தெரியவில்லை.

"இல்லே, ஆரோக்கியம்! இதுக்கு உடம்பு சரியில்லே. அதனாலே நாங்க சோறு கொடுக்காமே ரொட்டியும் பாலும் தான் கொடுக்கிறது. அது என்னடான்னா எங்க கண்ணிலே மிளகாய்ப் பொடி தூவிவிட்டு இங்கே வந்து சோற்றைத்

தின்குது,'' என்றான் அவன். தன் மனைவியைப் பார்த்து, "அன்பு! உன் பிள்ளையை இழுத்துக்கிட்டுப் போய்க் கழுவி விடு, பார் மேல் காலெல்லாம் சாதத்தை,'' என்றவன் தானே தன் பெண்ணைப் பிடித்து ஒரு கையால் தூக்கி நிறுத்தி அவளிடம் நெட்டித் தள்ளினான்.

அப்பொழுது இரண்டாவது பையன் தன் அம்மாவின் காலைக் கட்டிக்கொண்டு. "எனக்கும் சோறு! அம்மா... சோறு!'' என்று ஓலமிட்டு அழத்தொடங்கி விட்டான். அவன் தன் அக்காவின் கையிலிருந்து பறிக்கப்பட்ட தட்டிலிருந்த சோற்றை எடுக்கவும் முயன்றான்.

"அடக்கடவுளே! எல்லாமே அப்படித்தான் இருக்கும் போலேருக்கு!''

யாரோ ஒருத்தியின் குரல்.

"வாடி இங்கே பிசாசு! மூஞ்சைப்பாரு. நீ சோறு தின்னக் கூடாதுன்னு டாக்டரம்மா சொன்னாங்களே! வா இங்கே,'' என்று எல்லோருடைய குரலையும் தன் இரைச்சலால் அடக்கும் சத்தம் போட்டு விட்டுத் தன் பெண்ணைப் பிடித்து இழுத்துக் கொண்டு பையனையும் விடாமல் பிடித்துக் கொண்டு, கைக் குழந்தையோடும் அந்த இடத்தை விட்டு நகர்ந்தாள் அன்பரசி.

ஆரோக்கியசாமியைப் பின் தொடர்ந்தான் சிவப்பிரகாசம்.

"ஆரோக்கியம்! குழந்தைகள் அடம்பிடிச்சு அழ ஆரம்பிச்சுடுச்சு. தூக்கக் கலக்கம் போலிருக்கு. நாங்க வரட்டுமா!'' என்றான் அவன்.

"என்ன அதுக்குள்ளேயா?''

"நாங்க ரொம்ப தூரம் போகணுமே? வீட்டுக்குப் போய்ச் சேரப் பத்துமணி ஆயிடும்—''

"சாப்பிட்டுப் போகலாம். இன்னும் கொஞ்ச நேரம். நம்ம இஞ்சினியரும் விருந்துக்கு வருவார். அவரைத்தான் எதிர்பார்க்கிறேன். பசியோடேயா பிள்ளைக்குட்டிகளை இழுத்துக்கிட்டுப் போவீங்க?" என்றான் ஆரோக்கியசாமி.

"பசியா? நாங்க வீட்டை விட்டுப் புறப்படும் போதே சாப்பிட்டு விட்டுத்தானே வந்தோம்?" சிவப்பிரகாசம் தன் அருகில் வந்து நின்ற மனைவியைப் பார்த்தான்.

"கொஞ்சம் இரேன். இஞ்சினியர் வந்த உடனே இலை போட்டுடலாம். நீங்க எல்லோருமே ஒரே நேரத்திலே சாப்பிட்டுப் போயிடலாம். அவர் எவ்வளவு நேரமானாலும் வந்திடுவார். அவருக்காகத்தான் பார்க்கிறேன். இல்லேன்னா உன் பிள்ளைகள் பறக்கிற பறப்புக்கு உங்களுக்கு முதல்லே சாப்பாட்டைப் போட்டு அனுப்பியிருப்பேன். அப்புறம் உங்க விருப்பம்..."

கத்திக் கொண்டிருந்த குழந்தைகளை இழுத்துக் கொண்டு அஃபரசி விடுவிடென்று முன்னால் நடந்தாள், ஒன்றும் பேசாமல்.

"பரவாயில்லே ஆரோக்கியம்! நாங்க வீட்டிலேயே நல்லா சாப்பிட்டுத்தான் வந்தோம். எங்களுக்கு நேரமாகுது. வரோம்."

விடை பெற்றுக் கொண்டு விட்டான் சிவப்பிரகாசம்.

கைகூப்பிவிட்டான் ஆரோக்கியசாமி.

பட்டினிப் பட்டாளம் புடை சூழ சிரித்த முகத்தை வெளியில் காட்டிக்கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டான் சிவப்பிரகாசம்.

வீடு நெருங்கும் போதே தங்களுடைய வீடு என்கிற உரிமையில், "அம்மா, சோறு..." என்று ஈனக்குரல் எழுப்பினாள் மீண்டும் அந்தச் சிறுமி.

"சோறா வேணும்? உனக்குச் சோறு?"

ஓங்கி முதுகில் அறைந்தான் சிவப்பிரகாசம்.

அதுவரையில் அவன் தோளில் தொங்கிக் கொண்டு தூங்கியபடி சுமையாய் இருந்த இரண்டாவது பையனைக் கீழே இறக்கி விடப்போக அவன் விழித்துக் கொண்டு பசி வேகத்தில் கத்தத் தொடங்கி விட்டான்.

"நீ ஏன்டா கழுதை கத்தித் தொலைக்கிறே?"

அவனுக்கும் செம்மையாக இரண்டு அடி.

"மூடு வாயை மூடு!"

"ஐயோ! ஏன் இப்படிப் பிள்ளைகளைப் போட்டு நொறுக்குறீங்க? நம்மாலேயே பசி பொறுக்க முடியவில்லையே. இதுகள் என்ன பண்ணும் பாவம்? நமக்கு மான அவமானம் தெரியுது. அதனாலே மனசுக்குள்ளேயே அழறோம். இதுகளுக்கு அது தெரியலே. அதனாலே வாய் விட்டு அழுவுது. இதுகளைப் போட்டு அடிக்கவும் உங்களுக்கு மனசு இடம் கொடுக்குதே!"

"சமைக்கிற வரைக்கும்கூட இதுகள் பொறுக்காது போலிருக்கிறதே!" என்று எரிந்து விழுந்தான் சிவப்பிரகாசம்.

சமையலறை புகையிலிருந்து அவனைப் பார்த்த அவள், "இப்போ நீங்க ஏன் பிள்ளைகளைப் போட்டு அடிச்சுட்டுக் கண் கலங்கறீங்க?" என்றாள்.

அவன் தன் முகத்தை மறைத்துக் கொண்டான் அவள் பார்வையிலிருந்து.

# யாரை மயக்க?

வீட்டுக்கு வெளியே கொட்டிய குப்பையிலிருந்து அவள் என்னதான் பொறுக்கிக் கொண்டிருந்தாள்?—

கோழி சீய்ப்பது போல அவள்?

குழந்தையின் கழுத்தில் அழகுற அணிவிக்கப்பட்ட செயற்கை முத்து மாலையை, அது அரும்புப் பற்களால் சிதைத்து உதிர்த்த பிறகு அள்ளி எறியப்பட்ட வண்ண மணிகளை அவள் தேடித்துருவிச் சேர்த்தாள். சர்க்கரைப் பாகில் தோய்த்து எடுத்த பலகாரம் போல, சம்பாதித்துப் போடுகிறவன் காசுக்குக் கேடாய் உடம்பு முழுவதும் கொட்டிக் கொண்டு மங்கை நல்லாள் ஒரே வாரத்தில் காலி செய்து தூக்கியெறிந்த 'ஆல் பர்ப்பஸ்' — அனைத்து உபயோக 'டால்கம் பவுட'ரின் வெற்று டப்பாவை எடுத்துக் கொண்டு, உள்ளே ஏதேனும் ஒட்டிக் கொண்டு இருக்காதா என்று ஆவலோடு ஆராய்ந்தாள். ஒடிந்த சீப்புத்துண்டுகள். உடையாத சிறிய மருந்து புட்டிகள், மூளியான கண்ணாடிகள், தேய்ந்து வெளுத்த ரப்பர்வளையல்கள், துருப்பிடிக்காத பிளேடுகள் — இவற்றையெல்லாம் அவள் பொறுக்கி என்னதான் செய்வாளோ?

அருள்பிரகாசம் ஒவ்வொரு நாளும் சன்னல் வழியே அவளைக் கவனித்து வந்தான். அவன் அலுவலகம் புறப் படுவதற்குக் கால் மணி அரை மணிஇருக்கும்போது, பல இடங்களிலும் தன் பொறுக்கு வேலையை முடித்துவிட்டு,

அவனுடைய இல்லத்தின் முன்பாக அவள் பொறுக்கிக் கொண்டிருப்பாள். காலையில் எழுந்தவுடன் அவளுக்கு இதுதான் முதல் வேலை போலும். தன்னுடைய கைப் பிடிக்கு அகப்பட்ட வரையில் குறுகிய குழற்கற்றையை அவள் பின்னி விட்டிருப்பாள். அதன் முனையில் நிறம் புரியாத ஒரு நாடா, குஞ்சம் போலத் தொங்கும் கூந்தலின் மீது செவிப்புறத்திலும் நெற்றியிலும் காற்று வாக்கில் புரளும். நோயில் அடிபட்டு முறையான மருத்துவம் பெறாததால் பச்சை மண்பானையில் கட்டையால் தட்டி விடப்பட்டு ஒடுக்குகள் நிறைந்திருப்பது போல உடம்பு. கொஞ்சம் சிவந்த தோல். குருதிக் குறைவின் சோகை யாகவும் இருக்கலாம். அழுக்குக் கந்தல் ஒட்டுகளும், தொள தொளத்த ரவிக்கையும் அந்த ஒடிந்த குச்சியில் அணி செய்தன.

சொந்த ஊரில் தனக்குத் திருமண ஏற்பாடுகளை எதிர் பார்த்துக்கொண்டு நெய்வேலி புது நகரில் தனக்குக் கிடைத்த தனி வீட்டில் தனிக் கட்டையாய் உணவு விடு தியை நம்பி, கடமையில் காலம் கடத்திக் கொண்டிருந்த அருள்பிரகாசம், வீட்டின் சன்னல் கதவுகளைப் பறக்க பறக்கத் திறந்து வைத்து வீதியில் வெளியில் பார்த்துக் கொண்டிருப்பதே ஒரு பொழுது போக்காகக் கொண்டவன். இளமைப் பொலிவும் எழில் நலமும் கூடியிருக்க வேண்டிய வயதில், அவள் இப்படி இரக்கத்துக்கு உரிய தோற்றத்தில் குப்பைகளைக் கிளறிப் பொறுக்கிக் கொண்டிருக்கும் நிலைமைக்கு ஆளாகி விட்டிருந்ததில் அவள் மீது அவனுக்கு அருவருப்பும் அனுதாபமும் ஏற்பட்டது.

மற்ற வீடுகளைப் போல அவன் வீட்டில் அவளுக்குப் பயன்படும் குப்பையில்லை. வெறும் காகிதங்கள், அட்டைப் பெட்டிகள், சிகரெட்டுப் பெட்டிகள், வெற்றுத் தீப்பெட்டிகள் போன்றவையே அவன் எறியும் குப்பை.

ஒவ்வொரு நாள் அவன் வீட்டுக்கு எதிரில் அவளுக்கு ஒன்றுமே கிடைக்காது. அப்பொழுது அவள் கீழே சுற்றிச் சுற்றிப் பார்த்து விட்டு, மிட்டாய் வாங்க எடுத்துக் கொண்டு ஓடிய காசைக் கீழே தொலைத்து விட்டுச் செல்லும் குழந்தை போல, அவள் வெறும் கையோடு அந்த இடத்தை விட்டு நகர்ந்து செல்வாள். அது அவனுக்கு என்னவோ போல் இருக்கும். அவளை அழைத்து ஏதேனும் கொடுத்து அனுப்பலாமா என்று கூட நினைத் தான் அவன். குப்பையில் எறியக் கூடியவற்றை அவளை அழைத்தா கொடுப்பது? என்னவோ பெரிய உதவி செய்து விட்டது போல உள்ளத்தில் ஒரு வறட்டுத் திருப்தி வேறே? இல்லை, ஒன்றிரண்டு அல்லது ஐந்து பத்து காசுகள் கொடுத்தால் அவள் ஏற்றுக் கொள்வாளோ இல்லையோ? பிச்சைக்காரியா அவள்? அப்படியிருந்திருந்தால் வீட்டுக்கு வீடு ஏறி இறங்கி இருப்பாளே!

பொறுக்கிச் சேர்த்த மணிகளை மாலையாக்கிக் கழுத்தில் அணிந்து கொண்டாள் அவள். முகப்பவுடரைத் திப்பி திப்பியாகப் பூசிக்கொண்டாள். கைகளில் பல வகை வளையல்கள் குலுங்கின—எல்லாக் குப்பைகளிலிருந்தும் பொறுக்கப்பட்டவை. ஆனால், சிகரெட்டுப் பெட்டிகளில் அவள் என்ன தேடினாள்? கொஞ்சம் நீளமாக எறியப்பட்ட சிகரெட்டுத் துண்டுகளைப் பொறுக்கி அவள் என்ன செய்தாள்?

அருள்பிரகாசத்துக்கு இதெல்லாம் வியப்பாகவும் சிகரெட்டுத் துண்டுகளைப் பொறுக்கியதில் அவள் மீது வெறுப்பாகவும் இருந்தது. ஏதாவது அரை குறைப் பைத்தியமோ? அப்படியும் தெரியவில்லை. அவளிடம் அவனுக்குக் காரணம் புரியாத அன்பு மிகுந்து வந்தது.

அலுவலகம் புறப்பட, சன்னல் பக்கத்தில் நின்று அருள்பிரகாசம் தலை சீவிக் கொண்டிருந்தபோது அவள்

இரண்டு வீடுகளுக்கு அப்பால் குனிந்த தலையோடு வந்து கொண்டிருந்ததைப் பார்த்தான். உடனே சில குப்பைக் காகிதங்களையும் வெற்று சிகரெட்டுப் பெட்டிகளையும் அதோடு ஐந்து காசு ஒன்றையும் சேர்த்துச் சன்னல் வழியே வெளியில் போட்டு விட்டுச் சன்னல் கதவுகளை அடைத்து விட்டான். அவள் வந்தாள். சிகரெட்டுப் பெட்டிகளைத் திறந்து பார்த்துவிட்டு எறிந்தாள். ஒரு காகிதத்தின் கீழே செம்மண்ணில் பளிச்சென்று தெரிந்த காசை எடுத்துக் கொண்டு சுற்றிலும் பார்த்தாள். அவளுடைய விழிகளில் வியப்பும் மலர்ச்சியும் நிறைந்தன. அவள் உலர்ந்த உதடு களில் ஒரு முறுவல் இழைந்தது. பிறகு எங்கும் நிற்காமல் 'விடு விடு' வென்று சென்றாள். அவ்வளவும் சன்னல் கதவு இடுக்குகள் வழியே பார்த்துக் கொண்டிருந்த அருள்பிரகாசம் வீட்டைப் பூட்டிக் கொண்டு அலுவலகத்திற்குப் புறப்பட்டுச் சென்றான்.

மறுநாளும் அவள் வந்தாள். அவன் போட்டிருந்த காசைப் பெட்டியிலிருந்து எடுப்பதுபோல எடுத்துக்கொண்டு சென்றாள். அவள் அந்தக் காசுகளை என்ன செய்தாள்? பசிக்கு உணவாக்கினாளா? தன்னுடைய ஒப்பனைக்கு இன்னும் ஏதேனும் பயனற்ற பொருள்களை வாங்கினாளா? அவளுக்கு உற்றார் உறவினர் யாரேனும் உண்டா? தெளிவான அறிவு கொண்டவளா? கிறுக்குப் பிடித்தவளா?– எல்லாம் அறிந்து கொள்ள அவனுக்கு ஆவல்.

ஆனால், 'ஏதோ ஐந்து காசு பத்து காசு போட்டுவிட்டு அவளுடைய வாழ்க்கையில் பல பகுதிகளையும் தெரிந்து கொள்ள ஆசைப்படுவதோ முயற்சி எடுத்துக் கொள்வதோ முறைதானா? என்று தனக்குத்தானே கேட்டுக் கொண்டான். எப்படி ஆனாலும், அவளைத் தன் வீட்டருகே கண்டபோது அவளுக்காக என்று கையில் கிடைத்த ஒரு காசு முதல் பத்து காசு வரை குப்பையில் போடுவதற்கு அவன் தயங்கவில்லை.

சிகரெட்டுப் பழக்கம் போல அவனுக்கு அது ஒரு பழக்க மாகவே ஆகிவிட்டது. அதில் மகிழ்ச்சியும் இருந்தது.

அந்த மகிழ்ச்சி அவனுக்கு அடிக்கடி கிடைக்கும்படி அவன் வீட்டுக் குப்பையில் ஓயாமல் காசுகளைக் கண் டெடுத்துக் கொண்டு சென்றாள் அவள். ஒரு மாதத்தில் ஒரு ரூபாய் முதல் இரண்டு ரூபாய் வரை அவளுக்கென்றே அவன் ஒதுக்கி வைத்திருக்க வேண்டியிருந்தது. அவனுடைய சிகரெட்டு செலவில் மிகச் சிறிய தொகைதான் அது என்றாலும், அவனுக்குச் சிகரெட்டினால் உண்டாகிய இனிய நிறைவை விட அந்தச் சிறு தொகையின் ஒதுக்கீட்டினால் அவனுடைய உள்ளம் இனிமையால் நிறைந்தது.

அவள் முகத்தில் தோன்றிய உவகையைக் கண்டபோது அவனுக்கும் உவகை தோன்றியது. அவள் நாளுக்கு நாள் மேனி மெருகோடு வந்து கொண்டிருந்ததைக் கண்டபோது அவனுக்குப் பெருமை பொங்கியது. அவளுடைய ஒப்பனை களை அவன் கண்டு வியந்த போது அவனுக்கு உள்ளம் குளிர்ந்தது.

எல்லாம் அவளால் தானோ?

அவன் வீசி எறியும் ஒன்று இரண்டு காசுகளா அவளை உருவாக்கிக் கொண்டு வந்தன?

அவள் பூசத் தெரியாமல் பூசிக் கொள்ளும் வண்ணமும் சுண்ணமும், கைகளில் அவள் பெரிதும் சிறிதுமாக ஒட்டுறவு இல்லாமல் அணிந்து கொள்ளும் வளையல்களும், குட்டை யான சடைப் பின்னலில் முடிந்து கொள்ளும் நாடாவும் குப்பையில் பொறுக்கப் பட்டவை என்று அறிந்திருந்தும் அவற்றுக் கெல்லாம் தானே காரணம் என்று அவன் ஏன் எண்ணிக் கொள்ள வேண்டும்?

ஏதோ ஒரு நிறைவு.

ஆனால், யாருக்காக அவள் இவ்வளவும் செய்து கொள்கிறாள்? அழகின்மையால் விளைந்த தாழ்வு மனப் பான்மையை மறைக்கவா? அவள் இயல்பா? அல்லது தாழ்ந்த நெஞ்சமா?

அதைப் பற்றியெல்லாம் அவனுக்குக் கவலை இல்லை.

திருநெல்வேலியிலிருந்து அவன் நெய்வேலிக்கு வந்து இரண்டு ஆண்டுகளுக்கு மேல் ஆகி விட்டன. ஆண்டுகள் பிறந்ததும் போனதும் தெரியாமல் போய் விட்டன. இடையில் இரண்டு தடவையோ மூன்று தடவையோ ஊருக்குச் சென்று வந்தான். நாட்களின் இயந்திரப் போக்கில் அவனுடைய வறண்ட நெஞ்சுக்கு நெருக்கமாக வந்து சேர்ந்தவள் அந்தப் 'பொறுக்கினி.' ஊரில் கல்வி பயின்று கொண்டிருந்த அவனுடைய அன்புத் தங்கையின் நினைவு வந்த போதெல்லாம், இந்தப் 'பொறுக்கினித் தங்கை'யும் உடன் வந்தாள். அவனுடைய அன்புப் பெருக்கில் ஒரு பகுதி, தொடர்பில்லாத ஒரு பாச உணர்ச்சியாகி, அந்த ஏழை மகளோடு ஊமை நாடகம் நடத்திக் கொண்டிருந்தது. அப்படித்தானோ?

ஏதோ ஒன்று. காரணம் அவனுக்கு விளங்கியது. அதைப் பற்றி அவன் மிகுதியாகச் சிந்திக்கவும் இல்லை. ஒரு விளையாட்டு.

தான் வரும் போதெல்லாம் இந்த ஒரு வீட்டுக் குப்பையில் மட்டும் காசு கிடைக்கிறதே என்று அவளுக்குக் கொஞ்சமும் சந்தேகம் வந்திருக்காதோ?

'காசின் மதிப்பு அறியாத ஒரு பைத்தியக்காரன், கண்ட கண்ட இடத்தில் காசைப் போட்டு வைத்துக் குப்பையோடு குப்பையாக எறிகிறான்' என்று எண்ணித் தனக்குள் சிரித்துக் கொள்வாளோ?

கடவுள் அருளால் தனக்கு எங்கிருந்தோ வந்து விழுகிறது என்று எண்ணி மகிழ்ந்திருப்பாளோ?

அவள் என்ன நினைத்துக் கொண்டாலும் அவனுக்கு என்ன உயர்வு வந்து விடப் போகிறது, அல்லது தாழ்வு நேர்ந்து விடப் போகிறது?

கிறிஸ்துமஸ் வந்தது. இருபது நாள் விடுமுறை எடுத்துக் கொண்டு திருநெல்வேலிக்குப் போக இருந்தான் அருள்பிரகாசம். அவனுக்கு ஊருக்குச் செல்லும் மகிழ்ச்சி. அதோடு, அவள் அந்த இருபது நாட்களும் காசு கிடைக்காமல் எப்படி வருத்தப்படுவாளோ, பூட்டிக் கிடக்கும் வீட்டைப் பார்த்துப் புழுக்கம் அடைவாளோ என்றும் எண்ணமிட்டான்.

'ஊருக்குப் புறப்படுவதற்கு முன் அவள் வந்தால், நேரடியாகவே அவளை அழைத்து அவளைப் பற்றிக் கேட்டு அவளை மகிழ்விப்பதற்காக ஒரு ரூபாய் அன்பளிப்பு கொடுத்தால் என்ன?' என்று எண்ணிப் பார்த்தான்.

தவறாக, அவளோ அல்லது பிறரோ எண்ணுவதற்குத் தான் என்ன இருக்கிறது?

அவளுடைய நிலைக்கும் அவனுடைய நிலைக்கும் யாராவது ஒப்பிட்டு நினைக்கக் கூட முடியுமா?

அவளுடைய இரக்கத்துக்குரிய தோற்றத்துக்கும், அவளைப் பிடித்த இரக்கமற்ற வறிய கோலத்துக்கும் சந்தேகப்பட என்னதான் உண்டு?

காரணம் புரியாத அவனுடைய அன்புக்கும் அனுதாபத்துக்கும் உரியவளாகிய அவளுடன் சிறிது நேரம் பேசக் கூடவா கூடாது? 'நீ யார்? உன் பேர் என்ன? உனக்கு யாராவது இருக்கிறார்களா? பொறுக்கும்

பொருள்களை நீ என்ன செய்கிறாய்? பீடி சிகரெட்டுகளைக் கூடப் பொறுக்குகிறாயே? குப்பையில் காசு கிடந்ததைப் பற்றி என்ன நினைத்துக் கொண்டாய்?' — என்றெல்லாம் கேட்க அவனுக்கு ஆசை. அதற்கு அவள் என்ன பதில் சொல்வாளோ...?

ஆனால், அவள் வந்தாள். அவன் வீட்டின் உள்ளிருந்த படியே பார்த்தான். "இந்தா!... இங்கே பார்!" என்ற அவனுடைய முதல் குரல் அவளுக்கு எட்டவில்லை. இரண்டாவது முறையாக அவன் அழைக்கவில்லை. கையில் எடுத்த ஒரு ரூபாய்த் தாளோடு மற்ற குப்பைகளையும் அள்ளித் தெரு வாயிற்படி வழியே வெளியில் எறிந்து விட்டுக் கதவைச் சாத்திக் கொண்டான்.

சற்றுப் பொறுத்திருந்து அவன் வெளியில் வந்து பார்த்த போது, அவளைக் காணவில்லை. குப்பையில் ஒரு ரூபாய்த் தாளும் இல்லை. ஒரு ரூபாயாகக் கண்டதும் எடுத்துக் கொண்டு ஓடி விட்டாளோ?

அவனுக்கு ஆத்திரமாக வந்தது. அவள் அவனை என்ன தான் நினைத்துக் கொண்டாள்? 'நீங்க ஏன் பணம் போடுறீங்க?' என்று ஒரு வார்த்தை, 'இங்கே ஒரு ரூபா தாள் கிடக்கிறதே தெரியாமல் போட்டு விட்டீர்களோ? என்று ஒரு சந்தேகக் கேள்வி. 'நீங்க செய்யற உதவிக்கு உங்களுக்குக் கோடிப் புண்ணியம்' என்று ஒரு நன்றி—எதுவுமே இல்லாமல், அகப்பட்டதைச் சுருட்டிக் கொண்டு ஓடினால் அதற்கு என்ன பொருள்?

அவன் வீட்டைப் பூட்டிக் கொண்டு புறப்பட்ட நேரத்தில், 'ஊரிலிருந்து திரும்பி வந்ததும் மறுபடியும் இந்தக் காசு விளையாட்டு வைத்துக் கொள்ளக் கூடாது என்று தீர்மானித்துக் கொண்டான். இந்த வேடிக்கையைத் தன் தங்கையிடம் சொல்லிச் சிரிக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டான்.

கையில் தோல் பெட்டியுடன் அவன் வீட்டை விட்டுக் கீழே இறங்கி நடந்த போது எதிரில் வந்தான் ஒருவன். இடுப்பில் கட்ட வேண்டிய வேட்டியைத் தலையில் முண்டாசாகச் சுற்றியிருந்தான். தோளில் போட வேண்டிய ஒரு கட்டம் போட்ட துண்டை இடுப்பில் கட்டியிருந்தான். தலைவிரி கோலம். அவன் கண்கள் சிவந்து கிடந்தன. அவனுக்குப் பின்னால் மெல்ல மெல்லத் தயங்கித் தயங்கி வந்து கொண்டிருந்தவள் அவளேதான்.

அந்த முரட்டு ஆள் திரும்பிப் பார்த்து அவளைக் கேட்டான். "இந்த வீடுதானா நீ சொன்னே?"

ஆமாம் என்பதற்கு அடையாளமாக அவள் செம்மறி யாடு போலத் தலையை ஆட்டினாள்.

"ஏன் சாரு! இந்த ரூபா நோட்டு நீங்க கொடுத்தீங்களா இவளுக்கு?" என்று கரகரப்பான குரலில் கேட்டான் அவன்.

அருள்பிரகாசத்துக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவன் காட்டியது ஒரு ரூபாய்தான். ஆனால் அவன் விழித்துக் கொண்டான்.

"நான் கொடுத்ததா? உனக்கு என்னம்மா பைத்தியமா? நான் ஏன் சும்மா போய் ஒரு ரூபாயைக் கொடுக்கப் போகிறேன்?" என்றான் அவன்.

"சும்மா இல்லே சாரு! ஏதாவது காரியமாத்தான்!" என்றான் அந்த ஆள், தன் சந்தேகத்தை மறைமுகமாகச் சுட்டிக்காட்டும் முறையில் கிண்டலாக.

"எனக்கு ஒன்றும் புரிய வில்லையே! இந்தப் பெண்ணை நான் பார்த்ததுகூட இல்லையே! யார் இது?" என்றான் அருள்பிரகாசம். அவளை அப்பொழுதுதான் முதன் முறையாகப் பார்ப்பவன் போலக் கூர்ந்து பார்த்தான்.

அவள், கண்களில் புதிதாகப் பட்டை போல மை பூசி யிருந்தாள். நெற்றியில் நீண்ட பொட்டு வைத்திருந்தாள். தலையில் கற்றையாகப் பூ செருகியிருந்தாள். மற்ற நாட்களைவிட இன்று கொஞ்சம் அதிகமான - ஆனால் முறைப் படுத்திச் செய்து கொள்ளத் தெரியாத, அலங்காரம் தான்! 'பணத்தை அவன் கொடுத்தான் என்று சொல்லிருக் கிறாளே அடி பாவி!'

"ஏன்டி, இந்த வூடுதான்னியே?" என்று அதட்டினான் அவன்.

"ஆமாம். இங்கே தான் கண்டு எடுத்தேன்.!" என்றாள் அவள் மெலிந்த குரலில்.

"பார்த்திங்களா? கீழே கண்டு எடுத்தாளாம்! எவனோ உன்னை மயக்கி இந்தப் பணத்தைக் கொடுத்திருக்கான். அதான் உன் அலங்கார ஆடம்பரமே சொல்லுதே. உன் முகரக் கட்டைக்கு பவுடரு, சோப்பு, மைபி, தலையிலே பூவு!... ஏதோ காசு வைச்சிருக்கே அப்படீன்னு 'அவள்' அப்பவே சொன்னா சந்தேகப்பட்டு! வேலை செஞ்சு சம்பா திக்கத்தான் துப்பு இல்லேன்னாலும் போவட்டும். ஏதோ தாலி கட்டிட்டோமேன்னு நானும் அவளும் ஒன்னும் சொல்லாமலே உனக்குத் தண்டச் சோறு போட்டுக்கிட்டு இருக்கோம். இப்போ நீ இதைப் போல வேலை செய்ய ஆரம்பிச்சிட்டியா? சாகக் கிடந்தவளுக்கு உசிரைக் கொடுத்து உருப்படியாக்கினோம். இப்போ ரத்தம் ஊறின உடனே நீ இப்படி நடக்கத் துணிஞ்சிட்டியே? நாளுக்கு நாளு நீ பண்ணிக்கிற சோடனை யெல்லாம் இப்பல்ல புரியுது!..." என்ற அவன் அவளுடைய தலை மயிரைப் பிடித்துக் கொண்டு "என்னடி சொல்றே?" என்றான்.

அவள் துடிதுடித்து அலறினாள்: "இல்லே! இல்லே! நான் ஒன்னுமே தப்பு பண்ணலே. என்னை அடிக்காதே!

என்னைவுட்டுடு! நான் செத்துப் போயிடுவேன், என்னை அடிக்காதே! நிசமாச் சொல்றேன், காசு பணம் வளையலு பவுடரு எல்லாம் குப்பையிலிருந்து பொறுக்கினதுதான்! 'யாரு கொடுத்தா யாரு கொடுத்தா'ன்னு திரும்பத் திரும்பக் கேட்கிறியே? எனக்கு யாரு கொடுப்பா? இன்னொருத்தரு குடுத்தாலும் எனக்கு எதற்கு? நான் நோய்ல்ல விழுந்ததற்கு அப்புறம் நீதான் அந்தச் சாகசக் காரியை வைச்சிக்கிட்டு என்னை அநாதையா விட்டுட்டியே? இப்பதான் நீ சுகமா இருக்கிறயே, இரேன்! என்னை ஏன் இப்படிச் சும்மா சும்மா அடிச்சிக் கொல்றே?'' அவள் கண்கள் பொல பொலவெனக் கண்ணீரைக் கொட்டின. அவளுக்குள் தேங்கிக் கிடந்த வெளியிட முடியாத வேதனை களும் அவனிடம் இருந்த அச்சமும் அவளை நிலைகுலைய வைத்தன.

''எந்தக் குப்பையில் கிடக்குது உனக்கு ஒரு ரூபா தாளும் இம்புட்டு சில்லரையும்? எவன்கிட்டேடி கதை அளக்கிறே? ரூபாதான் குப்பையிலே கிடக்குதுன்னு வச்சு கிட்டாலும் இந்த அலங்காரமும் ஆடம்பரமும் எதுக்கடி பண்ணிக்கிறே? யாரை மயக்கறதுக்காக செய்துக்கறே?'' அவன் நகைத்தான். அந்த நகைப்பில் சினம் கொப்பளித்தது.

''தோ, இந்த வூட்டுக் குப்பையிலே தான். சிகரெட்டு புட்டியிலே சிகரெட்டு இருக்குமான்னு தேடிப் பார்த்தேன்; இருந்தா உனக் கோசறம் கொண்டாந்து கொடுக்கலாம்னு. நீ தினம் தினம் நம்ம வூட்டு மாடத்திலேயிருந்து எடுத்துக் குடிக்கிறயே பீடின்னும் சிகரெட்டுன்னும், அதெல்லாம் ஏது? 'அவ' கொண்டாந்து வச்சதுன்னு நினைச்சுகிட்டியா? எல்லாம் நான் தான்!... சிகரெட்டுக்காகக் குப்பையிலே பார்த்தப்போ இந்த ரூவா நோட்டு அங்கிட்டுதான் சுருட்டி மடக்கினு கிடந்துச்சு. பணம் நிறைய சேர்த்து வைச்சி உன்கிட்டே கொடுத்தாலாவது நீ என்கிட்டே

முன்னே மாதிரி ஆசையோடு நடந்து கொள்ளுவேன்னு நினைச்சேன். அவளைப் போல நானும் கொஞ்சம் அளகா அலங்காரமா இருந்தா நீ என்னோட ரெண்டு வார்த்தை அன்போடே பேசுவேன்னு நினைச்சுகிட்டு தான், நான் கஸ்டப்பட்டு இப்படியெல்லாம் தினந்தினம் செஞ்சுகிட்டேன். இல்லாட்டா எனக்கு என்னா இதெல்லாம் வாளுது! ஆனா நீதான் அவள் மோகமாவே கிடக்கிறியே! என்னுடைய வார்த்தை யெல்லாம் உன் காதில் எங்கே விளப்போவுது?'' அவள் தேம்பிக் கொண்டே தன் ஆத்திரத்தைக் கொட்டினாள்.

''என்னா சாரு? இவ சொல்றதைக் கேட்டிங்கல்ல? என்னை மயக்கறத்துக்கு அலங்காரம் பண்ணிக்கிறாளாம் அலங்காரம்! ஒரு புருசனுக்கிட்டே சொல்ற வார்த்தை யாங்க சாரு? பணம் ஏதடின்னா, உங்க வூட்டுக் குப்பையிலே கிடந்திச்சாம்! குப்பையிலே தான் கிடந்திச்சோ, இல்லே எவனாவது இவளுக்குச் சாடை காட்டிட்டுக் கொடுத்தானோ தெரியலியே!'' என்றான் அவன், அருள்பிரகாசத்தைப் பார்த்து.

உடனே அருள்பிரகாசம் தன்னையும் மீட்டுக்கொண்டு, அவளையும் காப்பாற்றி விடும் முயற்சியோடு, ''ஓ! இப்போ தான் புரியுது எனக்கும். நானும் காலையிலேருந்து இந்த ரூபாயை எல்லா இடத்திலும் தேடி விட்டேன்; கிடைக்கவே இல்லை. இரவு சினிமாவுக்குப் போய் விட்டு வந்து ரூபாயும் சில்லரையும் சன்னலுக்கிட்டே இருக்கிற 'ஷெல்பிலே' வைத்தேன். காலையிலே பார்த்தால் சில்லரை தான் இருக்கு. நோட்டைக் காணோம்! ஒண்ணு நானே தூக்கக் கலக்கத்திலே சிகரெட்டு பாக்கெட்டோடே தூக்கி எறிந்திருக்கணும். இல்லே காற்றிலே பறந்துபோய் வெளியில் விழுந்திருக்கணும். நல்ல வேளையாய்ப் போச்சு. நீயாவது திருப்பிக்கொண்டு வந்தியே! இங்கே கொடு

பணத்தை!'' என்று கையை நீட்டினான் அருள்பிரகாசம். "ஆமாம் உன் மனைவியா இது? ஏதடா பணம் கிடக்கிறதே, வீட்டில் இருக்கிறவங்களைக் கூப்பிட்டுக்கேட்போம் என்று இருக்க வேண்டாம்? பணம் கிடைத்தால் தூக்கிக் கொண்டா ஓடி விடுவது?'' என்றான் அவளைப் பார்த்துக் கொண்டே.

"அது தப்புதான் சாரு! அதுக்குத் தான் அவளை ரெண்டு போட்டேன். அது கிடக்கட்டும் போங்க சாரு! பெட்டியை இப்படிக் கொடுங்க. ஊருக்குப் போறீங்களா? நான் தூக்கிக்கிட்டு வரேன். அதுக்குக் கூலியா இந்தப் பணம் என்கிட்டேயே இருக்கட்டும். எங்கே போவணும் சொல்லுங்க!'' என்றான் அவன். பெட்டியை அருள் பிரகாசத்திடமிருந்து பறித்துக் கொண்டே.

"இந்தப் பெட்டியைத் தூக்கிக்கிட்டு வர ஒரு ரூபாயா கூலி? இதோ பஸ்ஸ்டாண்டு வரைக்கும் தான்பா!'' என்றான் அருள்பிரகாசம்.

"இந்தப் பணத்தை உங்ககிட்டே கொடுத்துட்டா 'அவன்' என்கிட்டே சண்டைக்கு வந்துடுவா சாரு! வாங்க 'போவோம்!'' என்றான் அவன்.

"ஐயோ அந்தச் சிறுக்கிக்கு கொடுக்கிறதுக்காகவா நான் காசு சேர்த்து வைச்சேன்?'' என்று கதறினாள் அவள்.

"நீ பணத்தை இந்த பொண்ணுகிட்டேயே கொடுப்பா'' என்றான் அருள்பிரகாசம் தயங்கியபடி.

"இவளுக்கு ஏன் சாரு காசு பணம் எல்லாம்? போட்ட சோற்றைத் தின்னுட்டு கிடக்க வேண்டியது தானே வம்பு தும்புக்கு வராமே! அவளோட சண்டை போட்டு கிட்டு இவ என்ன ரகளை பண்ணுறா வீட்டிலே! இவ மூஞ்சிலே முழிச்சாலே பாவம் சாரு! நீங்க வாங்க என்று நடந்தான்!'' அவன்.

அவன் பின்னால் பேச்சற்று நடந்து கொண்டிருந்த அருள்பிரகாசம் தன்னுடைய அந்த ஏழைத் தங்கையைத் திரும்பிப் பார்த்தான்.

அவளோ நின்ற இடத்தை விட்டு அசையாமல் தேம்பித் தேம்பி அழுது கொண்டிருந்தாள். ●

---

நான் ஆண்–பெண் உறவுகளை மையமாக வைத்துச் சில கதைகள் எழுதியிருக்கிறேன். என்னுடைய தொடக்க கால கதைகள் பலவும் பச்சையான கதைகளாக இருந்த தென்றுஎன்னுடையநல்லநண்பர்களும் விமர்சகர்களும் முகம் சுளித்ததும் உண்டு. பிராய்டின் மனவியல் சித்தாந்தத்தின் சில கூறுகளை அவை சரியா தவறா என்று பார்க்காமல் நான் கதைகளை எழுதினேன். அவைகளைப் பற்றி என்னால் இந்த அளவுக்குத் தான் கூறமுடியும். இவை வாழ்க்கையை வழி மறித்து நின்ற ஒரு கட்டத்தில் அதை எதிர்க்கக் கூடிய எண்ணம் உண்டாயிற்று. சமூக அறிவியலோ, தெளிவான சமூக உணர்வோ சரியான வழி காட்டும் சூழலோ எதுவும் அன்று எனக்கு இல்லை என்றும் கூறலாம். இவ்வகை அடிப்படையான விஷயங்களை படித்துப் புரிந்து கொண்டே எழுதினேன் என்ற போதிலும் வயதும் நம் சமூக ஆண் பெண் உறவுகளில் நிலவும் குறை பாடுகளில் நான் கண்ட போக்குகளுமே அவ்வகை பச்சை யான கதைகளை நான் எழுதக் காரணம் என்று கூறுவதில் தவறேதுமில்லை. இதற்காக நான் வெட்கப்படப் போவதில்லை. அக்கதைகளை நான் நேசிக்கவும் செய்கிறேன்—

தகழி (குறிஞ்சிவேலன் மொழிபெயர்ப்பில்)

---

# தோற்றவர்கள்

நகரவிளக்கின் வெளிச்சத்தில் அந்தக் கடிதத்தை எழுத்துக்கூட்டிப் படித்தாள் துரையம்மா. வாயிற்படி அருகில் அவளுடைய தாய் உறக்கத்தில் ஆழ்ந்து நீண்ட நேரமாகி விட்டது பொழுது சாய்ந்து, இரவு வருவதற் குள்ளே ஊர் அடங்கிவிட்டிருந்தது. தொலைவில் எங்கோ பேச்சுக் குரல் கேட்டது கூட முன்பே ஓய்ந்து விட்டது. நாலைந்து வீடுகளுக்கு அப்பால் மாட்டுக் கொட்டிலிருந்து அடிக்கடி மணியோசை மட்டும் வந்தது. இவளுக்கு உறக்கம் எட்டாத தொலைவில் இருந்தது. சில நாட்களாகவே அது அவளை விட்டு விலகிச் சென்று கொண்டிருந்தது.

அன்று மாலையிலிருந்தே அந்தக் கடிதத்வதப் படிக்க வேண்டுமென்ற ஆவல் அவள் உள்ளத்தை உறுத்திக் கொண்டிருந்தது. வேலையும் ஓடவில்லை. எண்ணமும் ஓயவில்லை. படித்து முடித்தால்தான் அமைதி ஏற்படும் என்று அவள் நெஞ்சம் ஆறுதல் சொல்ல முனைந்தது. ஆனால்—

அந்தக் கடிதம் ஏதோ ஒரு குப்பைக் காகிதத்தில் எழுதப்பட்டிருந்தது. வறுமையில் செழித்த பண்புபோல, எழுத்துக்கள் முத்து முத்தாக—

அதை எழுதியவனே முத்துதானே!

இரண்டாவது முறையாக அந்தக் கடிதத்தைட் படித்தாள் அவள். முன்போல் அவளுக்குத் தடுமாறவில்லை.

மூன்றாவது முறையாகப் படித்தாள். மனப்பாடம் ஆய்விட்டது கடிதம். நான்காவது முறையாக—

'இது என்ன பைத்தியக்காரத் தனம்?'

கொல்லைப்புறத்தில் ஏதோ ஓசை கேட்டது. சற்றுக் கூர்ந்து கேட்டாள் துரையம்மா. கதவு தட்டப்படும் ஓசை. ஒரு விரலால் 'டக் டக்' கென்று தட்டும் ஓசை. பரபரப்புடன் எழுந்தாள் அவள்.

கடிதத்தில் குறிப்பிட்டிருந்த வண்ணமே முத்து வந்திருக்கின்றான்!

என்ன இருந்தாலும் அவன் அப்படி நடந்து கொள்ளக் கூடாது. ஆனால் தவறு அவனுடையதா?

மஞ்சளும், இஞ்சியும், மிளகாயும், வாழையும் வளம் பெருக்கியிருக்கும் கொல்லைக்கு மாலையில் தண்ணீர் இறைப்பது அவனுடைய வழக்கம். தண்ணீருக்காக அவன் வெட்டி வைத்திருக்கும் ஊற்றில், மாலைக் காலத்தில், தண்ணீர் எடுக்கச் செல்லுதல் அவளுடைய வழக்கம்.

அவன் தனியாகவே ஏற்றம் இறைப்பான்; பாத்திக் கட்டுவான்; மடை கோலுவான். அவன் தன்னந்தனியனாய் அந்த ஊருக்கு உழைப்பை நம்பி உடலை எண்ணி வந்தவன். அவனைப் பொருத்த வரை கவலை இல்லாமல், அமைதியான வாழ்வை ஏற்படுத்திக் கொண்டவன். மண் குடிசையில் பெருவாழ்வு நடத்துபவன். அது அவளுக்கு மட்டும் பிடித்திருந்தது. எனவே—

அவள் தனியாகவே குடத்துடன் அங்கே வருவாள். அவனுக்குத் தெரியாமல் நின்று அவனை நோக்குவாள். அவன் அவளைப் பார்த்து விட்ட நேரத்தில் குடத்தில் தண்ணீரை நிரப்பிக் கொள்வாள். உள்ளத்திலும் உவகையை நிரப்பிக் கொள்வாள். நடக்கத் தெரியாதவள்

போல மெல்ல மெல்ல நடப்பாள். ஒன்றும் வேலையற்றவள் போல அங்கும் இங்கும் பார்த்துக் கொண்டு அசைந்தாடி நடப்பாள்.

"டக் டக் டக்"

தாழைத் திரும்பிப் பார்த்தாள் துரையம்மா. அவளுடைய தூக்கம் எளிதில் கலைந்துவிடாது. முத்து கதவைத் தட்டும் ஓசை அவளை அணுகாது. கொல்லைக் கதவின் அருகில் மெல்லச் சென்றாள்.

மரக்கதவு—வெளியில் அவன்; உள்ளே அவள்; அரண் போல ஏதோ ஒன்றைக் காத்து நிற்கிறது அந்தக் கதவு. அவள் விரும்பாமலே அந்த அரண் ஏற்பட்டிருக்கிறது. இயற்கையின் அறம் அது! தாழ்ப்பாளை கொஞ்சம் நீக்க வேண்டியதுதான்..

அவள் அப்படி நடந்து கொள்ளக் கூடாது. ஆனால் தவறு அவளுடையதா?

முத்துவுக்கு உடல்தான் அழகாக வளர்ந்திருக்கிறது. வளர்ந்த இளம் தென்னை போல இருக்கிறான். ஆணின் அழகை துய்க்கக்கூடாது என்பார்கள். அவனுடைய உள்ளத்தில் உண்மை செங்கோலோச்சவில்லை. அதிலே நுண்மை இல்லை. அவனுடைய உள்ளம் வலிமை உள்ளதாக இருந்தால் உணர்ச்சி வயப்பட்டிருப்பானா? கோழை போலக் கடிதம் எழுதி வைத்துவிட்டு, 'அதோ அந்தக் கல்லை புரட்டிப் பார்!' என்று அவளிடம் கூறி விட்டு, எதிரில் நிற்கவும் மாட்டாமல் சென்று மறைந்திருப்பானா?"

"அவளிடம் அவன் ஒரு வார்த்தை நின்று பேசினால் என்ன? 'துரையம்மா!' என்று அன்போடு ஒரு முறை அழைத்தால் என்ன? இங்கே தண்ணீர் எடுக்க இனிமேல் வராதே!' என்று பொய்யான சினத்தோடு அவளைக்

கடிந்து கொண்டால் என்ன? குப்பைக் காகிதத்தில் கடிதம் எழுதி விட்டான்; கடிதம்; அதைத்தான் அவள் கொளுத்தி விட்டாளே! அதுவே போதும் அவனுக்கு; அவன் மானத்தை வாங்கி விட்டாள் அவள்!

"ஆனால் – ஆனால் – கடிதம்தானே கரியானது? அதனுடைய உயிர்? அது அவளுடன் ஒன்றிக் கலந்து விட்டதோ?"

"அந்த இரண்டாவது கடிதத்தைத் திருப்பிப் பார்க்காமலே அவனுக்கு எதிரில் அதைக் கிழித்தெறிவாள். அப்போது அவனைப் பார்க்க வேண்டுமே! பாவம்—!"

அலுங்காமல் தாழ்ப்பாளை நீக்கினாள் துரையம்மா. திரும்பி தாயைப் பார்த்தாள். அவள் புரண்டு படுத்திருந் தாள்; நல்ல உறக்கம். மகளின் நாடகம் அவளுக்கு எப்படித் தெரியும்?

ஓசை எழாமல் கதவைத் திறந்தாள் துரையம்மா. கொஞ்சம் வேகமாக திறந்து விட்டால், செக்கு போல் ஓசை எழுப்பி விடும் அது. மெல்ல திறந்தாள். அடிவானத்தில் படுக்கை விரித்துக் கொண்டிருந்த பிறை நிலவின் மங்கிய ஒளியையும் மரம் மட்டைகள் விழுங்கி விட்டிருந்தன. அவளை அச்சம் சூழ்ந்தது. கதவைத் திறந்தவுடன் முத்துவின் அருகில் அவள் நிற்க நேரிடும். அப்போது அவன் —

மலர்ந்த கண்களுடன் எங்கும் கூர்ந்து பார்த்தாள். அவனைக் காணவில்லை. 'போய்விட்டானோ?'

சிறிது தூரம் நடந்தாள். அச்சத்தைப் பற்றி அவளுக்கு நினைவு இல்லை. திரும்பி வீட்டிற்குள் செல்ல அவளுக்கு மனமில்லை. எதையோ இழந்து விட்டாள்; மனம் வறிதாகி விட்டது; ஏக்கம் கவ்விக் கொண்டது; ஒரு ஆற்றுப் பூவரக மரத்தில் சாய்ந்தபடி நின்றாள்.

மூன்று நாட்களுக்கு முன்பு மேலண்டை வீட்டுச் சின்னகுட்டி விளையாட்டாகத் துரையம்மாவின் தாயிடம் சொன்னாள்: 'அம்மா உன் மகள் முத்துவைக் கட்டிக் கொள்ள போகிறாளாம். அவருக்கும் அவள் மீது கொள்ளை ஆசையாம் —'

அவர்களுடைய பேச்சை அடுப்படியில் இருந்தபடி துரையம்மா கேட்டுக் கொண்டிருந்தாள். ஒரு புறம் சின்னக் குட்டியின் மேல் அவளுக்கு ஆத்திரம்; மற்றொரு புறம் தாயின் பதிலை எதிர்பார்க்கும் ஆர்வம்; இரண்டும் அவளை நசுக்கிக் கொண்டிருந்தன.

அவர்களுடைய அம்மா சொன்னாள்: "முத்துவையா? அவனுக்குச் சொந்தத்தில் என்ன இருக்கிறது? ஒரு மஞ்சள் கொல்லையும் ஒரு கூரை வீடும்தான். அவனை விடப் பெரிய பணக்காரன் என் மகளுக்குக் காத்திருக்கிறான்—"

பெற்றவள் அப்படித்தான் ஆசைப்படுவாள். ஆனால் துரையம்மா சொன்னால் அவள் மீண்டும் மறுத்துரைப் பாளா, என்ன? மறுத்தாலும் அவளா கேட்பாள்? துரையம்மாவா கேட்டுக் கொண்டு சரி என்று தலை ஆட்டிவிடுவாள்?

சரசர வென்று ஓசை கேட்டது. "முத்துதானா? ஆமாம். முத்துவேதான்!" கறுப்புத்துண்டால் முண்டாசு கட்டி யிருந்தான். கையில் குறுந்தடி வைத்திருந்தான்.

மெல்ல நகர்ந்தாள் துரையம்மா. அவனைக் கவனிக் காதவள் போல நகர்ந்தாள். அவன் எதிரில் நிற்க அவளுக்கு பிடிக்கவில்லை. பிடிக்கவில்லையா? நாணம் அவளை ஆட்கொண்டதா?

"துரையம்மா!" குரல் அடைத்துக் கொண்டது போல் அவன் அழைத்தான். முதன் முதலாக, அவளுடைய நெடுநாள் கனவின் குரல் போல் அழைத்தான்.

அவளுக்குச் சினம் பற்றிக்கொண்டு எரிந்தது. தோல்வி மனப்பான்மை அவளை வீழ்த்தியது. அவன் கடிதம் எழுதினான்; நள்ளிரவில் கதவைத் தட்டினான். அவள் காத்திருந்தாள்; கதவைத் திறந்தாள். அவனோடு உறவு கொண்டாடினாள். "இவ்வளவுதானா? ஒரு கடிதத்திற்கு இணங்கிக் கதவைத் திறந்து விட்டாளா? அவனுடைய அழைப்பைத் தேடி அவளா ஓடினாள்? துரையம்மாவா—? வெட்கம் வெட்கம்!"

"எங்கே வந்தாய்? இப்படி நடந்து கொள்வது முறையா? திருடன் போல நடுஇரவில் —"

"நான் திருடன் என்றால் நீ திருடி!"

"என்ன சொன்னே?"

"என் மனசைத் திருடியவள் நீ"

"நாடகமா ஆடறே?"

"ஏன் இரைச்சல் போடறே? மெல்லப் பேசேன்!"

"ரகசியம் பேசச் சொல்கிறாயா?"

"துரையம்மா!"

"உன்னுடைய கோபம் என்னை என்ன செய்யும்?"

"என்னுடைய மனசு உனக்குத் தெரியாதா துரை யம்மா? இன்னுமா என்னை நீ புரிந்துகொள்ளவில்லை! நாம் பேசிக் கொண்டிருப்பதில் என்ன தவறு?"

"நன்றாயிருக்கிறதே!"

"துரையம்மா!"

"அம்மாவை எழுப்பிச் சொல்லட்டுமா?"

"உனக்கு என்ன பைத்தியமா?"

"நானா பைத்தியம்? நீ தான் பைத்தியம் போலக் கடிதம் எழுதினாய். கண்ணைக் காட்டிக் கையைக் காட்டி— இப்படியா வந்து கதவைத் தட்டுவது? என்ன நினைத்துக் கொண்டு இங்கே வந்தாய்? அம்மா விழித்துக் கொண்டிருந் தால் உன்னைக் கொண்டு போய் அவர்கள் எதிரில் நிற்கச் செய்திருப்பேன்! என்ன நினைத்து விட்டாய்? என்னை அவ்வளவு கேவலமாகவா நினைத்துக் கொண்டிருக்கிறாய்? இதைப் போன்ற வேலையெல்லாம் வைத்துக்கொள்ளாதே!"

"சே சே! நீ இவ்வளவு கீழ்த்தரமானவள் என்று எனக்குத் தெரியாதே! சத்தம் போடாதே போய் விடுகிறேன்-"

அவன் விரைவாகப் போனான். அவள் திகைத்து நின்றாள்.

எத்தனை நாட்கள்! இரவும் பகலும் அவனையே சுற்றும் எண்ணம். உழைப்பிலும் ஓய்விலும் அவனைக் கொடிபோல் பற்றி நிற்கும் உள்ளம். கனவிலும் நினைவிலும் கற்பனை ஓட்டங்களிலும் அவனைத் தழுவாமல் தழுவிக் கிடக்கும் அன்பு மனம் அத்தனையும் ஓய்ந்துவிட்டனவோ? ஒழிந்து போயினவோ?......

அவள் கண்கள் கலங்கின; அவளால் அடக்கமுடிய வில்லை. முன்தானையால் முகத்தைமறைத்துக்கொண்டாள். "அவள் அழுவதை யார் பார்க்கிறார்கள்? ஏன் முகத்தை மறைத்துக் கொள்ள வேண்டும்? அவளுக்கு ஆறுதல் கூற யார் இருக்கிறார்கள்? அவளுடைய கண்ணீரைத் துடைத்து ஆறுதல் சொல்லும் அன்னை இந்தக் கண்ணீருக்கு வரவேற்பு அளிப்பாள்; ஆறுதல் கூற முன்வரமாட்டாள்; கடிந்து கொள்ளவே முன் நிற்பாள். அவளுக்கு வேறு

துணை யார்? அவளுடைய நெஞ்சமே அவளுக்குத் துணை யாகவில்லை. பிறகு யார் அவளுக்குத் துணையாவார்கள்?

சிட்டு போலப் பறந்தாள் துரையம்மா. "அவன் நெடுந் தொலைவு போயிருக்க மாட்டான். தென்னந்தோப்பைக் கடந்திருக்க மாட்டான். அவன் தெருமுனையை இதற்குள் அடைந்திருக்க முடியாது.........அதோ போகிறான் அவன் தான்!

"என்மேல் கோபமா? என்னை மன்னித்து விடு!"

"சீ! நீயும் ஒரு பெண்ணா?" பளார் என்று அவளுடைய தளிர் போன்ற மென்மையான கன்னத்தில் அறைந்து விட்டான் அவன்.

"ஆ!"

'அவன் கோழையல்ல. மெலிந்த மனமுடையவன் அல்ல. வாய்மையற்றவன் அல்ல. நெஞ்சில் உரமற்றவன் அல்ல—'

அவன் தோள்களை ஆதரவாக அவளுடைய கைகள் பற்றிக் கொண்டன. அவளுடைய தலை கிறு கிறுத்தது. நினைவு சிதறியது.

அந்தப் பிடியிலிருந்து விடுதலை பெறும் வலிமை அவளுக்கு இல்லை. அவள் தரையில் நழுவி விழாமல் இரு கைகளாலும் தாங்கிக்கொண்டான்.

அவர்களுடைய தலைக்கு மேல் இரவு வேளைகளில் பயணம் செய்யும் ஓர் இணை நாரைகள் இன்பமாகக் கத்திக்கொண்டு, பறந்து கொண்டிருந்தன. ●

# நான் பெண்ணில்லையா?

அந்த நாடக ஒத்திகையின் போதுதான் இரத்தினம் மாலதியைச் சந்தித்தான். அவனுக்கு நகராட்சி மன்றத்தில் எழுத்தர் வேலை. நண்பர்களோடு சேர்ந்து நாடக மன்றக் குழுவில் நடிகனாகவும் இசையமைத்துப் பாடுபவனாகவும் பங்கேற்று மாலதிக்குப் பாட்டுப் பயிற்சி அளித்தான்.

மாலதியை அந்த நாடகக் குழுவில் சேர்த்ததே ஒரு கதை. அவளுடைய அண்ணனுக்கு வேலை கிடைக்காததால் குடும்பம் வறுமையில் வாடிக் கொண்டிருந்தது. அவளுடைய தாய்க்கு அவளை நாடகக் குழுவுக்கு அனுப்புவதில் மன ஒப்புதலே இல்லை. ஆனால் குழுவின் செயலாளர் அந்தக் குடும்பத்துக்குப் பழக்கமானவர். அவருடைய வற்புறுத் தலால் மாலதி நாடகக் குழுவில் சேர்ந்து நடித்தாள். ஆனால் ஒரு நிபந்தனை. அவள் அவளுடைய அண்ணனோடுதான் சேர்ந்து நடிப்பாள். கதாநாயகன் கதாநாயகியாக — அண்ணனும் தங்கையும். அதற்கு ஒப்புக் கொண்டனர் நாடகக் குழுவினர்.

அன்று ஒரு நாள் ஒத்திகையின் பொழுது இரத்தினத்தின் எழில் ததும்பும் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள் மாலதி. அவனுடைய அழகும் சிரிக்கச் சிரிக்கப் பேசிய முறையும் அவளை நெகிழ வைத்தன.

'இவனோடு கதாநாயகியாக நடிக்கும் வாய்ப்புக் கிட்டாதா?' என்று ஏக்கம் துளிர் விட்டது அவளுக்கு. அதனுடைய விளைவு தன் அண்ணனோடு நடிக்கும் காட்சி

களில் அவள் மரக்கட்டையாய் நின்றாள். இரத்தினம் வரும் காட்சிகளில் அவளுடைய நடிப்பு சுடர் விட்டது. அதைப் பற்றி நாடக இயக்குநர் குறைபட்டுக் கொண்ட போது அவள் மெல்லச் சாடைமாடையாய்ச் சொல்லிவிட்டாள்; இரத்தினத்தை கதாநாயகனாக மாற்றி விடும்படி.

அதற்கு முதலில் அவளுடைய அண்ணன் இணங்க வில்லை. என்றாலும் பலருடைய வற்புறுத்தலால் அவன் தன்னுடைய பாகத்தை இரத்தினத்துக்குக் கொடுத்துவிட்டு இரத்தினத்தின் பாகத்தைத் தான் ஏற்றுக்கொண்டான். அதற்குப் பிறகு அவள் நடிப்பு முறையில் பல மாறுதல்கள்.

தேவை இருந்ததோ இல்லையோ,மாலதி,இரத்தினத்தை நெருங்கி நடித்தாள்; தொட்டுப் பேசினால் போதும் என்று சொல்லிக் கொடுத்த இடங்களில் அவள் கட்டிப்பிடிக்கவும் தயாராய் இருந்தாள்!

இரத்தினத்துக்குப் பெருமை. அவனுடைய இளமை வேகத்துக்கு ஒரு துணை. உணர்ச்சித் துடிப்புக்கு ஒரு வடிகால். இன்ப லயிப்புக்கு ஒரு புகல் கிடைத்து விட்டது!

அவனும் தன்னை மறந்தான். அவளோடு நடித்த கட்டங்களில் உணர்ச்சிபூர்வமாக ஈடுபட்டான். அதனால் அவனுடைய நடிப்பு சிறப்பாக அமைந்திருந்தது. அவனுக்குப் பாராட்டும் கிடைத்தது.

இரத்தினமும் மாலதியும் நடித்த காதல் காட்சிகளும் அவர்கள் இணைந்து பாடிய பாடல்களும், கைத்தட்டல் பெற்றன. மாலதி–இரத்தினம் இணை மற்றவர் கண்களுக்குக் காதலர்கள் போலவே தோன்றினர். மாலதியைப் பொறுத்த வரை இனி இரத்தினம்தான் அவளுக்கு வாழ்க்கைத் துணைவன். அதை அவள் தன் அன்னையிடமும் அண்ணனிடமும் அரைகுறையாகத் தெரிவித்தபோது அவர்

களும் அதற்குத் தடை விதிக்கவில்லை. எச்சரிக்கை மட்டும் செய்தார்கள், ஏமாந்து போக வேண்டாம் என்று. அவர் களுடைய நிலைமைக்கு இரத்தினம் போல ஒரு நல்ல வேலையில் இருக்கும் அழகிய மாப்பிள்ளை எங்கிருந்து கிடைக்கப் போகிறான்?

மாலதி இரத்தினத்தைத் தனிமையில் சந்தித்தாள்.

"எங்கம்மா எங்கிட்டே கேட்டாங்க. என்னை ஏமாத் திட்டு நீ வேறே ஆளோடே நடிக்கிறியா! நான் உன்னை உன் அண்ணனோடேதானே நடிக்கச் சொன்னேன்?' அப்படின்னு."

"கேட்க வேண்டிய கேள்விதானே?" அவன் குறும்பாகச் சிரித்துக் கொண்டான்.

"நான் என்ன பதில் சொன்னேன் தெரியுமா?"

"என்ன சொன்னே?"

"அவர் வேறே யாரும் இல்லே. நம்ம முனிசிபாலிடி கிளார்க்குதான். ரொம்ப நல்லவர் ரொம்ப அழகாயிருப்பார். அருமையா நடிப்பார்! அப்படின்னு சொன்னேன்."

"ஓ?"

"அதுக்கு அவங்க என்ன சொன்னாங்க தெரியுமா?"

"சொல்லு."

"அவரை அப்படி வருணிக்கிறியே, உனக்கு அந்தப் பையன் மேலே ஆசைன்னு சொல்லு? அப்படின்னாங்க."

"ஐயையோ!"

"ஐயையோவாவது, சொன்னது தப்பா? நான் உங்களை..." செல்லமாகச் சிணுங்கினாள்.

அவன் பதில் சொல்லவில்லை.

"என்ன பேசாம இருக்கிறீங்க?"

"என்னை என்ன செய்யச் சொல்றே?"

"என்னை உங்களுக்குப் பிடிக்கலையா? நான் சொன்னது தப்பா? உங்களை எங்கம்மா கேட்டுச் சொல்லச் சொன்னாங்க."

அவள், அவன் முகத்தையே ஆவலுடன் நோக்கினாள்.

"என்ன கேட்கச் சொன்னாங்க?"

அவளுக்குச் சிரிப்பு வந்தது.

"உங்களுக்கு எப்போது திருமணம் என்கிறதைத்தான் கேட்கச் சொன்னாங்க."

"எனக்கா? எங்க அப்பாவைக் கேட்கணும்!"

"உங்களுக்குத் தெரியாதா?"

"உனக்கு எப்போது திருமணம் என்கிறது உனக்குத் தெரியுமா? உங்கம்மாவைத் தானே கேட்கணும்?"

நாடக வசனமாக இருந்தது அவர்கள் பேச்சு.

"சொல்ல மாட்டீங்களா?" மாலதி மெல்ல அவன் கையைப் பற்றிக்கொண்டு கெஞ்சினாள்; அவள் குரல் இழைந்தது. உதடுகள் துடித்தன.

"எங்க அப்பாவைக் கேட்டுக்கிட்டுச் சொல்றேன், மாலதி! உண்மையாகத்தான்—" அவளுடைய கையை அழுத்தினான்.

"நீங்களே கேட்பீங்களா?"

"வேறே யார் கேட்பாங்க?"

இருவரும் சேர்ந்து குலுங்கச் சிரித்தார்கள்.

மற்றொரு நாடகத்திற்கு ஒத்திகை நடக்க வேண்டியிருந்தது. எல்லாருடைய கவனமும் அதில் இருந்தது. ஆனால், மாலதியின் கவனம் மட்டும் இரத்தினத்தின் மேலேயே இருந்தது.

அன்று ஒத்திகையின் தொடக்கம். மாலதி இரத்தினத்தைச் சுற்றிச் சுற்றி வந்தாள். அவள் பார்வை முழுவதும் அவன் மீதே மொய்த்திருந்தது. அவனுக்காகவே அவள் பேசினாள்; அவனுக்காகவே அவள் பாடினாள்; அவனுக்காகவே அவள் நடித்தாள். ஒத்திகை எப்போது முடியும், இரத்தினத்தைத் தனிமையில் எப்பொழுது சந்திக்கலாம் என்பதிலேயே அவள் நினைவும் கருத்தும் நிலைபெற்றிருந்தன.

நேரம் ஆகிக்கொண்டிருந்தது. இரத்தினம் சொன்னான்: “சீக்கிரம் ஒத்திகையை முடிங்க. நான் நாலு மணிக்குப் போயாகணும்:”

“எங்கே இரத்தினம்?” என்றார் இயக்குநர்.

“நாலுமணிக்குப் பெண் பார்க்கப் போகணும்னு எங்க அப்பா சொல்லி இருக்கிறார்.”

“ஓ! பெண்பார்க்கவா? அது எங்கே?” நண்பர்கள் கத்தினார்கள்.

“இப்படிக் கலாட்டாப் பண்ணுவிங்கன்னுதான் சொல்லாமே இருந்தேன். கீழ வீதியிலே நெல் மண்டி சபாபதி இருக்கிறாரே, அவருடைய இரண்டாவது பெண்ணு. இப்போ பி. ஏ., படிச்சிக்கிட்டு இருக்கு. ரிசல்ட் வரதுக்கு முன்னாலே கல்யாணத்தைப் பண்ணி வைச்சுடப் பார்க்கிறாரு—”

அதைப் பெரிய நகைச்சுவையாக எடுத்துக்கொண்டு அந்தக் கூட்டமே சிரித்தது.

முகத்தைத் திருப்பிக் கொண்ட மாலதி ஒத்திகை முடியும் வரை எப்படித்தான் பொறுத்திருந்தாளோ? கடைசியில் இரத்தினத்திடம் ஓடி வந்தாள்.

"பெண் பார்க்கவா போறீங்க?" கண்ணருவி பாய்ந்தது.

"ஆமாம் மாலதி!" என்றான் அவன்.

"அப்படியானால் நான் பெண்ணில்லையா?"

"நீ நடிகையாச்சே!"

அவன் சிகரெட்டின் புகையைக் கடைசியாக இழுத்து விட்டு அதைக் கீழே போட்டுச் செருப்புக் காலால் தீயை அணைத்து விட்டுத் திரும்பிப் பார்க்காமல் போய்க் கொண்டிருந்தான். ●

---

வெற்று வெளியிலிருந்து கற்பனையை வடிக்கமுடியாது. ஒரு குணவியல்பு உயரமானவனாக இருந்தால் அவன் உயரமானவனாகவே படைக்கப் பெறுதல் வேண்டும். அத்தகைய உண்மையின் மீது உருவாகும் கற்பனையின் குணப்படைப்பே கலைத்தன்மையுடையது—

**சாமர் செட்மாம்**

---

# கையில் ஒரு தொழில்

பெருமாளுக்கு வெட்கமாகவும் கூச்சமாகவும் இருந்தது. "முடியாதுப்பா—" என்று சொல்லி விட்டுக் கடையை விட்டு வெளியேறினான்.

"டேய்! நான் சொல்றதைக் கேளுடா—" மாரிசாமி கத்தினார்.

"நான் எம்ப்ளாய்மெண்ட் ஆபீசுக்குப் போறேன்!" என்றான் விறைப்பாகப் பெருமாள். அவனுடைய மஞ்சள் டைட் பேண்டும், பூப்போட்ட முழுக்கைச் சட்டையும் அவனை இறுக்கின.

"போ போ! உனக்கு அங்கே வேலை வைச்சுக்கிட்டு அழைக்கிறான். போன உடனே தூக்கிக் கொடுத்துடுவான்!"

"இந்தத் தடவை தாழ்த்தப்பட்ட பிற்பட்ட வகுப்பினர்க்கு மட்டும் தான் கொடுக்கப் போறாங்க. வேலை வாங்கிக் காட்டுறேன்!"

"தாழ்த்தப்பட்டவங்க பிற்பட்டவங்க என்றாலும் கொஞ்ச பேரா இருக்கிறாங்க? எவ்வளவு பேருக்குத்தான் அவங்க வேலை தேடிக் கொடுக்க முடியும்? வேலை கிடைக்கும் போது கிடைக்கட்டுமேடா! அது வரைக்கும் இங்கே என்னோட இருந்து வேலையைக் கற்றுக் கொள்ளேன்—"

"எனக்கு இந்த வேலை பிடிக்கலே—"

"வேலையை நீ பிடி. அப்புறம் உனக்கு வேலை பிடிக்கும். எல்லோரும் அவங்கவங்களுக்குப் பிடிச்ச வேலைக்கா போய்ச் சேருறாங்க? வயிற்றுப் பொழைப்புக்கு எந்த வேலையா யிருந்தால் என்னடா? இங்கே வேலை செய்யறதைவிட வெளியிலே உத்தியோகத்துக்குப் போய் ஏராளமா சம்பாதிச்சுக் கிழிச்சுடுவியா?"

"எனக்குச் சம்பளம் குறைச்சலா இருந்தாலும் மதிப் பான வேலைதான் வேணும்—"

"வேலையிலே மதிப்பு என்னடா வந்திருக்கு?—" இன்னும் என்னவோ சொல்ல வந்த தந்தையின் பேச்சு தன் செவியில் தாக்காத தொலைவுக்குச் சென்றுவிட விழைந்தவன் போல விரைந்தான் பெருமாள்.

மாதங்கள் மூன்று கழிந்தன.

பெருமாள் அரசாங்க வேலை தேடித் தேடி அலுத்து விட்டான். எந்தச் சலுகையாலும் அவனுக்கு வேலை கிடைக்கவில்லை. சலுகைகளுக்குள்ளும் போட்டிகள், சிபாரிசுகள், கையூட்டுகள் — அதாவது கைக்குத் தீனி ஊட்டுவது என்று பொருள் போலும். இரண்டு மூன்று முறை வீட்டை விட்டு ஓடிப்பார்த்தான். பணம் தீர்ந்ததும் திரும்பி வந்தான். அவனோடு படித்தவர்கள் சிலர் ஆங்காங்கே வேலைகளில் தொற்றிக் கொண்டிருந்தார்கள். சிலர் ஊரைச் சுற்றிக் கொண்டு காலத்தைப் போக்கினார்கள். கல்லூரிக்குச் சென்றவர்களும் அங்கே குட்டிக் கரணம் போட்டுப் பிறகு வேலைக்கு அலைந்தவர்களும் உண்டு. யாரோ ஓரிருவர் தத்தம் வயல் வெளி வேலைகளை, கடைகளை, சிறு கைத் தொழில்களைப் பார்த்துக் கொண்டு அரசாங்க வேலை நினைப்பு அற்றுப் போய்விட்டவர்களாகவும் இருந்தார்கள்.

மாரிசாமி மறுபடியும் மகனைக் கூப்பிட்டுக் குடைய ஆரம்பித்தார்.

“பேசாமல் வேலையைக் கற்றுக் கொண்டு கடையிலே இருடா. இதைவிட என்ன தொழில் வேண்டியிருக்கிறது? வேறே வேலைக்குப் போனாலும் என்ன சம்பாதித்து விடப்போறே நீ?”

பழைய கேள்விதான்; பழைய அறிவுரைதான். ஆனாலும் பெருமாளுக்கு ஓரளவு நெஞ்சில் தைத்தது.

“இங்கே என்னோட படிச்சவங்க எல்லாரும் இருக்கிறாங்க அப்பா! அவங்களுக்கு எதிரே—”

“அவர்களுக்கு எதிரே கடையிலே இருந்து வேலை செய்யக் கூச்சமாயிருக்கா?”

“அவங்களே இங்கே வந்து முடிவெட்டிவிடச் சொல்லு வாங்க—”

“சொன்னா என்ன?” என்று மாரிசாமி கேட்டாலும் பெருமாள் சொல்வதிலும் ஓரளவு நியாயம் இருப்பதாகப் பட்டது அவருக்கு.

“சரி. அப்படியானால் ஒன்று செய்! நீ கடலூருக்குப் போய் உன் மாமா கடையில் இருந்து வேலையைக் கற்றுக் கொள். அதற்கு ஏற்பாடு செய்கிறேன்,” என்றார்.

பெருமாள் ஒப்புக் கொண்டான்.

கடலூரில் அவனுடைய பயிற்சி ஆரம்பமாயிற்று. தொடக்கத்தில் இருந்த கூச்சம் மாறிவிட்டது. மெல்ல மெல்ல அவன் கைத்திறன் வளர்ந்தது.

ஒருநாள் கடைக்கு வந்தான் ஒருவன். அவனைக் கண்டதும் திடுக்குற்றான் பெருமாள். அவன் உடம்பு குறுகியது. பார்வை திரும்பியது.

"அடே பெருமாள், நீயா!"

"ஓ முத்துவா!"

தன்னோடு படித்தவன், தன்னைப் போலவே மதிப்பெண்கள் பெற்றுத் தேறியவன் இப்படித் தன்னிடமே முடிவெட்டிக் கொள்ள வந்திருக்கிறான்; வெட்டிக் கொண்டதும் கூலிக்காசைக் கொடுத்துவிட்டு—

"வேலைக்கு எதுவும் முயற்சி பண்ணலேயா?" என்று கேட்டான் முத்து.

பெருமாளுக்கு ஆத்திரமாக இருந்தது.

"இல்லைய்யா!"

"தொல்லை இல்லாமே இந்த வேலைக்கு வந்துட்டியோ?"

"ஆமாம்!" என்றான் அழுத்தமாக எரிச்சலுடன்.

முத்துவின் முகம் சாம்பியது.

"உன்பாடு பரவாயில்லேய்யா!" என்றான் அவன்.

பெருமாள் அவனை ஏறிட்டு நோக்கினான்.

"உங்களுக்கெல்லாம் சலுகையும் இருக்கு. வேலை கிடைக்கலேன்னா தொழிலும் இருக்கு. வயல்வெளி வேலையோ எந்த வேலையோ உங்களாலே முடியுது. நான் முற்பட்டவங்க 'லிஸ்ட்'. சலுகையும் கிடையாது. வேறே தொழில்களும் தெரியாது. தெரிந்தாலும் அதிலே ஈடு பட்டால் இழிவாக நினைக்கிற கூட்டத்திலே சிக்கிகிட்டு தவிக்கிறேன். என்ன செய்யறது? இதோ முடிவெட்டிக் கொள்ளக் காசு தேடுறதுக்குள்ளே நான் பட்டபாடு!"

பெருமாளுக்கு இரக்கமாக இருந்தது முத்துவின் நிலைமையைக் கண்டு.

அவனுக்குப் பெருமையாகவும் இருந்தது தன் நிலைமையை உணர்ந்து. அவனால் ஒரு நாளைக்குப் பத்து ரூபாய்க்கு மேல் சம்பாதிக்க முடியும் சராசரியாக.

"முத்து! அடுத்தபடியாக நீ உட்கார். நான் முடிவெட்டி விடுறேன். நீ காசு ஒன்னும் கொடுக்க வேணாம்!" என்றான் அவன்.

பெருமாள் முத்துவுக்கு முடிவெட்டிக் கொண்டிருந்தான். "பெருமாள்," என்றான் முத்து மெலிந்த குரலில்.

"என்ன முத்து?"

"பெருமாள்! என் குடும்ப நிலையைப் பற்றி உன்னிடம் விரிவாகச் சொல்ல வெட்கமாயிருக்கிறது. நான் ஒருத்தன் ஏதாவது சம்பாதித்தால்தான் குடும்பத்துக்கு ஆதரவு. எனக்கும் உன் தொழிலைக் கற்றுத் தருகிறாயா? உன் கிட்டேயே வேலைக்கு இருக்கிறேன்."

பெருமாளுக்கு மெய் சிலிர்த்தது. நண்பனை அப்படியே அணைத்துக் கொண்டான்.

அப்பொழுது அவன் முகத்தில் தோன்றிய பெருமித ஒளிக்கு ஈடு ஏது? ●

---

புத்தகங்களைப் படித்துக் கதைகள் எழுதாதீர்கள். வாழ்க்கையைப் படித்து எழுதுங்கள்—

கி. வா. ஜ.

---

# ஆறுதல்

"உனக்கு எப்படி இருக்கு ஒடம்பு? ஊக்கும்!" மயிலாம்பாள் முகமும் நீண்டது; குரலும் நீண்டது. வெறும் குடம் இடுப்பில் அழுத்திற்று. கருமையின் மினுமினுப்பு.

"ஏன்? இப்போ என்ன சொல்லிட்டேன்? இன்னும் ரெண்டு குடம் வேணும்னேன் தண்ணி!" என்றான் சைவர்கள் காபி ஓட்டலின் சர்வர் வெங்கிட்டு. வெற்றிலைக் காவிப் பற்கள்.

முதலாளி கல்லாவில் இருந்தார். இல்லா விட்டால் ஒரு பிடி பிடித்திருப்பாள். தூக்கிச் செருகிவிட்டிருந்த சேலை முழங்காலை விட்டு இறங்கித் தடுத்தது. மீண்டும் அள்ளிச் செருகிக்கொண்டு நடந்தாள். "சண்முகத்தண்ணன் டீக்கடைக்கும் தண்ணி எடுக்கணும். மணி இப்பவே ஒன்பது ஆவப் போவுது!"

"மணி என்னாங்க?" கடைத் தெருவில் சென்று கொண்டிருந்த நாகரிக இளைஞனைக் கேட்டாள். அவனைப் பார்த்ததும் கேட்க வேண்டும் போல இருந்தது.

"எட்டு நாற்பது!"

'அது என்ன நாப்பது? எட்டரை, எட்டே முக்கான்னு புரியும் படியாச் சொல்லக் கூடாதா?' என்று நினைத்துக் கொண்டே பூக்கடைப் பக்கம் சென்றாள்.

மணி சொன்னவனின் பார்வை அவளுடைய குடம் நிலைத்த இடுப்பிலும், பின் தோற்றத்திலும் நிலைத்தது. அவள் திரும்பிப் பார்க்கவில்லை. அழகிய அசைவு.

"ஒரு மொழம் பூ குடு ஆயா" பத்துக் காசை எடுத்துப் போட்டாள் பூக்கடை ஆயாவிடம்.

"காலங்காத்தாலேயே என்ன பூவு?" என்று நீட்டினாள் ஆயா. 'குட்டிக்கு ரொம்ப பவிசுதான். கொண்டையைப், பாரு, கூத்தாடிக் கொண்டை!'

"உனக்கு என்னா? பூவைக் கேட்டா நீ குடுத்துட்டுப் போயேன்."

"பூத்த பூவுதான் வரும்"

"எத்தையாவது குடு. கொஞ்சம் விட்டு அறு."

"கூடவே வைச்சிருக்கேன்," ஆடுதொடா இலையில் மடிக்கப் போனாள் ஆயா.

"நீ ஒன்னும் மடிக்க வேணாம். இங்கே குடு; ஒரு நாழி மடிச்சி கிட்டுக் கிடப்பே. எனக்கு வேலை கெடக்கு."

அது பூவா என்ன? வெடுக்கென்று பிடுங்கிக் கொண்டாள் மயிலாம்பாள். இரண்டாக ஒரே மடி; செம்மை கலந்த கூந்தல் கற்றையில் சுற்றிவிட்டாள்.

"என்னாது? பொடவை கூடப் புதுசு மாதிரி தெரியுது!" ஆயா வாயைப் பிடுங்குவதில் வல்லவள்.

"புதுசேதான். எங்க மாமன் பட்டணத்திலேருந்து எடுத்தாந்திச்சு எனக்காக." பெருமை பொங்கிற்று மயிலாம்பாளுக்கு.

"உனக்கு மொறையா?"

"வைச்சுக்கியேன்." குடத்துடன் நடை போட்டாள் அவள். இப்பொழுது நடையே மாறி விட்டது. புதிதாகப் பட்டுப் புடைவை எடுத்துக் கட்டியவள் போன்ற நடை.

அந்தச் 'சைவாள் காபி ஓட்டல்' வெங்கிட்டுவிடம் சொல்லவேண்டும், அவளுடைய மாமன் பட்டணத்திலேருந்து வந்திருப்பதை. வேறே யாரிடம் சொன்னாலும் சொல்லா விட்டாலும் வெங்கிட்டுவிடம் சொல்லவேண்டும்.

"இந்தா மயிலாம்பா! இங்கே எப்போ நீ வரது?" தேநீர்க் கடைச் சண்முகம் அழைத்தான்.

"தோ, ஓட்டலுகடை வேலையை முடிச்சுட்டு வந்துடறேன். இன்னும் ரெண்டு நடை!"

அதுதான் ஓட்டல் கடை, இது தேநீர்க் கடை.

"அவன் மட்டுந்தானே சம்பளம் தரான்! நாங்க என்னா சம்பளமா தரோம்?"

அண்ணன் கோபித்துக் கொள்வதும் நியாயந்தான்.

"தோ வந்துடறேன்."

"வா வா! மெல்ல வா." அவன் முணுமுணுப்பு அவள் செவிக்கு எட்டாத தொலைவுக்குச் சென்று விட்டாள்.

தஞ்சாவூர் விரைவு வண்டி வந்து நின்றது. கூட்டம் ஓட்டலுக்குள் நிறைந்தது.

"இந்தா மயிலாம்பா! நீ தண்ணீருக்கு அப்புறம் போகலாம். கூட்டத்தை இடிச்சுக்கிட்டுப் போகாதே. ஒரு பக்கமா உட்காரு. இல்லேன்னா இலையை அள்ளிப்போடு" என்று உத்தரவிட்டான் வெங்கிட்டு. அதிகாரம்தான். அவனுடைய அதிகாரம் ஆணையெல்லாம் அவளிடந்தான். வேறு யாரிடம் காட்டுவது? எதையாவது காரணமாக்கி

அவளிடம் பேச வேண்டும். அவளைத் தன் எதிரே நிறுத்தி வைத்துக் கொள்ள வேண்டும்.

பெண்கள் பகுதியைத் தேடி வந்த பெண்மணிகளில் ஒருத்தியின் நாகரிகக் கவர்ச்சி மயிலாம்பாளின் கண்களில் பட்டது. அவள் பார்ப்பதை வெங்கிட்டுவும் பார்த்தான்.

"என்ன சாப்பிடுறீங்க?"

வழியில் நின்றிருந்தாள் மயிலாம்பாள்.

"உம். வழியை விடு!" என்று ஓங்கிய குரல்; பார்த்தியா புடைவைக் கட்டை!" இது இழைந்த குரல், அவளுக்கு மட்டும் கேட்கும்படி. கண்களில் குறும்பு. "அது என்ன ஜாக்கெட்டு? முன்னும் இல்லாமே பின்னும் இல்லாமே?" ஒரு கிசுகிசுத்தல்.

"யாராவது எப்படியாவது இருக்காங்க. உன் வேலையைப் பாரேன்" என்றாள் அவள்.

"போய் உன் இடத்திலே உட்காரு. உனக்கும் சேர்த்து ஒரு ரோஸ்ட் போட்டுடறேன், கூட்டத்தோடு கூட்டமா." திரும்பி வந்த போது மெல்ல அவளருகில் முணகிவிட்டுச் சென்றான் அவன்.

"எனக்கு ஒன்னும் வேணாம்" என்று கடுகடுத்த அவள், "இந்த நேரம் பார்த்து எக்கசுபிரசும் அதுவும் இதுவும் வந்திடுச்சு. வேலையை முடிச்சுட்டுச் சீக்கிரமா வூட்டுக்குப் போகலாம்னா..." என்று தனக்குத் தானே முணகிக் கொண்டாள்.

தண்ணீர்த் தொட்டியில் மேல் மட்டம் குறைந்து கொண்டே வந்தது. முதலிலேயே நிரம்பி விட்டிருந்து விடைபெற்றுச் சென்றிருந்தால் போயிருக்கலாம். இப்

பொழுது மீண்டும் நிரப்பியாக வேண்டும். ஒவ்வொரு நாள் இப்படித்தான் ஆகிவிடுகிறது.

"என்னா ரொம்ப அவசரம் போலேருக்கு?" வெங்கிட்டு கேட்டான்.

"ஆமாம் அவசரந்தான்!" என்ற அவள் தன் மகிழ்ச்சிப் பெருக்கை வெளிப்படுத்திக் கொள்ளத் துடித்தாள். அதென்னவோ வெங்கிட்டுவிடம் சொல்ல வேண்டும் என்ற ஆவல்.

"எங்க மாமன் வந்திருக்கு. நான் இன்னைக்காவது சீக்கிரம் வூட்டுக்குப் போகணும்" என்றாள் அவள். வெள்ளிய பற்கள், கருமேகத்தின் மேல் கொக்குக் கூட்டம் பறப்பது போல.

"அது யாரு மாமன்? புதுசா திடீர்னு எங்கேருந்து முளைச்சான்?" வெங்கிட்டுவின் முகம் வலித்தது. சிவந்த வெற்று உடம்பில் புரண்டிருந்த நூலைத் தோள்வழியே இழுத்து விட்டான்; பிசுபிசுவென்ற அழுக்கு.

"புதுசா ஒன்னும் இல்லே; பழசுதான். பட்டணத்துக்கு போயிருந்துச்சி வீட்லே கோவிச்சுகிட்டு. ஒரு வருசத்துக்கு மேலே ஆச்சு. இப்போதான் வந்திருக்கு" என்ற அவள் "உன்கிட்டே பேசிக்கிட்டிருக்க நேரம் இல்லே. நான் போறேன்" என்று புறப்பட்டாள்.

"பட்டணத்திலே என்னா வேலையாம்?"

"ஏதோ வேலை. நிறையா சம்பாதிக்குதாம். இல்லேன்னா எனக்குப் புடைவை துணிமணியெல்லாம் வாங்கிக்கிட்டு வர முடியுமா? பீச்சிலிருந்து வாங்கி வந்திருக்கு பாரு, தினுசு தினுசா மாலை! என்னா அழகு போ!" பெருமை பீறிட்டது அவளுக்கு.

"அது என்னா மாலை பீச்சிலேருந்து?"

"இந்த ஆளுக்கு வேறே வேலை என்ன? சர்வு பண்றதையும் விட்டுட்டுப் பேசிக்கிட்டே நிற்பாரு. புதுசா மாலையை வெளியிலே தெரியும்படியாப் போட்டுக்க வெட்கப்பட்டுக்கிட்டு அவள் ரவிக்கைக்குள் மறைத்துப் போட்டிருப்பதை எடுத்தா காட்டிக்கிட்டு நிற்க முடியும்?"

அவள் ஓடியே விட்டாள்.

மாலையில் அவள் எப்பொழுது வேலைக்கு வருவாள் என்று காத்திருந்தானோ என்னவோ வெங்கிட்டு. வந்ததும், அவள் ஒரு நடை தண்ணீருக்குப் போய்விட்டு வருவதற்குள், அவன் மிகவும் கவலைப்பட்டவன் போல, புது அக்கறை யுடன் கேட்கத் தொடங்கி விட்டான்.

"இவ்வளவு காலம் கழிச்சு உன் மாமன் எதுக்கு மயிலாம்பா வந்திருக்கான்?"

"போனா போன எடத்திலேயாவா உட்கார்ந்து விடு வாங்க? என்னைப் பார்க்கத்தான் வந்திருக்கு."

அப்பொழுது அவள் நாணத்தை எரிச்சலுடன் சுவைத்தான் அவன்.

"உன்னைப் பார்க்கன்னா? பெண் பார்க்கவா? புடைவை இடவையெல்லாம் எடுத்து வந்திருக்கான்னு சொன்னியே?" குறும்பாகக் கேட்பதாக அவன் நினைப்பு

அதை ஒப்புக் கொள்வதில் அவளுக்குப் பெருமகிழ்ச்சி.

"நான் எம்புட்டுச் சம்பாதிச்சுச் சேர்த்து வைச்சிருக் கேன்னு கேட்டிச்சு" என்றாள் அவள்.

"எதுக்கு?"

"செலவுக்குதான். கலியாணச் செலவுக்கு வேணாமா?"

"அவன் ஏராளமாகச் சம்பாதிக்கிறதாச் சொன்னே பட்டணத்திலே?"

"இருந்தா என்ன? அங்கே எம்புட்டுச் செலவோ? நான் தனியா இங்கே பணத்தை வைச்சுக்கிட்டு என்னா பண்ணப்போறேன்? அது கேட்டுது; நான் சொல்லிட்டேன். அதுக்கே மலைச்சுப் போச்சு! நீயே உழைச்சு, நீயே சம்பாதிச்சு இவ்வளவு பணமா வைச்சிருக்கேன்னு எவ்வளவு பெருமையா என்னைப் பார்த்துப் பேசிச்சு தெரியுமா?"

"ஓகோ! எவ்வளவு வைச்சிருக்கே பணம்?"

"ஏன்? நீ ஊரு பூரா டமாரம் அடிக்கவா?"

"சரி சரி, நீசொல்லவேணாம். போய்வேலையைப் பார்" என்றான் அவன்.

ஆனாலும் அவனிடம் சொல்லிவிட அவளுக்கு ஒரு துடிப்பு. நுனி நாக்கு வரை வந்ததை நெஞ்சுக்குள் தள்ளி அடக்கிக் கொண்டாள்.

அவளை மென்று விழுங்குபவன் போலப் பார்த்தான் அவன். அந்தப் பார்வையை ஒதுக்கிவிட்டுச் சென்றாள் அவள். 'வேலையற்ற ஆளு! ஒடம்புக் கொழுப்பு. முதலாளிக் குத் தெரியாமே நெய்த் தோசையாப் போட்டுத் தின்குதுல்ல?'

"இதோ இதுதான் எங்க மாமா வாங்கியாந்து கொடுத்த மாலை, பட்டணத்து பீச்சிலேருந்து" என்று கையில் எடுத்து நீட்டினாள் அவள், மறுநாள்.

அவன் வாங்கிப் பார்த்தான் ஐம்பதுகாசு மதிப்பிருக்கும்; ஆனால் விலை மதிப்பற்ற அன்பைப் பரிசாகப் பெற்று

விட்டான், அதை வாங்கிக் கொடுத்ததனால் என்ற எண்ணம் ஓடியது அவனுக்கு.

“பிச்சிலேருந்துன்னா என்னா அது?” அவளைக் கேலி பேசித் தன் உணர்வுகளை அடக்கிக் கொண்டான் அவன்.

“அதென்னமோ யாரு கண்டா? எங்க மாமன்தான் சொல்லிச்சு.” அவள் புன்னகை காட்டினாள்.

“அவன் சொன்னதையெல்லாம் அப்படியே நம்பிடுறியா மயிலாம்பா நீ?”

பொருள் பொதிந்த கேள்வியாகக் கேட்டான் அவன்.

“ஏன் நம்பக் கூடாதா? நீ சொல்றது என்னமோ மாதிரி சொல்றியே.”

“இல்லே, சும்மா கேட்டேன். அவன் உன்கிட்டே இருக்கிற பணத்தைக் கேட்டானா?”

“ஆமாம், கேட்டுச்சு.”

“நீ கொடுத்துட்டியா?”

“கொடுத்தா என்னா கெட்டுப் போச்சு?”

அவன் அதற்குமேல் ஒன்றும் பேசவில்லை. கூட்டத்தோடு கூட்டமாக அவளுக்கு ஒரு 'ரோஸ்ட்' போட்டுக் கொடுத்தான். அதை அவள் சாப்பிடாமல் அப்படியே இலையில் சுருட்டி மடியில் பதுக்கிக் கொண்டு வெளியேறினாள்.

அவனுக்குப் புரிந்தது, 'பார்சல்' மாமனுக்குப் போகிறது என்று.

அன்று மாலையில் அவள் வேலைக்கு வரவில்லை. என்ன ஆனாளோ, மாமனுடன் பட்டணத்துக்குக் 'கப்பல்' ஏறி

விட்டாளோ என்று எண்ணினான் வெங்கிட்டு. தன்னிடம் ஒரு வார்த்தை சொல்லவில்லையே என்ற ஏக்கம்! ஏதோ ஒரு கவலை; இனம் புரியவில்லை. வேலையில் நேரம் ஓடிற்று. ஆனால் ஓய்ந்தபோது அவன் மனம் ஓயவில்லை; ஓய்வில்லாமல் பொங்கிற்று. சே! இவ்வளவு காலம் பழகி ஒரு வார்த்தை ஒப்புக்காகக்கூடச் சொல்லாமல் ஓடிவிட்டாளே! இரவு உறக்கமும் இல்லை. இப்படி ஒரு மனமா?

மறுநாள் விடிந்தது முதல் அவன் சோம்பலாய் அலைந்தான். அவள் இனி வரமாட்டாள் என்று அவன் உள்ளம் கூறினாலும் ஏனோ அடிக்கடி அவன் கண்கள் வெளியே திரிந்தன.

"வாங்க! டே! டேபிள் கிளீன்!" வாடிக்கையாளர்களை வாய் வரவேற்றாலும் மயிலாம்பாள் வரமாட்டாளா என்று பார்வை நெடிது ஓடிற்று.

திடீரென்று விருந்து கிடைத்து விட்டது. அவனால் நம்பவே முடியவில்லை. மயிலாம்பாள் தான் வருகிறாள்.

"பொழுது இப்போதான் விடிஞ்சுதா? நேற்றைக்குச் சாயங்காலமும் வேலைக்கு வரலே—"

அவன் கத்தினான் ஆத்திரம் தீர. முதலாளி முறைத்தார்.

அவள் யாரையுமே நிமிர்ந்து பார்க்காமல் உள்ளே சென்று விடுவிடு என்று தன் கடமையில் முனைந்தாள்.

பின்புறம் அவள் கூட்டிக் கொண்டிருந்தபோது அவன் மெல்ல வந்து "மயிலாம்பா!" என்றான்.

அவள் நிமிர்ந்து பார்த்தாள்.

முகத்தில் முறுவல் இல்லை; கண்களில் ஒளி இல்லை. சோகை பிடித்தது போல ஒரு பார்வை.

"ஏன் சாயங்காலம் வரலே? நீ மெட்ராஸ் போயிட்டி யோன்னு பயந்துட்டேன்" என்றான் மெல்லிய குரலில் அவன்.

"நான் ஏன் போறேன்?" அவள் தலை குனிந்தாள்.

"அவன் போயிட்டானா?"

"போயிடுச்சு, ராத்திரி ரயிலுக்கு."

"பணத்தை ஏமாந்து குடுத்துட்டியா?"

"ஏமாந்து குடுக்கலே. தெரிஞ்சேதான் குடுத்தேன்."

"தெரிஞ்சே கொடுத்தியா?"

அவள் சற்றுத் தயங்கி விட்டுச் சொன்னாள்: "ஆமாம். எங்க மாமனுக்குப் பட்டணத்திலே ஒரு பொண்ணு கல்யா ணத்துக்காக இருக்காளாம். அவளைக் கட்டிக்கச் செலவுக் காகப் பணம் புரட்டத்தான் ஊருக்குப் புறப்பட்டு வந்திச் சாம். நானும் பரிதாபப்பட்டு என் பணத்தைக் கொடுத்து அனுப்பிட்டேன்."

அவள் தன் வேலையில் முனைந்தாள்.

அவன் அசைவற்று நின்றான்.

"சரி சரி, வேலையை முடிச்சிட்டு வா. சுடச்சுட நாலு இட்லியைச் சாப்பிடு. ஸ்பெஷல் ரோஸ்ட் ஒன்னு போட்டுத் தரேன்" அவள் செவியில் மட்டும் விழும்படியாகக் கூறி விட்டு உற்சாகமாக உள்ளே சென்றான் வெங்கிட்டு. ●

# தீர்ப்பு

மளிகைக் கடைக்காரர் சக்கரபாணியின் மகன் இராச துரை, நாட்டாண்மைக்காரர் மகள் இரத்தினாவைக் கல்லூரி யிலிருந்து திரும்பும்போது சைக்கிளில் வைத்து ஊர் முனை யில் கொண்டுவந்து விட்டுவிட்டு, தன் வீட்டுக்குச் சென்ற தற்காக மாரியம்மன் கோயிலில் விசாரணை.

ஊருக்கு வெளியே அரைகல் தொலைவில் இருப்பது கோயில். ஊரின் முக்கியமானவர்கள் எல்லாரும் வந்து விட்டார்கள். மண்டபத்துக்குள் நல்ல கூட்டம். வேடிக்கைப்பார்க்க வந்த சிறுவர்களை விரட்டிவிட்டார்கள். அவர்கள் தென்னந்தோப்பில் கூத்தடித்துக் கொண்டிருந் தார்கள். அவர்களிடையே சிறுமியரும் சிலர் இருந்தனர். அவர்களுடைய சடைப்பின்னலைப் பிடித்திழுப்பதும், அவர் கள் கட்டிய மணல் வீடுகளைக் கலைப்பதுமாகச் சிறுவர்கள் வம்புக்கு நின்றனர்.

விசாரணைக்குச் சக்கரபாணி வந்திருந்தார். மண்டபத் தின் மூலையில் ஈச்சம்பாயின் மீது உட்கார்ந்து சுவரில் சாய்ந்து முட்டிக்காலின் மீது முகம் புதைத்து இருந்தார். அவர் வெட்கப்பட வேண்டியதில்லை — நடைமுறைப்படி. ஏனென்றால் அவர் 'பிள்ளையைப் பெற்றவர்.' ஒரு மூட்டை வெல்லம் கூழாகிப் போனது போலவும், மிளகாய் விலை திடீரெனச் சரிந்து போனது போலவும் உட்காந்திருந்தார் அவர். 'பெண்ணைப் பெற்ற' நாட்டாண்மைக்காரர் கைலாசமோ கம்பீரமாகக் கோயில் படிக்கட்டில் சரிகைத்

துண்டைப் போர்த்திக் கொண்டு கலகலப்பாக உட்கார்ந் திருந்தார். எல்லாரும் அவரை மரியாதையுடனும் அச்சத் துடனும் பார்த்துக் கொண்டிருந்தனர். ஏனெனில், ஊரில் பெரிய மனிதர், பெரும் செல்வர் அவர். அவருடைய மனைக் கட்டில்தான் சக்கரபாணி கடை கட்டியிருக்கிறார். ஊர் திருவிழாக்கள் கைலாசத்தின் உதவியினாலும், மேற்பார்வை யிலுமே நடைபெறும். எதிர்ப்பே இல்லாத ஊராட்சி மன்றத் தலைவரும் அவரே. ஆனாலும், ஊரின் வழிவழி வழக்கப்படி வழக்குகள் பலவும் மாரியம்மனின் சன்னதியில் கோயில் மண்டபத்தில்தான் நடைபெறும். தலைமை தாங்கும் ஒரே உரிமை பெற்றவர் கைலாசம் ஒருவரே.

அத்தகையவருடைய மகளை—

'சாய்ங்காலம்— கையெழுத்து மறைகிற நேரம். மாரி யம்மன் கோயிலைத் தாண்டி குளத்தங்கரை கிட்டே, நான் வந்துகிட்டிருந்தேன். கருப்பங்கொல்லைக்குப் போய் விட்டு தான் அந்தப் பாதையிலே வந்தேன். அரச மரத்துக்கும் வேப்ப மரத்துக்கும் கலியாணம் பண்ணி வைச்சிருக்காரே நம்ம கருப்பையா? அந்த மரத்தடியிலே நான் பீடி பற்ற வைக்கிறதுக்காக நின்றபோது தெற்கிலே யிருந்து ஒரு சைக்கிள் வரதைப் பார்த்தேன். இராசதுரை தான் வந்தான். கொஞ்சம் கிட்டத்திலே வந்ததும் சைக்கிளுக்குப் பின்னாலே உட்கார்ந்திருந்தது இரத்தினாம்மாதான்னு தெரிஞ்சுது. குளத்து மேட்டுகிட்டே வந்ததும் இராசதுரை மெல்ல சைக்கிளை நிறுத்திக் காலை ஊன்றி நின்றான். அப்புறம் இரத்தினம்மா இறங்கினாங்க. இறங்கின உடனே அழுதாங்க—''

நேரடியாக அந்தக் காட்சியைப் பார்த்த ஒரே சாட்சியான சாரங்கன் கைலாசத்தைக் குறிப்பாக பார்த்து விட்டு மேலும் தொடர்ந்தான்.

"என்னைப் பயமுறுத்தி சைக்கிள்ளே வைச்சு இப்படி அழைச்சுகிட்டு வந்தியே, யாராவது பார்த்தா என்னா சொல்வாங்க, அப்படின்னு கேட்டாங்க இரத்தினம்மா. அதுக்கு இராசதுரை அலட்சியமாகச் சிரித்தான். 'யாரும் நம்மைப் பார்க்கலே. நீ யார்கிட்டேயும் சொல்லிடாதே. அப்படி யாராவது பார்த்திருந்தாலும் ரயிலடிக்கு மாட்டு வண்டிவர நேரமாகிவிட்டதாலே நானே தான் சைக்கிளிலே ஏற்றிக்கச் சொன்னேன்னு சொல்லிடு. என்னைக் காட்டிக் கொடுத்துடாதே. அப்புறம் நான் பொல்லாதவன் ஆயிடுவேன்'னு பயமுறுத்தினான். இரத்தினம்மா புத்தகங்களை எடுத்துக் கிட்டுப் போயிட்டாங்க. அவன் சைக்கிளைத் திருப்பி வேறே வழியிலே திரும்பினான்.

சாரங்கன் முடித்து விட்டு உட்கார்ந்தான்.

"ஆமா — பெரிய படிப்பு படிக்கப் போவுதுகளே நம்மப் பிள்ளைகள்? அதுகள் எதிலே போயிக் கிட்டு வந்து கிட்டிருக்கு?" என்று கேட்டார் ஒரு பெரியவர்.

ஒருவர் விளக்கம் கொடுத்தார்.

"இராசதுரை ரயிலடி வரைக்கும் சைக்கிளிலே போய் சைக்கிளை ரயிலடியிலே போட்டுவிட்டு ரயிலிலே போறான். திரும்பி வரும்போது சைக்கிளை எடுத்துக்கிட்டு ஊருக்கு வரான். இரத்தினாம்மா ரயிலடிக்கு இரட்டை மாட்டு வண்டியிலே போகுது. சாய்ங்காலம் ரயிலடிக்கு வண்டி போய் அழைச்சுகிட்டு வரும். ஆக ரெண்டு பேரும் ரயில்லேதான் போயிட்டு வராங்க. ரயிலடி வரைக்கும் தனித்தனியா போறாங்க—"

"அதற்கு அப்பாலே?"

"ரயிலை விட்டு இறங்கின உடனே பக்கத்திலேயே காலேஜி!"

"சரி, வழக்கம் போலப் போகிற வண்டி இரத்தினாவை அழைக்க அன்றைக்குச் சாயங்காலம் ஏன் போகலே?"

"போச்சே. கொஞ்சம் நேரம் கழிச்சுப் போச்சு. மாடு களத்திலேருந்து வர நேரமாயிடுச்சாம். அதற்குள்ளே இராசதுரை என்ன பண்ணிட்டான்னா — 'வண்டி வராது, என் சைக்கிளிலே வந்திடு'ன்னு சொல்லி, அந்தப் பெண்ணோட மனசைக் கெடுத்துச் சைக்கிளிலே அழைச்சுகிட்டு வந்திருக்கிறான் வேறே பாதையிலே! அநியாயம் எங்கேயாவது உண்டா? ஒன்னும் தெரியாத பெண்ணை ஏமாற்றி—"

"ஆமா, அந்தப் பெண்ணுக்கு என்ன தெரியும்? பாவம் சின்னப் பெண்தானே?"

கைலாசம் கனைத்தார்.

அதன் குறிப்புணர்ந்த ஒருவர் கேட்டார்:

"சரி, இப்போ சக்கரபாணி என்ன சொல்கிறார். அதைக் கேளுங்க!"

'கசமுச' வென்ற கூட்டம் 'கப்சிப்' பென்று அடங்கிற்று.

மெல்லத் தலையைத் தூக்கிய சக்கரபாணி தம் அருகிலிருந்தவரைக் கூடப் பார்க்க முடியாமல் பார்வையை ஒதுக்கினார்.

"அவரோட பையன் இப்படி ஒரு காரியம் பண்ணினதை அவர் ஒப்புக்கொள்கிறாரா? கேளுங்க அதை!" எதிர் மூலையிலிருந்து ஒருவர் குரல் கொடுத்தார்.

"அவர் ஒப்புக் கொள்ளாமே என்ன? அதைக் கேள்விப் பட்ட உடனே அவர் பிரம்பை எடுத்துக்கிட்டுப் பையனை போட்டுப் பிச்சு விளாசிட்டாரே! நான் பக்கத்திலே

இல்லேன்னா பையனை உயிரோடே பார்த்திருக்கவே முடியாது—'' என்றார் இன்னொருவர்.

''அப்படின்னா அவர் குற்றத்தை ஒப்புக் கொள்கிறாரா?'' என்று கேட்டார் ஒருவர். அவருக்குச் சக்கரபாணி கடன் கொடுக்க மறுத்திருந்தார் ஒருமுறை; அந்த ஆத்திரம்.

''அதென்ன கேள்வி? நம்ம நாட்டாண்மைக்கார ஐயா குடும்பம்! அந்தக் குடும்பத்தையே தலை குனிய வைச்சுட்டானே அந்தப் பையன்? சும்மா விடலாமா? பழைய சலவைத் தொழிலாளி ஒருத்தன் செய்த சின்ன ஒரு குற்றத்துக்கே அவனை ஊரைவிட்டே துரத்திவிட்டு இன்னொருத்தனைக் கொண்டு வந்து வைச்சமே! நினைப் பிருக்கா?'' என்றார் கைலாசத்திடம் ஆயிரம் ரூபாய் கடன் வாங்கியிருந்த ஒருவர்.

''அதே போல இவரையும் ஊரைவிட்டே அனுப்பிட முடியுமா என்ன? ஏதாவது அபராதம் அது இது போட்டுக் கதையை முடிக்க வேண்டியது தான்!'' இது இன்னொருவர்.

கனைத்தார் கைலாசம்.

''என்னது! கடைகட்டி இருக்கிற இடமே என் இடம், அந்தப் பயமகனுக்கு காலேஜிக்குப் போக சைக்கிள் வாங்க நான் பணம் கொடுத்தேன். சம்பளப் பணம் நான் கொடுத்திருக்கேன் சில சமயத்திலே. அதுக்குக் காட்டுகிற நன்றியா? இன்னும் வட்டிக்காசுகூட வந்ததில்லே. திமிரைப் பார்த்தியா!'' என்று பொழிந்தார் அவர்.

அந்தக் கூட்டமே ஒரு 'ஊங்'காரம் போட்டு அடங்கிக் கிடந்தது.

''கொஞ்சம் பெரிய மனசு பண்ணி ஒரு அபராதத்தைப் போட்டு முடிங்க, ஏன்னா—''

சொல்ல வந்தவரைச் சொல்ல விடவில்லை இன்னொருவர். "ஏன்னாவாவது போன்னாவாவது. மானமே போச்சேய்யா! அபராதம்னா எவ்வளவு போடறது?" என்றார்.

"பையன் செய்தது தவறு. கடைக்காரர் மேலே தப்பில்லை. அவரைப் பொறுத்த வரைக்கும் யார் சோலிக்கும் போகமாட்டார். ஏதோ பெரியவங்க பார்த்து—"

தலைகுனிந்திருந்த சக்கரபாணியை அனுதாபத்துடன் பார்த்தவாறே கூறினார் அவர்.

"சரி, அபராதம் தானே? ஆயிரம் ரூபாய்!"

அக்கணமே மயக்கமுற்று விழாமல் இருந்தது சக்கரபாணியின் அழுத்தமான உள்ளத்தையே காட்டியது. அதற்கும் வாய்திறக்காமலே குன்றிப்போய் அமர்ந்திருந் தார் அவர்.

"ஆயிரம் என்கிறதெல்லாம் நடக்கக் கூடிய காரியமா? நியாயமா ஏதாவது போடுங்க. ஒரு ரூபாய் கட்டினாலும் அபராதம்தான், ஆயிரம் ரூபாய் கட்டினாலும் அபராதம் தான்!"

"சரி எல்லாரும் கேளுங்க!" கைலாசம் சொல்ல வந்ததை எல்லோரும் கேட்கத் தலைப்பட்டனர். "ஐந்நூறு ரூபாய் அபராதம் கட்டணும். இல்லையோ நாளைக்கே கடையைக் காலி பண்ணிட்டுப் போயிடணும். ஐந்நூறுக்கு ஒரு காசு கூடக் குறைக்க முடியாது!" என்றார் அவர்.

அங்கே அமைதி நிலவியது. கூட்டத்தில் பெரும் பகுதியினர் ஒப்புக்கொண்டனர். சக்கரபாணி ஐந்நூறு ரூபாய் அபராதம் கட்டவேண்டும் என்றும் மாரியம்மனுக்குத்

தம்முடைய செலவிலேயே ஒருபூசை நடத்திக் கைலாசத்துக்கு முதல் மரியாதை செய்யவேண்டும் என்றும் முடிவாகியது.

"என்னய்யா சொல்றே? 'உம்'முன்னு உட்கார்ந்துகிட்டே இருந்தால் என்ன அருத்தம்?" சக்கரபாணியைப் பார்த்துக் கேட்டார் ஒருவர்.

சக்கரபாணி தலையை அசைத்தார். தம்முடைய வழுக்கைத் தலையைத் தடவிவிட்டுக் கொண்டார்.

கடைசியாக அவர் சொன்னார்:

"நான் வசதியில்லாதவன். இருந்தாலும் இவ்வளவு பெரிய தண்டனை கொடுத்திட்டீங்க. அதுக்கு முன்னாலே ஒருவார்த்தை. குற்றம் செய்த என் பையனையும் அந்தப் பெண்ணையும் நாம் நேரடியாக் கூட்டத்திலே வைச்சு விசாரிக்கவே இல்லை. இரண்டு பேரையும் இங்கே வரச் சொல்லி நடந்ததைக் கேட்டுவிட்டுத் தீர்ப்பளிக்கறதுதான் முறை!"

"உம்முடைய மகன் வேணுமானா வரட்டும். நம்ம ஐயாவோட மகளும் இங்கே கூட்டத்துக்கு வரவேண்டியதில்லே!" என்று கத்தினார் ஒருவர்.

"ஏன் வரவேண்டியதில்லே? கருப்பையா கருவாட்டுக்காரங்க மகள் கிட்டே தகாததனமாக நடந்துகிட்ட போது ரெண்டு பேரையும் கூட்டி வைச்சுதானே விசாரிச்சோம்?" என்று பதிலடி கொடுத்தார் இன்னொருவர்.

"நியாயத்துக்கு நான் எப்போதும் கட்டுப்படுறவன் காணும்!" என்று கனைத்துக் கொண்டே ஓங்கிய குரலில் கூறிய கைலாசம், "டே முனிசாமி! உன் சைக்கிளை எடுத்துக்கிட்டுப்போய் கடைக்காரர் மகன்–அவன் பேர்

என்னா-உம் இராசதுரை, இராசதொரை அவனை உடனே இங்கே வரச்சொல்லிட்டு அப்படியே நம்ம வூட்டுக்கும் போய் இரத்தினாவை நம்ம வண்டியைக் கட்டி அழைச்சுக் கிட்டு வா! ஓடு சீக்கிரம்!'' என்று கட்டளையிட்டார்.

கூட்டத்துக்கு அது இடைவேளை நேரம். ஏதேதோ வெட்டிப்பேச்சுகள்; வீண் வம்புகள்; வெற்றிலைப் பாக்குப் பரிமாற்றம்; இராசதுரை-இரத்தினா வரவுக்காக காத்திருந் தனர்.

ஊர் இருக்கும் கிழக்குத் திசையில் எல்லாருடைய பார்வையும் அடிக்கடி சென்று மீண்டது. முனிசாமி சைக்கிளிலேயே திரும்பி வந்தான். எங்கே அவர்கள்?

மூச்சு இரைக்க முனுசாமி சொன்னான்:

இராசதுரை கிட்டே சொன்னேனுங்க. சைக்கிளை எடுத்துக்கிட்டு வரேன்னு புறப்பட்டாரு. நம்ம அம்மா கிட்டே சொல்லி வண்டி கட்டப்போனேன். வண்டி வேணாம். நீ போன்னு சொல்லி என்னை விரட்டிட்டாங்க நான் வந்துட்டேங்க!''

''எங்கேடா அவங்க? வராங்களா இல்லையா?''

''வந்துடுவாங்க-'' திரும்பிச் சாலையைப் பார்த்தான் முனிசாமி.

சாலையின் திருப்பத்தில் ஒரு சைக்கிள் தெரிந்தது. எல்லாரும் மலைத்துப் போய் விரிந்த கண்களுடன் வியப்பு மேலிடப் பார்த்துக் கொண்டிருந்தனர். மண்டபத்துக்குள் இருந்த கைலாசமும் சக்கரபாணியும் உட்பட எல்லாருமே வெளியே வந்து விட்டார்கள்.

அவர்களுக்கு எதிரே வந்து நின்றது அந்தச் சைக்கிள். சைக்கிளை மிதித்து வந்த இரத்தினா மெல்லத் திறமை

யுடன் கூட்டத்தையே மோதுவது போல வந்து ஒதுக்கி நிறுத்தினாள். சைக்கிளின் பின்னால் 'கேரியரில்' உட்கார்ந் திருந்த இராசதுரை குதித்து இறங்கினான். இரத்தினாவும் ஒயிலாகக் கீழே இறங்கினாள். அவள் எப்பொழுது சைக்கிள் ஓட்டக் கற்றுக்கொண்டாள்? இராசதுரை கற்றுக் கொடுத்தானா?

"வேடிக்கைதான்! பெண்ணு சைக்கிள் ஓட்ட, பைய னும் பின்னாலே உட்கார்ந்துகிட்டு வந்து இறங்கறது!" என்று அந்த அதிர்ச்சியுற்ற அமைதியைக் கலைத்து நகைத் தார் பெரியவர் ஒருவர்.

"இரத்தினா? என்னம்மா இது?" கத்தினார் கைலாசம்.

"எதையப்பா சொல்றீங்க?" என்று அந்தக் கூட்டத்தை நோட்டமிட்ட இரத்தினா, "அவர் சைக்கிள் ஓட்ட நான் பின்னாலே உட்கார்ந்துகிட்டு வந்தேன். அதற்காகத் தானே அவரோட அப்பாவுக்கு அபராதம் போட்டீங்க? இப்போது நான் சைக்கிள் ஓட்ட அவர் பின்னாலே உட்கார்ந்து கிட்டு வந்தாரு. அதை எல்லாரும் பார்த்தீங்க. அதுக்கும் இதுக்கும் சரியாப் போச்சு. பதிலுக்குப் பதில்! விசாரணையைக் கலைச்சுட்டு வீட்டுக்குப் போங்க!" என்றாள் ஆணையிடும் குரலில்.

யாரோ சிரித்தார்கள்.



# மகனே, ராசமாணிக்கம்

வேறு வழியில்லை. எப்படியாவது துரையின் ஆசையை நிறைவேற்றி ஆக வேண்டும். ஆனால் எளிதில் முடியக் கூடியதா?

"நோய் முற்றிவிட்டது. வேண்டியதைச் செய்து விடுங்கள். தன்னுடைய மகனை நினைத்து ஓயாமல் புலம்புகிறார், பாவம், அவனை வரவழைத்து அவரிடம் பேச வையுங்கள். அவருடைய ஆசையைக் கெடுக்கா தீர்கள்—" என்று சொல்லி விட்டார் டாக்டர். அது அவர் சொல்லித்தானா வேலம்மாவுக்கும் மற்றவர்களுக்கும் தெரியப் போகிறது?

துரை இனி பிழைக்கமாட்டார் என்பதும், அவருக்குத் தம்முடைய ஒரே மகனான இராசமாணிக்கத்தைக் காண வேண்டும் என்கிற தவிப்பு அவர் இதயத்தைப் பிசைந்து இயக்கிக் கொண்டிருக்கிறது என்பதும் அனைவரும் அறிந்ததே. ஆனால், இராசமாணிக்கத்தைக் கொண்டு வருவது எப்படி? மகனா அவன்? அவர் சொல்ல அவள் மகனுக்கு எழுதிய கடிதங்கள் எத்தனையோ.

"என் மகனே, இராசமாணிக்கம்,

உன் அப்பாவுக்குக் கண் பார்வை போய் இரண்டு ஆண்டுகளுக்கு மேல் ஓடிவிட்டன. கண் பார்வை போன நாள் முதலே உன் அப்பாவுக்கு உன்னைக் காண வேண்டும் என்கிற ஆசை சூறாவளியாகத் தொடங்கி விட்டது. கண்

தெரிந்த போது, 'என் முகத்தில் விழிக்காதே. இந்த வீட்டுக்குள் நுழையாதே' என்று விரட்டியவர்தான் இன்று உன்னைக் காண்பதற்காகவே உயிர் தரித்திருக்கிறார்.

"இந்தக் கடிதம் அவர் சொல்லச் சொல்ல எழுதப் படுவதுதான்.

"ஏதோ கோபத்தில் அறியாமல் சொல்லி விட்டேன். நீ விரும்பிய பெண்ணை யாருக்கும் தெரியாமல் இழுத்துக் கொண்டு போய், எங்கேயோ அனாதை போலப் பதிவுத் திருமணம் செய்து கொண்டு வந்து விட்டாயே என்ற ஆத்திரம். நீ உன் மனைவியோடு வீட்டுக்கு வந்தபோது ஊரில் இருந்தவர்கள் சிரித்தார்கள். நாங்கள் அழுதோம். வீட்டுக்குள் நுழையாதே ஓடிப் போ, உனக்கும் உன் மனைவிக்கும் எங்கள் வீட்டில் இடமில்லை போய் விடு என்று விரட்டினேன். நீ மன்னிப்புக் கேட்டதற்கும் நான் செவி சாய்க்கவில்லை. என் அறிவு கெட்டத்தனம் அது. என் மானத்தைக் காப்பாற்று. நான் உயிரோடு இருக்கும் வரையில் நீ உன் மனைவியோடு வந்து இந்த வீட்டுக்குள் நுழையக்கூடாது என்று வெளியில் பிடித்துத் தள்ளினேன். அப்போது கோபித்துக்கொண்டு உன் பெண்டாட்டியோடு போனவன்தான். பம்பாயில் எவ்வளவோ துன்பப்பட்டு, கடைசியில் ஒரு நல்ல நிலைமை வந்திருப்பதாக நான்கைந்து ஆண்டுகள் சென்று கடிதம் எழுதினாய் நீ. அந்தக் கடிதமும் எங்கள் மேலுள்ள அன்பினாலா? உன்னுடைய பெருமையைக் காட்டிக் கொள்ளவும் எங்களுடைய இதயப் புண்ணைக் கீறி விட்டு வேடிக்கை பார்க்கவும் தானே? எல்லாம் போகட்டும். சாகக் கிடக்கிற இந்த நேரத்திலாவது நீ வரக்கூடாதா? தனியாக வரவேண்டாம். என் மருமகள் வாணி, என் பேரப்பிள்ளைகள் எல்லாருடனும் உடனே புறப்பட்டு வா."

இராசமாணிக்கத்துக்கு எழுதப்பட்ட இந்தக் கடிதம் எத்தனையோ கடிதங்களில் ஒன்று. எத்தனையோ வகைகளில் ஒன்று.

எல்லாவற்றுக்கும் ஒரே கடிதமாக இராசமாணிக்கத்திடமிருந்து கடைசியாக வந்தது ஒன்று.

"அம்மாவுக்கு,

கடிதங்கள் கண்டேன். மகன் மீதும் மருமகள் மீதும் பேரக் குழந்தைகள் மீதும் நீங்கள் காட்டும் அக்கறைக்கு நன்றி. காலம் கடந்த தங்களுடைய விருப்பத்தை நான் காலம் கடந்தே நிறைவேற்றப் போகிறேன். கையில் ஒரு காசு இல்லாமல் நானும் வாணியும் உங்களுடைய வீட்டுக்கு வந்தபோது எந்த உதவியும் செய்யாமல் வீட்டை விட்டுத் துரத்தினார் அப்பா. அப்போது மகனைவிட ஊரும், மருமகளைவிடச் சாதிமதமும், எங்களைவிடப் பணமும் மானமும் பெரிதாக இருந்தது. நாங்கள் வீட்டை விட்டு வெளியேறியவுடன் கிடந்த பட்டினி நாட்களில் தற்கொலை புரிந்து கொள்ளவும் திட்டமிட்டோம். எப்படியோ என் சில நண்பர்களின் உதவியால் தப்பினோம். இப்போது வசதியோடு வாழ்கிறோம். உங்களைப் பொறுத்த மட்டில் உங்கள் மகன் இறந்துவிட்டான். என்றாலும் போனால் போகட்டும் என்று அப்பாவின் இறுதிச் சடங்குக்கு வந்து விடுவேன். சொத்துக்கள் பூர்வீகமானவை அல்லவா? அதனால்!

தங்கள்,

இராசமாணிக்கம்"

மகனுடைய கடிதத்தைப் படிக்கக் கேட்ட வேலம்மா கதறி அழுது விட்டாள். படுக்கையில் கிடந்த துரை, "ஏன் அழுவுறா?" என்று முணகினார். "ஒன்னுமில்லே, சும்மா தான்," என்று மறைத்துவிட்டார் ஒருவர். வேலம்மாவும்

தன் கணவரிடம் கடிதத்தைப் பற்றி ஒன்றும் சொல்லாமல் விட்டுவிட்டாள்.

துரையின் தம்பி மகன் சிங்காரம், தன் பெரியப்பா வைப் பார்க்க அடுத்த தெருவிலிருந்து வந்தான். அவன் வீட்டுக்கு வருவது அதுதான் முதல் தடவை. துரைக்கும் அவர் தம்பிக்கும் பாகம் பிரித்துக் கொள்ளப்பட்ட நாள் முதல் இருவரிடையேயும் நீங்காத பகை வளர்ந்து எந்தத் தொடர்பும் இல்லாமல் போய்விட்டது. ஆனாலும் சிங்காரத் துக்குத் தன் பெரியப்பாவின் மீது அன்பும் இரக்கமும் நீண்ட நாட்களாகவே உண்டு. அவர் நடமாட்டமில்லாமல் மிகவும் கிடக்கிறார் என்பது தெரிந்த பிறகு அவரைச் சென்று பார்க்க விருப்பப்பட்டு, தன் தந்தையின் அனுமதி யுடன் வந்தான்.

சிங்காரத்தின் மீது வேலம்மாவுக்கும் மதிப்பும் அன்பும் உண்டு. மானம் மரியாதைக்குக் கட்டுப்பட்ட பிள்ளை.

"வாப்பா சிங்காரம்! உன்னைத்தான் பார்த்துக்கிட்டு இருந்தேன்!" என்று வரவேற்றாள் வேலம்மா.

"அண்ணன் கடிதாசி போட்டாரா? எப்போ வராரு?" என்று கேட்டான் அவன்.

அவனை மெல்லப் பேசும்படி சைகை செய்து தனியே அழைத்துக் கொண்டு சென்றாள் வேலம்மா.

திட்டமிட்டபடியே எல்லாம் நடந்தன.

"அதோ ராசமாணிக்கம் வந்துட்டானே!" என்று குரல் கொடுத்தார் ஒருவர். அவர் திட்டம் கொடுத்தவர்.

"அப்பா ராசமாணிக்கம் வந்துட்டியா? என் மனசிலே பாலை வார்த்தியா?" என்று வேலம்மா தன் கணவர் துரைசாமிக்குக் கேட்கும் அளவுக்குக் கூச்சல் போட்டாள்.

அவளைச் சூழ்ந்திருந்தவர்கள், "வாப்பா ராசமாணிக்கம் உங்க அப்பாவைப் பாரு! படுத்த படுக்கையாய்க் கிடக்கிறாரு. கண் பார்வையும் கிடையாது. இப்போதாவது மனசு வைச்சு வந்தியே!" என்றனர்.

சலவை சட்டை, சலவை முடமுடப்பில் உள்ள வேட்டி, சட்டைப் பையில் கைக்குட்டை, பேனா, மூக்குக் கண்ணாடி மாட்டிக் கொண்ட நிலை ஆகியவைகளுடன் ஊரிலிருந்து வருபவன் போல வந்தான் சிங்காரம். இராசமாணிக்கம் எப்பொழுதும் இதே தோற்றத்தில்தான் இருப்பான் அந்தக் காலத்தில். அதேபோல வந்தான் சிங்காரம். அவனைத் தான் இராசமாணிக்கம் என்று துரையின் செவிகளில் விழும்படியாக அழைத்து வரவேற்றனர்.

"ராசமாணிக்கமா? வேலம்மா! ராசமாணிக்கம் வந்தாச்சா?" என்று ஆவல் பொங்கக் கேட்டுக் கொண்டே எழுந்து உட்காரப் பெருமுயற்சி செய்தார் துரை.

"ஆமாம்பா, நான்தான்," என்றான் தொண்டை அடைக்க சிங்காரம்.

"ராசமாணிக்கம்! வந்துட்டியா? உன்னை என் கண்ணாலே பார்க்கக் கொடுத்து வைக்கலேயே—" என்று கூறிய அவர் கண்கலங்கி முடிவில் அழத் தொடங்கிவிட்டார்.

அவரை மெல்லத் தாங்கிப் பிடித்து, தலையணைகளை அண்டை கொடுத்து, சுவர் ஓரமாக நிமிர்த்தி உட்கார வைத்தாள் வேலம்மா.

"ராசமாணிக்கம்! உன் பெண்டாட்டி பிள்ளைகள் எல்லாம் வந்திருக்குதா? நீ மட்டும்தான் வரதா? கடிதாசி போட்டிருந்தே போலிருக்கே. நீ மட்டும்தான் வந்தியா? என் பேரன் பேத்திலை என்கிட்டே கொண்டுவந்து விடப்பா—" என்று கைகளை நீட்டித் துழாவினார் துரைசாமி.

"உன் அப்பாகிட்டே நகர்ந்து உட்காரப்பா! உன்னைத் தொட்டுப் பார்த்துக் கொள்ளட்டும்" என்று யாரோ சொன்னார்கள்.

அவன் நெருங்கி உட்கார்ந்தான்.

"ராசமாணிக்கம்! என் மேலே உள்ள கோபத்தை அடியோட விட்டுடு, ராசமாணிக்கம்." அவன் முகத்தைத் தடவினார் அவர். அவன் சட்டை வேட்டிகளைத் தொட்டுப் பார்த்தார். அவைகளின் சலவை மடிப்புக் கலைந்தது. அவனுடைய மூக்குக் கண்ணாடி அவர் கையில் இடிபட்டபோது அவன் ஒழுங்குபடுத்திக் கொண்டான். அவனுடைய கண்ணீரை அவர் ஆறுதலோடு துடைத்தார்.

"உங்க மேலே எனக்குக் கோபம் இல்லேப்பா! நான்தான் தப்பு பண்ணிட்டேன் உங்க பேச்சைக் கேட்காமே," என்றான் சிங்காரம்.

"நடந்தது நடந்து போச்சு. என் மருமகள், என் பேரப் பிள்ளைகள் எங்கேப்பா?" என்று அவலம் தோய்ந்த குரலில் ஆசையோடு கேட்டார் அவர்.

"எல்லாரும் சுகமா இருக்கிறாங்கப்பா! நான் இப்போ அழைச்சுகிட்டு வரலே. நீங்கதான் ஆரம்பத்திலே இருந்தே, 'இந்த வீட்டுக்கு வந்தால் தனியா வா. உன் பெண்டாட்டி பிள்ளைகளை அழைச்சுகிட்டு வந்து என் மானத்தை வாங்காதே'ன்னு எழுதிகிட்டு இருந்தீங்களே. அதிலே உங்க மருமகளுக்கு உங்க மேலே கோபம். அதனாலே என்னோட வரமுடியாதுன்னு சொல்லிவிட்டாள். உங்க உடம்பு தேறட்டும்பா! அப்புறம் நான் போய் அவளைச் சமாதானப் படுத்தி அழைச்சுட்டு வரேன்." சிங்காரம் தன் பெரியம் மாவைப் பார்த்துக் கொண்டே சொன்னான். தான் சொல் வதை அவள் ஒப்புக்கொள்ள வேண்டுமே?

"ராசமாணிக்கம்! எப்படியாச்சும் உன் புள்ளைகளை அழைச்சு வந்து காண்பிச்சுடு. மருமகள் கிட்டேயும் நான் பண்ணின கொடுமைக்கு மன்னிப்புக் கேட்டுக் கொள்ளணும். அப்போதான் என் மனசு நிம்மதி அடையும். நீங்க எல்லாருமே பம்பாயை விட்டுட்டு இங்கே வீட்டோட வந்துடுங்க. அப்புறம் உன் அம்மாவுக்கும் யாரு துணை?" ஆழ்ந்த கிணற்றின் அடியில் இருந்து வரும் குரல் போல, அவருடைய உள்ளத்தின் ஆழத்திலிருந்து மெலிந்து வந்தது. இன்னமும் ஊற்றுப் போலக் கண்ணீர் பெருகிக் கொண்டிருந்தது.

"ஆகட்டும்பா!" என்றான் சிங்காரம். தன்னை இராச மாணிக்கமாக அவர் ஏற்றுக் கொண்டு விட்டதில், அவனுக்கு எல்லையற்ற மகிழ்ச்சி.

சிறிது நேர இருமலுக்குப் பிறகு துரை கூறினார்:

"நீ வீட்டோடேயே இருந்துடு ராசமாணிக்கம்! இனி மேலுக்கு நீ எங்கேயும் போகக்கூடாது. உன் பெண்டாட்டி பிள்ளைகளோடே இந்த வீடு இனிமேலுக்காவது கலகலப் பாயிருக்கட்டும். உன் சிற்றப்பன் பாலுவும் அவன் மகன் சிங்காரமும் சேர்ந்து நம்முடைய சொத்தைக் கொள்ளை அடிச்சுடுவான்க. அதனாலே நீயும் உன் அம்மாவும் சொத்து கொள்ளை போகாமல் ரொம்பக் கவனமா இருக்கணும். நீ மறுபடியும் பம்பாய்க்குப் போயிடாதே. அங்கே கணக்கு வழக்கைத் தீர்த்துட்டு ஒரேயடியா இங்கேயே வந்துடுப்பா! உன் சிற்றப்பனும் அந்தச் சிங்காரம் பயலும் ரொம்பப் பொல்லாதவன்க. எனக்குக் கண் தெரியாம போனதுக்குப் பிறகு அவனுக பாடுதான் ரொம்ப கொண்டாட்டமாயிடுச்சு. நீ வந்துட்ட பிறகு அவங்களாலே ஒண்ணும் பண்ணிக்க முடியாது. உன் அம்மாவை பார்த்துக்க. நான்தான் கொடுத்து வைக்காதவன்."

சிங்காரம் வேலம்மாவைப் பார்த்தான்.

"என்னப்பா? ராசமாணிக்கம்! இந்தா சாவி. உன் அம்மாவுக்குத் தெரியும் எல்லாம்- கவனமா இருங்க-" என்ற துரை தம் தலையணைக்கும் கீழே தடுமாறி எடுத்த சாவிக்கொத்தை நீட்டினார்.

திறவுகோலை வாங்கிக் கொள்ளும்படி அவள் சைகை காட்டினாள். அவன் வாங்கிக் கொண்டான்.

"வாப்பா ராசமாணிக்கம்! சாப்பிட்டு வந்து அப்புறம் மேலே உங்க அப்பாகிட்டே பேசிகிட்டு இருக்கலாம், வா!" என்று அழைத்தாள் வேலம்மா. மேலும் மேலும் அவர் வசை மொழிகளை வீசுவதற்கு முன்பு அவனை அழைத்துச் சென்றுவிட விரும்பினாள். "ஊரிலிருந்து, ரொம்ப தூரத்திலிருந்து வந்த பிள்ளை இன்னும் சாப்பிடாமல் உட்கார்ந்து கொண்டிருக்கியே, வாப்பா!"

சிங்காரத்தைத் தனியாக அழைத்து வந்ததும், "வருத்தப் படாதேப்பா சிங்காரம்! ஏதோ வயசுக்கோளாறு. நோயாளி. என்ன சொன்னாலும் பெரிசா எடுத்துக் கொள்ளாதே!" என்றாள் குரலைத் தாழ்த்திக் கொண்டு வேலம்மா.

"இல்லே பெரியம்மா! எங்க மேலே பெரியப்பாவுக்கு இவ்வளவு கோபம் இருக்கும்னு நான் நினைக்கல்லே. சரி போகட்டும். ஒரு சேதி உங்ககிட்டே சொல்லலேயே. அண்ணன் கடிதாசி எழுதி இருந்தாரே-பெரியப்பாவின் இறுதிச் சடங்குக்குக் கட்டாயம் வந்துடுவேன், சொத்துக் காகத்தான் – அப்படின்னு. நான் என்ன பண்ணினேன் தெரியுமா பெரியம்மா? அண்ணனுக்குத் தந்தி கொடுத்திட் டேன், காரியம் முடிஞ்சிடுச்சுன்னு. அநேகமா அண்ணன் புறப்பட்டு வந்தாலும் வந்திடுவாரு. அதுக்கப்புறம்,

இந்நேரம் நான்தான் அண்ணன் மாதிரி நடிச்சேன் என்கிறது பெரியப்பாவுக்குத் தெரிஞ்சா......எனக்குப் பயமா இருக்கு!'' என்றான் சிங்காரம்.

''நல்ல காரியம் பண்ணினேப்பா. எப்படியோ உன் பெரியப்பா உயிரோட இருக்கும்போதே ராசமாணிக்கம் வந்துட்டா போதும். ஆனால் அவன் எங்கேவரப்போறான்?'' என்று தன் ஆழ்ந்த ஏக்கத்தைத் தெரிவித்துக் கொண்டாள் வேலம்மா. ''அப்படியே வந்துட்டாலும் எல்லா விவரத்தையும் சொல்லி உன்னையும் உன் அப்பாவையும் திட்டாமே நான் பார்த்துக்கிறேன் சிங்காரம்!'' என்று அவனுக்கு ஆறுதல் வழங்கினாள்.

அப்பொழுது வாசலில் குரல் கேட்டது.

''தபால்!''

விரைந்து சென்று தபால்கார ஐயாவிடமிருந்து கடிதத்தை வாங்கினாள் வேலம்மா.

அவனிடமிருந்து கடிதத்தை வாங்கிப் பிரித்தான் சிங்காரம். உள்ளே துரை முணகிக் கொண்டும் திணறிக் கொண்டும் இருந்தார்.

''என்னப்பா?'' வேலம்மா கேட்டாள்.

''ஐயோ! பெரியம்மா!'' என்று பெரிதாக ஓலமிட்டான் சிங்காரம்.

''என்னப்பா சிங்காரம்? சொல்லேன் — படிச்சுச் சொல்லேன்.''

''மதிப்புக்குரிய வேலம்மா அவர்களுக்கு, உங்களுடைய பரிதாபத்திற்குரிய நிலைமைக்கு வருந்துகிறோம். தாங்கள் ராசமாணிக்கத்தை வரச்சொல்லி எழுதிய ஏராளமான கடிதங்களை நாங்கள் அறிவோம். கடைசியாக ராசமாணிக்

கத்தின் தந்தை மரணப் படுக்கையில் இருப்பதாகவும், அவனைப் பார்க்க அவர் ஆவலோடும் அதே நினைப்போடும் உயிருக்கு மன்றாடிக் கொண்டிருப்பதாகவும், அவனை மனைவி மக்களோடு உடனே புறப்பட்டு வரும்படியும் கடிதம் எழுதி இருந்தீர்கள். அவனுடைய நண்பர்களாகிய நாங்கள் அவனை ஊருக்குப் போகச் சொல்லிக் கட்டாயப் படுத்தினோம். அவன் கேட்கவில்லை. தந்தையின் இறுதிச் சடங்குக்குக் கட்டாயம் வந்து விடுவதாக அவன் அகந்தை யோடும் மிருகத் தனத்தோடும் தங்களுக்குக் கடிதம் எழுதினான். அதன் பிறகுதான் அவனுடைய கேவல புத்தி எங்களுக்குப் புரிய வந்தது. நாங்கள் கட்டாயப்படுத்தினோம். ஊருக்கு அனுப்பி வைத்து, தந்தையைப் பார்த்துவிட்டு வரும்படி அனுப்பினோம். அவனோடு அவன் மனைவியும் மூன்று குழந்தைகளும் புறப்பட்டனர். அப்பொழுதுதான் சிங்காரம் என்பவர் கொடுத்த தந்தியும் கிடைத்தது. அவர் தன்னுடைய சிறிய தந்தையின் மகன் என்று ராசமாணிக்கம் கூறினான். தந்தையை இழந்த செய்தி கிடைத்த பிறகுதான் ராசமாணிக்கம் மனிதனானான். அப்பாவை நினைத்து அழுதான். அழுது கொண்டே தன் குடும்பத்தோடு ரயில் ஏறினான்.

''எப்படி எழுதுவது என்றே புரியவில்லை. 'தந்தையின் இறுதிச் சடங்குக்கு வருவோம்'' என்று எழுதிய ராசமாணிக்கம் தன் குடும்பத்தோடு தந்தையைச் சந்திக்கவே சென்று விட்டான். ரயில் விபத்தில் குடும்பத்தோடு ராசமாணிக்கம் இறந்துவிட்ட செய்தி கிடைத்திருக்கிறது—''

கடிதத்தை முடிக்கவில்லை சிங்காரம். மயங்கிக் கீழே விழுந்த தன் பெரியம்மாவைத் தாங்கிக் கொண்டான் அவன்.

உள்ளே கிடந்த துரைக்கு முழு விவரமும் விளங்க நேரம் பிடித்தது. ராசமாணிக்கம் போலப் பேசிக்

கொண்டிருந்தவன் சிங்காரம்தான் என்பதை அவர் நம்ப வில்லை. பேசவும் சக்தியற்று, கண்ணீர் பெருகிய கண்களோடு அவர் மற்றவர்கள் சொன்ன உண்மையை நம்பித் தீரவேண்டிய நிலைமை வந்தபோது தொண்டைக் குழியில் அடைபட்டு வந்தன வார்த்தைகள்:

"எனக்காகப் பாசத்தோடே கண்ணீர் விட்டு, 'அப்பா'ன்னு அழைச்சானே சிங்காரம்...! அது போதும் எனக்கு. அவன் அவனோட அப்பனுக்குச் சிங்காரமா யிருக்கட்டும். எனக்கு அவன்தான் ராசமாணிக்கம்...! ராசமாணிக்கம்.. என் கண்ணே.. அப்பா ராசமாணிக்கம்...!"

சிங்காரம், "அப்பா!" என்று ஓலமிட்டு அழுதான். வேலம்மா துரையின் மீது விழுந்து கதறினாள்.

கூட்டத்தின் நெரிசலிலிருந்து வியர்வையைத் துடைத்துக் கொண்டு டாக்டர் வெளியேறினார். ●

---

மனித நேயச் சாயலுடன் எழுதக் கூடுதல் திறமை தேவை. முன்னைய இலக்கிய அறிவு வேண்டும். பண்பாட்டுணர்வும் மனித அன்பும் உலகம் வாழும் எண்ணமும் வேண்டும். இந்த நல்ல நோக்கத்தோடு, சுவைபடவும் எழுதவல்லவனே எழுத்தாளனாக முடியும்; மற்ற எழுத்தர்களெல்லாம் வெறுமனே 'படி' எடுக்கும் எழுத்தர்களே!...

'மிக்க பொருளினுள் பொருள் வகை புணர்க்க
நாணுத் தலைப்பிரியா நல்வழிப் படுத்தே'
(தொல்காப்பியம்)

பாடப்படும் பாட்டுப்பொருளில், அறக்கழிவுடையதும்வரின் அதை நாணத்தின் நீங்காதபடி, நல்வழிப்படுத்திச் சேர்த்து எழுதுக என்பதாம். நாகரிகம் குலையாமல், பண்பாடு சிதையாமல் என்பதைச் சுருக்கமாக – 'நாணம் நீங்காமல்' என்றும் 'நல்வழிப்படுத்து' என்றும் தொல்காப்பியர் கூறுகிறார். இந்த அளவு கோல்களை வைத்து, இன்றைய இயக்கத்தினை அளந்தால்தான், அவற்றின் உண்மையான மதிப்புப் புலனாகும்.

— தமிழண்ணல்

---

# அந்த விளக்கு வேண்டாம்

"என்னப்பா தம்பி உருட்டுறே அங்கே இருட்டிலே?"

வீட்டுக்கு வெளியே மெழுகிய கட்டாந்தரையில் தலைக்குப் பலகைக் கட்டையை வைத்துக்கொண்டு படுக்கச் சென்ற அம்மா தலையைத் திருப்பி உள்ளே பார்த்துக் கேட்டாள். இருட்டில் அவளுக்கும் பார்வையில் ஒன்றும் படவில்லை.

"விளக்கு—விளக்கு எங்கேம்மா?" என்று கத்தினான் தங்கவேல்.

"வெளக்கை வெச்சுக்கிட்டு என்ன பண்ணப் போறே?"

பள்ளி மேல்நிலை இரண்டாம் ஆண்டுத் தேர்வுக்குப் படிக்க வேண்டியவன் —

"பாடம் படிக்கணும் அம்மா. பரீட்சை வருது."

அவன் அம்மாவுக்கு எரிச்சல் வந்தது.

"பொழுது போறதுக்கு முன்னாலேயே படிச்சுத் தொலைக்க வேண்டியதுதானே?"

"பகலிலே மட்டும் படிச்சா போதாதும்மா. நான் நிறைய மார்க்கு வாங்கணுமா வேணாமா?"

தெருவில் மின் விளக்கும் வீட்டின் லாந்தரும் அவனுக்கு வெளிச்சம் கொடுத்த காலம் போய்விட்டது. முன்னெல்லாம் தெரு விளக்கு கெட்டுப் போனால் விளக்கு மரத்துக்கு

அருகில் உள்ள வீட்டைச் சேர்ந்தவர்கள் காசு சேர்த்து பல்பு வாங்கிக் கொடுத்தால் மின்சாரத் துறையைச் சேர்ந்தவன் ஒரு ரூபாய் வாங்கிக் கொண்டு மரம் ஏறி பல்பு போட்டுக் கொடுத்தான். இப்பொழுது அதற்கும் வேலை இல்லை. எந்தத் தெரு விளக்கும் போடுவதில்லை.

"பொட்டு மண்ணெண்ணெய் கிடையாது வீட்டிலே. என்னை என்னடா பண்ணச் சொல்றே? நீயே போய் எங்கேயாச்சும் ஒரு புட்டி மண்ணெண்ணெய் வாங்கி வரது தானே? என் உயிரை எடுக்கறியே? பொழுதண்ணைக்கும் மாடு மாதிரி வேலை செஞ்சிட்டு வந்து கொஞ்சம் தலையைச் சாய்க்கப் போனா உன் எழவு வேறே," என்று அம்மா கத்தினாள்.

"கடலை எண்ணெயாவது கொடேம்மா. லட்சுமி விளக்கிலே ஊத்திக் கொளுத்திக்கிறேன்."

"நீ தீவட்டி மாதிரி வெளக்கை எரிப்பியே? இங்கே தாளிக்கவே எண்ணெய் இல்லே. பேசாமே படு. காலம்பற படிக்கலாம். நாளைக்கு மண்ணெண்ணெய் வாங்கியாந்து வெச்சுக்க. என்னைத் தொந்தரவு பண்ணாதே!"

அவள் தலையைச் சாய்த்து விட்டாள்.

யார் வீட்டுத் திண்ணையிலோ உட்கார்ந்து ஊர் வம்பு பேசிவிட்டு வீட்டுக்குத் திரும்பினான் தகப்பன் பொன்னுசாமி.

விஷயத்தைக் கேட்டதும், "விளக்கு வேணுமா உனக்கு? படிக்கத்தானே?" என்றான்.

பதில் கூறவில்லை தங்கவேல். படிக்க இல்லாமல் வேறே எதற்கு? தாயக்கட்டை, பல்லாங்குழி விளையாடவும் கதை பேசவுமா?

"புத்தகத்தை எடுத்துக்கிட்டு என் கூட வா—"

"எங்கே?"

"வாயேண்டா சொல்றேன். உன் பரீட்சை முடியுற வரைக்கும் நீ கரண்டு வெளக்கிலேயே படிக்க நான் ஏற்பாடு பண்றேன்."

தங்கவேலுக்கு ஒரே மகிழ்ச்சி. பரபரப்பாக உள் அடங்கிய திண்ணையிலேயே ஒழுங்குபடுத்தி வைத்திருந்த புத்தகத்தையும் நோட்டையும் இருட்டில் குறிப்பாக அறிந்து எடுத்துக் கொண்டான்.

"எங்கே வரணும்?" என்றான் ஆவலுடன்.

"அதான் கூப்பிடுதுல்ல? போயேண்டா. ஏட்டிப் போட்டியாவே பேசிகிட்டு இரு" என்று இரைந்தாள் அம்மா. அசதி; களைப்பின் தூக்கக் கலக்கம்.

"மாரியப்பன் வீட்டுக்குத்தான். வெளி ஆளோடி விளக்குதான் அங்கே விடிய விடிய எரியுதே? எள்ளு மூட்டை அடுக்கி வைச்சிருக்கிறான் இல்லே? விளக்குப் போட்டால் எலி தின்னாது அங்கே உட்கார்ந்து படிக்கலாம். விடிய விடியக் கூடப்படிக்கலாம். தூக்கம் வந்தா அங்கேயே தூங்கலாம். இல்லே வீட்டுக்கு வந்துடலாம்." என்றான் பொன்னுசாமி.

அரிய வாய்ப்பும் வசதியும் திடீர் வெள்ளமாக வந்து விட்டதுபோல் இருந்தது தங்கவேலுக்கு.

மாரியப்பனின் வீட்டின் நீண்ட ஆளோடியிலும் அதைச் சார்ந்த உயர்ந்த திண்ணையிலும் இரு முனைகளில் டியூப் விளக்குகள் எரிந்தன. பாதித் தெருவுக்குப் பரவிய வெளிச்சம். வியாபாரத்தாலும் கட்சி அரசியலாலும் புதிய பணக்காரன் அவன்.

தகப்பனின் பின்னால் குஷியாகச் சென்றான் தங்கவேல்.

யாருடனோ பேசிக் கொண்டிருந்த மாரியப்பன் தன் பேச்சை நடுவில் வெட்டி விட்டுப் பொன்னுசாமி வந்த வேலையைப் பற்றிக் கேட்டான்.

அவன் சொன்னதும் மாரியப்பன் முகம் சுருங்கி விட்டது.

"அது எப்படி பொன்னுசாமி? பன்னிரண்டாவது படிக்கிற பையன், வெளியிலே உட்கார்ந்து படிச்சா கூட, நாலு பேரு பார்க்கிறவங்களுக்கு எப்படி இருக்கும்? வீட்டிலே பாப்பா இருக்கு. வயசுக்கு வந்த பொண்ணு. அதுக்கும் பத்தாவது பரீட்சை. உள்ளே படிக்குது. நீ சொல்றது சரிப்பட்டு வராதே."

மாரியப்பனின் பேச்சை முழுவதுமாகக் கேட்கவில்லை தங்கவேல்.

அழுகை அழுகையாக வந்தது.

வீட்டுக்கு வந்து புத்தகங்களைத் திண்ணையில் எறிந்து விட்டு அவற்றின் அருகிலேயே பாயை இழுத்துப் போட்டுப் படுத்து விட்டான்.

காலையில் குளக் கரையில் சலவைத் தொழிலாளியான தன்னுடைய நண்பன் சொக்கலிங்கத்திடம் தன்னுடைய உள்ளக் குமுறலைக் கொட்டினான் தங்கவேல்.

"நல்லா படிக்கணும்னு பார்த்தால் முடியலியே? எந்த வீட்டிலே எந்தப் பெண் இருக்கிறாள் என்பதையா நான் கவனிச்சிட்டிருக்கேன்? இவர் வீட்டுப் பாப்பா எத்தனையாவது படிக்கிறாள் என்பதே எனக்குத் தெரியாது. வெளியிலே சும்மா எரிகிற டியூப் லைட்டு வெளிச்சத்திலே படிக்கிறேன்னு சொன்னால் உள்ளே

பாப்பா இருக்கு என்கிறார். இவர் பாப்பாவுக்காக நான் அங்கே படிக்கப் போறதா நினைச்சுகிட்டார். பணத் திமிர். இவர் வீட்டுக்கு முன்னாலே பின்னாலே எல்லாம் கரண்டு இருக்கு. லைட்டு எரியுது.''

சொக்கலிங்கம் வெள்ளாவி வைத்த துணியை அடித்துத் துவைப்பதை நிறுத்திவிட்டு நிமிர்ந்தான்.

''நான் சொல்றபடி செய். அவன் பாப்பாவுக்குக் கையெழுத்துப் போடாமே மொட்டையா ஒரு காதல் கடிதாசு கொடு. நான் செய்யறேன் வேலையை. தினம் ரெண்டு தடவை நான் அந்தப் பெண்ணைப் பார்க்கிறேன்''.

''எதுக்குடா கடிதாசி?'' என்றான் தங்கவேல்.

''நீ அந்தப் பொண்கிட்டே தப்பா நடந்துக்குவேன்னு சொன்னாரில்லே? நிஜமாகவே நடந்துக்கலாம். அப்பத் தான் புத்தி வரும்!''

தங்கவேல், ''சே, சே! வேண்டாம்பா! அப்பா ஏதோ சொன்னார் என்கிறதுக்காக ஒரு நல்ல பெண்ணோட மனசை நோகடிக்கக் கூடாது,'' என்று கூறிவிட்டான்.

கண் எழுத்து மறையும் நேரம் வரையில் ஆர்வத்துடன் படித்துக் கொண்டிருந்தவன் திண்ணை மறைவிலிருந்து தெருவுக்குத் வந்து கட்டாந் தரையில் உட்கார்ந்தான்.

''மண்ணெண்ணெய்க்காக உங்க அப்பா போனது வெறும் டின்னோட வந்திடிச்சு. இன்னைக்கு ராத்திரியும் என் உயிரை எடு,'' என்றாள் வெளியிலிருந்து கூடையுடன் வந்த அம்மா.

''என்ன செய்யலாம்?'' என்ற சிந்தனையுடன் தெருவைப் பார்த்திருந்தான் அவன்.

சொக்கலிங்கம் ஒரு பையுடன் வந்தான்.

“இந்தா மண்ணெண்ணெய். ரெண்டு புட்டி இருக்கு. ஊத்தி ஊத்தி லாந்தரைத் திவட்டியா எரிய விட்டுப் படி. ஒரு நாளைக்கு ஒருபுட்டி கொண்டாந்து தரேன்!” என்ற அவன் இரண்டு பாட்டிலைக் கொடுத்தான் பையுடன். மண்ணெண்ணெய் நிறைந்த நீண்ட பாட்டில்கள்.

தங்கவேலுக்கு ஒரே ஆச்சரியம். “ஏதுடா?”

மெதுவாய்ச் சொன்னான் அவன் தோழன்: “நான் வந்துட்டிருக்கிறப்போ அந்தப் பாப்பா கூப்பிட்டுக் கொடுத்தது. நேத்து உன் அப்பாகிட்டே அதன் அப்பா பேசினதைக் கவனிச்சுதாம். நாம்ப பேசிட்டிருந்ததையும் கேட்டுதாம். தங்கவேல் படிப்பிலே ரொம்ப ஆர்வமாயிருக்கிறான். நல்லா படிக்கச் சொல்லு’ன்னு சொல்லி இந்த மண்ணெண்ணெயைக் கொடுத்து அனுப்பிச்சுது.

தங்கவேலுக்குப் பேசத் தெரியவில்லை. அவன் கண்கள் குளமாகின. ●

---

“படைப்பு, படைப்பாளி ஆகிய இரண்டிற்கும் சமுதாயத்துடன் உள்ள ஒட்டுறவு மிக முதன்மை இவ்வொட்டுறவு மூவகைப் பட்டதாக இருக்கலாம்.

1. சமுதாயத்தை எதிரொளிப்பது.
2. சமுதாய மக்களின் பொழுதைப் போக்க உதவுவது.
3. சமுதாயத்தை விமர்சிப்பது – வழி நடத்துவது”

துணைவேந்தர் க. ப. அறவாணன்

---

# சம்பாதிக்கிறாய், சொல்லுகிறாய்!

கணவனைக் கேட்காமல் எப்படி அந்தக் காரியத்தைச் செய்வது? திலகம் வெகு நேரம் குழம்பினாள்.

அன்று பள்ளிக்கூடம் விடுமுறை. பள்ளி ஆசிரியையான அவள் வீட்டில் தங்கும் நாள்.

அவள் கணவன் சங்கரலிங்கத்துக்கு ஆபீஸ் உண்டு. ஆனால் விரைந்து வீடு திரும்பி விடுவான்.

அவன் திரும்பி வரும் வரையில் திலகத்துக்கு வேலை இல்லை. வாரக்கடைசியில் நடந்த பரீட்சையின் விடைத் தாள்கள் திருத்த வேண்டியவை மட்டும் ஒரு கட்டுத் தங்கி இருந்தது. அதைத் திருத்தி விடலாம் என்று சிவப்பு வண்ணப் பென்சிலைச் சீவி, கூராக்கிக்கொண்டு நாற்காலி யில் வந்து உட்கார்ந்தபோது வெளியில் சைக்கிள் மணி அடித்தது.

"தபால்!

ஒற்றைக் கதவின் திறந்த சன்னல் வழியே உள்ளே வந்து விழுந்த கடிதத்தைத் தாவி எடுத்தாள் திலகம்.

அது அவள் பெயருக்கு வந்திருந்தது. தஞ்சாவூரி லிருந்து அவள் அம்மா எழுதியிருந்தாள்.

"...உன் தம்பி ரவிக்குப் பரீட்சைப் பணம் கட்ட வேண்டும். உன் அக்காவுக்குக் குழந்தை பிறந்ததிலிருந்து நான் இன்னும் பார்க்கப் போகவில்லை. அவள் மாமியார்

வீட்டில் யாராவது ஏதாவது சொல்லி விடுவதற்கு முன்பு நான் போய்ப் பார்த்து வர வேண்டும். மிகவும் பணம் நெருக்கடி. உன்னுடைய இந்த மாதச் சம்பளத்தில் எப்படியாவது ஒரு ஐம்பது ரூபாய் அனுப்பிவை. அடுத்த மாதம் திருப்பி அனுப்பி விடுகிறேன். உன் பதிலை ஆவலோடு எதிர்பார்த்திருக்கிறேன்.''

திலகத்தின் கண்களில் கண்ணீர் திரண்டு மறைத்தது. அவள் சிறிதும் தாமதிக்கவில்லை.

மேசையைத் திறந்து ஒரு மணியார்டர் பாரம் எடுத்தாள். அம்மாவின் பெயருக்கு ஐம்பது ரூபாய் எழுதினாள். எழுதி முடித்த நொடியிலேயே அம்மாவிடம் அந்தப் பணம் போய்ச் சேர்ந்து விடாதா, அவளுக்கு மன அமைதியை அளிக்காதா என்று துடியாய்த் துடித்தது அவள் நெஞ்சம்.

அப்போதுதான் குழப்பம் ஏற்பட்டது மனத்தில்.

'அவர்' என்ன நினைப்பார்? என்ன சொல்வார்?

வீட்டின் தலைவனைக் கேட்காமல் தன் அம்மாவுக்குப் பணம் அனுப்பலாமா? அவர் எப்படி நினைத்துக்கொள் வாரோ?

மாலை வந்தது.

சங்கரலிங்கம் வந்தான்.

அவனிடம் கடிதத்தைக் கொடுத்தாள் திலகம். வீட்டுக் கணக்கை ஆசிரியரிடம் கொடுத்துவிட்டு அவர் முகத்தைப் பார்த்துக்கொண்டு நிற்கும் மாணவிபோல அவள் நின்று கொண்டிருந்தாள்.

சங்கரலிங்கம் சிறினான்:

"ஆமாம்! உன் அம்மாவுக்கு வேறே வேலை என்ன? இங்கே என்ன பணம் கொட்டியா கிடக்கிறது? ஏதோ இரண்டு பேரும் சம்பாதிக்கிறோம் என்று பெத்த பேர்! என்ன மிச்சம்? வரவுக்கும் செலவுக்கும்தான் சரியா யிருக் கிறதே!"

அவன் முகத்தைச் சுளித்துக் கொண்டு கடிதத்தைச் சாய்வு நாற்காலியில் எறிந்துவிட்டு முகம் கழுவப் பின்புறம் போனான்.

அவன் பின்னாலேயே சென்றாள் அவள்.

"அம்மாதான் அடுத்த மாதம் பணம் திருப்பி அனுப்பி விடுகிறேன் என்று எழுதியிருக்கிறாளே?"

அவள் குரலில் தயக்கம் நிறைந்தது.

"நாம் அனுப்பவும் வேண்டாம். அவள் திருப்பவும் வேண்டாம். இந்த மாதிரி பழக்கம் ஏற்படுத்திக் கொள்ளவே வேண்டாம்!"

அவள் அமைதியாக நின்றாள். "சரி, அப்புறம் உங்கள் விருப்பம். மணியார்டர் பாரம்கூட எழுதித் தயாராய் வைத்திருந்தேன்..."

காப்பியைச் சுவைத்துக் கொண்டிருந்தான் சங்கரலிங்கம்.

"ஏன், நீ புறப்படவில்லையா?" அவன் அவளைக் கேட்டான்.

"எங்கே?"

"எங்கேயா? காலையில் சொன்னது என்ன ஆயிற்று? நான் ரிசர்வ் வேறே செய்துவிட்டேன். 'எங்கே' என்று

கேட்கிறாயே! நீ புறப்படுவதற்குள்ளே படம் பாதி ஓடிப் போய்விடும்!"

திலகத்துக்கு அப்போதிருந்த மனநிலையில், சினிமா பார்க்கவா பிடிக்கும்? இருந்தாலும் கணவனின் கோபத்துக்கு அஞ்சி, புறப்பட்டாள். நல்ல வேலையாக அங்கே பேசுவதற்கு கொஞ்சம் வாய்ப்பு கிடைத்தது. இடைவேளையின் போது சங்கரலிங்கம் மகிழ்ச்சிக் கிளுகிளுப்பில் மூழ்கியிருந்தான்.

"நான் ஒன்று சொல்கிறேன், கோபிக்காதீர்கள்." என்று திலகம் பேச்செடுத்தாள்.

"அதுதான் சொல்லனுமென்று நினைத்துவிட்டாயே? சொல்லிவிடு. அப்புறம் என்ன, முகவுரை, பின்னுரையெல்லாம்?"

"வந்து... நான் புடவை எடுக்கனும் என்று வைத்திருக்கிற ரூபாய், அதை என் அம்மாவுக்கு அனுப்பி விடுகிறேனே?"

"அனுப்பிவிட்டு?"

"அடுத்த மாதம் அம்மா பணம் திருப்பி அனுப்பியதும் நான் புடவை எடுத்துக் கொள்கிறேன்."

"அதுவரைக்கும்?"

"என்கிட்டேதான் நிறையப் புடவை இருக்கிறதே?"

"எங்கே இருக்கிறது? கட்டின புடவையையே திருப்பித் திருப்பி ஓயாமல் கட்டிக்கொண்டு ... சகிக்கவில்லை உன் கோலம்!"

"பெண்களைப்போல நீங்கள் பேசுகிறீர்களே! புடவை நன்றாயில்லாதது எனக்கல்லவா தெரிய வேண்டும்? நானே இருக்கிற புடவை போதும் என்கிறபோது—"

அவன் வெகுண்டான். "எப்படியாவது நீ உன் அம்மாவுக்குப் பணம் அனுப்ப வேண்டும்? ஏனென்றால் நீயும் சம்பாதிக்கிறாய்! இல்லையா? அந்தத் திமிர்! பணத்தைச் செலவழிக்க உனக்கும் உரிமை உண்டு என்கிறாய்?"

திலகம் நாணத்தினால் உள்ளம் வெம்பினாள்.

"ஐயோ! இரையாதீர்கள்! நானே சம்பாதிக்காவிட்டாலும் உங்களிடம் அம்மா உதவி கேட்டால் அதைச் செய்ய உங்களுக்குக் கடமை இல்லையா? இனிமேல் நான் பேசவில்லை..."

அவள் கண்கள் கலங்கின. இருண்ட தரைப்பகுதியையே பார்த்தவாறு அமர்ந்திருந்தாள்.

அவன்?

உம்மென்று உட்கார்ந்திருந்தான்.

இடைவேளைக்குப் பிறகு படம் என்ன நடந்தது என்றே தெரியவில்லை இருவருக்கும்.

மறுநாள்.

சங்கரலிங்கம் யந்திரம் போல் கடமைகளைச் செய்து கொண்டிருந்தான். கொஞ்சம் முன்னதாகவே வேலைக்குப் புறப்பட்டுப் போய்விட்டான். வீட்டை விட்டுப் போவதற்கு முன்பு திலகத்திடம் வழக்கமாகப் பேசும் கிண்டலும் கேலியும் இன்று காணப்படவில்லை.

காரியாலயத்தில் வேலை பார்க்கும் போதும் கசப்பு உணர்ச்சியே அவன் மனத்தில் மேலோங்கி நின்றது.

"உங்களுக்கு ஒரு கடிதம் சார்!" என்று அவன் பெயருக்கு வந்திருந்த ஒரு கடிதத்தைக் கொடுத்துவிட்டு அகன்றான் பியூன்.

அந்தக் கடிதம் அவனுடைய தந்தை எழுதியிருந்தார்.

''அன்புள்ள சங்கரலிங்கத்துக்கு,

நீ ஏன் இந்த மாதம் பணம் அனுப்பவில்லை? நீ இப்படிச் செய்வாய் என்று நான் எதிர்பார்க்கவில்லை. உன் தம்பி மணிக்கு இந்த மாதப் பரீட்சைக்குப்பணம், வருகிற திங்கட் கிழமைக்குள் கட்டியாக வேண்டும். அதோடு சம்பளமும் கட்டவேண்டியிருக்கிறது. கறவை மாடு ஒன்று வாங்கி விட்டேன். நமக்குப் பணம் கொடுக்க வேண்டியவர்கள் கொடுக்கவில்லை. வீட்டு வாடகையும் வரவில்லை. அதனால் இந்தக் கடிதம் கண்டவுடன் ஐம்பது ரூபாய் அனுப்பு. மிக அவசியம்.''

திடுக்கிட்ட சங்கரலிங்கம் கைக்கடியாரத்தைப் பார்த்தான்.

ஐந்தடிக்கப்'பத்து நிமிடம் இருந்தது. மாலைத் தபாலில் வந்திருக்கிறது அந்தக் கடிதம்! இனி, மணியார்டர் செய்ய நேரம் கிடையாது!

'சே!' என்று தலையில் தட்டிக் கொண்டான் சங்கரலிங்கம்.

கையில் பணம் இல்லாமல் அப்பா எவ்வளவு தொல்லைப் படுகிறாரோ! நாளைக்கு ஞாயிற்றுக்கிழமை. திங்கட்கிழமை பணம் அனுப்பினால் செவ்வாய்க்கிழமைதானே போய்ச் சேரும்! இல்லாவிட்டால் தந்தி மணியார்டர் பண்ணலாம். அது கிராமம். தந்தி மணியார்டரும் எப்போது போய்ச் சேருமோ?

வருத்தம் தோய, தனக்குத் தானே பேசிக்கொண்டும், முணுமுணுத்துக் கொண்டும் வீடு திரும்பினான் சங்கரலிங்கம்.

திலகம் கவலையுடன், "ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

"சொன்னால் உடனே தீர்த்து விடுவாய்!" என்று எரிந்து விழுந்தான்.

இலை போட்டுப் பரிமாறும் போது கூடத் திலகம் சிரித்துப் பேசி அவன் மனத்தைக் கவர முயன்றாள். இயலவில்லை.

அவனுக்கு ஒரு யோசனை உதித்தது.

பணத்தை எடுத்துக்கொண்டு ரயில்வே ஸ்டேஷனுக்குப் போய்ப் பார்க்கலாம். தெரிந்தவர்கள் யாராவது ஊருக்குப் போகக் கூடும். அவர்களிடம் கொடுத்தனுப்பலாம். அப்பாவுக்கு...

"திலகம்! உன் ஐம்பது ரூபாயை எடு... இந்த மாதம் புடவை எடுக்க வேண்டாம்," என்றான்.

"அது... அந்தப் பணம்... இல்லையே..."

"என்ன! இல்லையா?" சங்கரலிங்கம் கர்ஜித்தான்.

"ஆமாம்......மணியார்டர் பண்ணிவிட்டேன் _ ...!"

சங்கரலிங்கத்தின் உடம்பு பூரா குலுங்கியது கோபத்தினால். "என்ன திமிர்! அவ்வளவு தூரம் நான் தடுத்த பிறகுமா?"

"இதோ ரசீது...... பாருங்கள்," என்று மேசைமீது வைத்தாள் திலகம்.

அவன் குமுறினான்: "வரவர எல்லாம் உன் இஷ்டம் போல நடக்கிறது! நேற்று நான் 'கூடாது' என்று அவ்வளவு சொன்னேனே! மனுஷனாய்த் தெரியவில்லையா? பதில்

சொல்லடி! தொண்டையிலே கொழுக்கட்டையா அடைத் திருக்கிறது?'' என்று கூச்சலிட்டபடி அவள் முகத்தைப் பார்த்தவன், அந்தச் செவ்விதழ்களில் தவழ்ந்த புன்னகையைப் பார்த்துத் திடுக்கிட்டான். ''சிரிப்பு என்ன வேண்டிக் கிடக்கிறது?'' என்று கத்தினான் ஆத்திரமாக.

அமைதியாகப் பேசினாள் திலகம்: ''முழுக்கப்பார்க்காமல் ஏன் இப்படிக் கோபப்படுகிறீர்கள்? ரசீதைப் பாருங்கள். பார்த்துவிட்டு என்னை எது வேண்டுமானாலும் சொல்லுங்கள்!''

பொறுமையுடன் அவன் கையில் மணியார்டர் ரசீதைக் கொடுத்தாள் திலகம்.

சீட்டைப் பார்த்த சங்கரலிங்கம் முகம் கறுத்துப் போனான். ''திலகம்!'' அவளுடைய கையை ஆதரவோடு பிடித்துத் தன் அருகில் அவளை இழுத்தான் அவன். ''என் அப்பா பேருக்கு இருக்கிறதே? எப்போது அனுப்பினாய்? உனக்கு அவர் செலவுகளைப் பற்றி எப்படி தெரியும்?''

''தெரிந்து கொள்ளத்தானே நான் இருக்கிறேன்? மணிக்கு இந்த மாதம் பரீட்சை, சம்பளப் பணமெல்லாம் கட்டியாகணும். ஊரில் நம் குடும்பத்தில் எந்தெந்த மாதம் என்னென்ன செலவு என்று நீங்கள் மறந்தாலும் நான் மறக்கலாமா? மறந்து விட்டால் நான் என்ன மனைவி அப்புறம்?''

இளம் மாணவர்களுக்குப் பண்புப் பாடம் போதித்துப் பழக்கப்பட்ட திலகம் இப்போது வெற்றிப் புன்னகை புரிந்தாள். ●

# பாதுகாப்பு

தெருவில் சென்ற வற்றல்மாடு ஒன்று சுற்று மதிலின் வாயிற் கதவின் இடைவெளி வழியே தோட்டத்துக்குள் நுழைய முயன்றது. தயங்கி மெல்ல வந்த கருணாகரன் வேகங்கொண்டு அந்த மாட்டை விரட்டிவிட்டு உள்ளே நுழைந்து கதவை இடைவெளி இல்லாமல் அடைத்து விட்டுச் சுற்றுமதிலுக்கும் அழகிய தோட்டத்துக்கும் நடுவாகத் திகழ்ந்த தன் வீட்டை நோக்கிச் சென்றான். மாட்டை விரட்டியபோது இருந்த வேகம், விரைவு இப்போது இல்லை. மீண்டும் தயக்கம், மீண்டும் தடுமாற்றம்.

வெளியில் யாரையும் காணோம். உள்ளே வானொலியின் ஓயாத கத்தல் கூட ஓய்ந்து கிடந்தது. அவன் வீட்டின் வாயிற்படியில் அடி எடுத்து வைத்தபோது, பின்புறமிருந்து விரைவோடு கையில் வேலையோடு வந்த வேலைக்கார அம்மணி அவனைக் கண்டதும் காணக் கூடாதவனைக் கண்டவள்போல அதே வேகத்தோடு சென்று மறைந்துவிட்டாள். இல்லை, இல்லை பதுங்கி விட்டாள்.

திடீரென்று யாருடைய முதுகிலோ அறை விழுந்தது. அடிபட்டவன் அம்பலவாணனாகத் தான் இருக்கும் என்பது அவனுக்குத் தெரியும். அவன் நினைத்தது போன்றே அம்பலவாணன் வீறிட்டு அழுதுகொண்டு சமையலறைப் பக்கமிருந்து ஓடிவந்தான். முன் அறையைக்

கடந்து தன் அறைக்குச் சென்றுகொண்டிருக்கும் அப்பாவைக் கண்டதும் அவன் அழுகை முன்னிலும் தீவிரமாயிற்று.

'அப்பா—' என்ற ராகத்துடன் ஓடிவந்து அவன் கால்களைக் கட்டிக்கொண்டு கதறலை நீட்டினான்.

"அப்பாவாம் அப்பா! திடீர்னு நினைச்சுகிட்டியாடா அப்பனை - மணத்த அப்பனை வைச்சிருக்கிறே இல்லே? பிள்ளை அப்பனை நினைச்சிட்டு அழுவுது அடிவாங்கின சூட்டோடே—" என்று அடுப்பங்கரையில் இருந்தவாறே கத்திய ஆனந்தவல்லி ஏதோ பாத்திரத்தைப் போட்டு உடைத்தாள்.

'மணத்த அப்பன்' வந்துவிட்டதை அவள் பார்த்தாளோ இல்லையோ தெரியவில்லை.

மகன் அம்பலவாணனை அணைத்தபடி அப்பன் கருணாகரன் தன் அறைக்குள் சென்றான். மின் விசிறியைச் சுழலவிட்டு அதற்கு நேரே நாற்காலியில் அமர்ந்து தன்னை அழுக்குப் பிடி போட்டுக் கொண்டிருந்த ஆடைகளை ஒவ்வொன்றாகக் களைந்து போட்டான். அதுவரையில் பொறுமையுடன் நின்றுகொண்டிருக்கவில்லை குழந்தை அம்பலவாணன். அவனைப் பிடித்து எங்கேயோ இழுத்தான். அவனுக்குத் தெரியும் — தன் அம்மாவின் எதிரில்தான் கொண்டுபோய் நிறுத்துவான். அவள் எதிரில் போய் நின்றால் அச்சத்தோடு அவனுக்குச் சிரிப்பும் வரும். சிரித்தால் அவளுடைய சினம் எல்லைமீறும். சினத்தில் அவள் என்ன வேண்டுமானாலும் பேசிவிடுவாள். அந்தச் சினத்தை வேறு யார் மீதாவது எதன் மீதாவது காட்டி விடுவாள்.

தான் பிடித்து இழுத்து, வராத ஏமாற்றத்தால் தன் அழுகையை மேலும் தீவிரமாக்கினான் அம்பலவாணன்.

"எங்கேடா போய் நின்னு அழுவுறே? வா! வந்து உன் விருப்பம்போல் சீனியை அள்ளிக் கொட்டிக்கிட்டுப் பாலைக் குடிச்சுத் தொலை!" என்று கத்தியபடி அவனைத் தேடிக் கொண்டுவந்து அறைக்குள் நுழைந்தாள் ஆனந்தவல்லி. அங்கே கருணாகரனைக் கண்டதில் அவளுக்குத் திகைப்பு; வியப்பு; அதோடு ஆத்திரம்.

ஒரு வார்த்தை கூறவில்லை. அம்பலவாணனை நெருங்கிச் சென்றாள். அவன் அச்சத்தோடு 'அப்பா!' என்று ஓடிச்சென்று கருணாகரனின் காலைக் கட்டிக் கொண்டான். அப்பொழுதுதான் வேட்டியை எடுத்துக் கட்டிக்கொண்டிருந்தான் அவன். வேட்டியின் ஒரு தலைப்பைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு தொங்கினான் அம்பலவாணன். அவன் கையைப் பிடித்து உதறிவிட்டுத் தன் வலுவுடன் அவனைப் பிடித்து இழுத்தாள் ஆனந்த வல்லி. அவன் கத்தக் கத்த அந்த அறையைவிட்டே இழுத்துக் கொண்டு சென்றாள். அவளை நிமிர்ந்து பார்த்தான் அவன். ஒரு கந்தல் புடைவையில் அலங்கோலமாக அழுக்கு மேனியளாக, அள்ளிக் கட்டிய கூந்தலுடன் இருந்தாள் அவள். பீரோ நிறைய புடைவைகள் இருந்தாலும் வீட்டுக்குள் கந்தலையும் சாயம் போனதையும் தைத்துத் தைத்துக் கட்டிக்கொள்வதே அவள் வழக்கம். கண்களைச் சுற்றிக் கருமை படர்ந்து அவளுடைய சிவந்தமேனிக்கே களங்கம் போல அவள் அழகைக் குலைத்தது. உறக்க மின்றியே கிடப்பாளோ?

உள்ளே அம்பலவாணனின் அழுகை அடங்கிற்று. காலையில் அவன் தங்கியிருந்த உணவு விடுதியில் வெறும் காபியை மட்டும் பருகிவிட்டுப் புறப்பட்டான் வீட்டுக்கு. வீடு இருக்கும் தெரு முனைவரையில் வாடகைக் காரில் வந்தான். நேரே வீட்டெதிரே வந்து காரில் இறங்கினால், அதை அவள் பார்த்தால் அவளிடமிருந்து தன் மீது

இரக்கத்தை வரவழைக்க முடியாது. நடந்தே வந்ததாகக் காட்டிக்கொள்ள வேண்டும். அதற்காகத் தெரு முனை யிலிருந்து நடந்து வந்தான். அவள் வாசலில் இருந்தால் தானே?

அவன் காலையிலிருந்து ஒன்றுமே உண்ணாமல் கிடப்பதை அவளிடம் காட்டிக்கொள்ள வேண்டும். அதற்காக வாயில் 'பிரஷை' வைத்துக்கொண்டு அடுப்பங் கரையில் இருக்கும் அவள் பார்வையில் படும்படிக் கூடத்தில் குறுக்கும் நெடுக்குமாய் நடந்தான். பிறகு குளிக்கச் சென்றான். அவன் குளித்துவிட்டு வரும்போது வேலைக்காரி அம்மணிக்கு இரவு மிகுந்திருந்த உணவுகளை அவளுக்குரிய பாத்திரங்களில் போட்டுக் கொண்டிருந்தாள் ஆனந்தவல்லி. அதைக் கண்டும் காணாதவன் போலத் தன் அறைக்குள் சென்றான் அவன்.

ஆடை மாற்றிக்கொண்டு நெடுநேரம் அறைக்குள்ளேயே அடைந்து கிடந்தான் அவன். அவள் அம்மணியை அனுப்பி விட்டுத் தெருக்கதவையும். தாழிட்டுவிட்டு அறைக்குள் வரப்போகிறாள். வந்ததும், 'சாப்பிட வரவில்லையா?' என்று கேட்கப்போகிறாள். அவன் 'உம்' என்ற முனக லுடன் அவளுக்குப் பின்னாலேயே உணவருந்தப் போகிறான். அவள் பரிமாறிக் கொண்டே, 'எங்கே போனீர்கள் இரண்டு நாளாக?' என்று ஆரம்பிக்கப் போகிறாள். 'எங்கேயும் இல்லையே. அலுவலக வேலை யாகத்தான் வெளியூருக்குப் போயிருந்தேன்' என்கிறான் அவன். 'எந்த ஊருக்கு?' அப்போதுதான் அவனுக்கு நினைவு வருகிறது. 'டாக்சியிலேயே வந்து இறங்கியிருக்கலாம். வெளியூரிலிருந்து நேரே இங்குவந்து இறங்குவதாகக்காட்டிக் கொண்டிருக்கலாம். முதல்தேதி சம்பளம் வாங்கியதும் நண்பர்களுடன் அந்த விடுதிக்குச் சென்று விடிய விடிய இரவு முழுவதும், பகல் பொழுது என்று ஒன்று செல்வதை

உணராமலும் சீட்டாட்டத்தில் மூழ்கிக்கொண்டிருந்து விட்டு மூன்றாவது நாள் காலையில் வீட்டுக்கு வெறும் சில்லரைக் காசுடன் வந்து சேர்ந்திருக்க வேண்டியதில்லை.

வீடு என்னவோ அவனுடைய மாத ஊதியத்தை நம்பி இருக்கவில்லைதான். ஆனந்தவல்லிக்கு என்று அவளுடைய தந்தை ஒதுக்கிவிட்ட சொத்துக்கள் அந்தக் குடும்பத்தைச் செழிக்க வைக்கக் கூடியவை. வாங்கும் ஊதியத்தைத் தன் கையில் கொண்டுவந்து அவன் கொடுப்பதில்லையே என்னும் குறை அவளுக்கு உண்டு என்றாலும் அதை விட மாதங் களில் பல நாட்களை விடுதிகளிலேயே கழித்துவிட்டுப் வீட்டுக்கு மற்றொரு விடுதிபோல் வந்துவிட்டுப் போகிறானே என்கிற கவலையும் ஏக்கமும் வெறுப்புமே மிகுதி அவளுக்கு. ஆனாலும், செய்வதறியாது தவிப்ப தோடு அடங்கிக் கிடந்தாள் அவள்.

தன்னைத் திருத்திக்கொள்ள வேண்டும் என்னும் எண்ணமும் விருப்பமும் எழுவதுண்டு அவனுக்கு. அந்த எண்ணம் கையில் காசில்லாதபோதும் கடன்படும்போதும் முன்நிற்கும். வீட்டுக்கு வந்து அவளிடம் கடனைத் தீர்க்கப் பணம் கேட்டு நிற்கும் போது அந்த விருப்பம் மனத்தில் குடைந்து கொண்டிருக்கும். பணம் கைக்கு வந்தாலோ எல்லாமே ஒழிந்து ஒரு மயக்கத்தோடு மீண்டும் நண்பர் களைத் தேடிச் செல்வான்; விடுதியைத் தஞ்சமடைவான். அலுவலகத்துக்கு அடிக்கடி விடுமுறை எடுத்துக்கொள்வான். ஊதியம் பெறாத விடுமுறை கூட எடுப்பதுண்டு. முதல் தேதி சம்பளம் குறைந்து வரும்போதுதான் இனிமேல் இப்படி விடுமுறை எடுத்துக்கொள்ளக் கூடாது என்று எண்ணிக்கொள்வான். ஆனால் அவ்வுறுதி மறுநாள்வரைகூட நீடிக்காது. தன்னையே சூதாட்டத்தில் இழந்துவிட்டோமே என்று மனம் குமுறினாலும் அடுத்த கணமே அதை

மாற்றிக் கொண்டு மீண்டும் அந்த மயக்கு உலகில் மறைந்து விடுவான். அல்லது தன்னை மறைத்துக் கொள்வான்.

நெடுநேரம் ஆகியும் அவன் எதிர்பார்த்தது போல அறைக்குள் வந்து அவனைக் காலைச் சிற்றுண்டிக்கு அழைக்கவில்லை அவள். என்னதான் செய்கிறாள்? மேசை நாற்காலிகளை ஒழுங்காகப் போடுபவன்போல அவற்றைப் பரபரவென்று இழுத்துத் தள்ளினான். புத்தகங்களைத் தூசு தட்டிப்போட்டான். கொடியில் போட்டது போட்டது போலக் கிடந்த தன் ஆடைகளில் அழுக்கடைந்தவைகளைச் சாட்டை போலச் சொடுக்கி, உதறி சலவைக்காக எடுத்து எறிந்தான். பிறகு தானே பொறுக்கி மூட்டை கட்டி அறைக்கு வெளியே தூக்கி எறிந்தான். அவ்வளவு ஓசைக்கும் அவள் எட்டிக்கூட பார்க்கவில்லை. நெஞ்சழுத்தக்காரி.

வீட்டில் என்னதான் செய்கிறாள். அவனுடைய ஆடைகளைக் கவனிக்காமல், அறையைத் தூய்மையாக வைத்துக் கொள்ளாமல்? அம்மணி வேறு இருக்கிறாள் சோற்றுக்கும் பணத்துக்கும் தண்டமாய்—

மீண்டும் அழுது கொண்டே அவன் அறைக்குள் வந்து நுழைந்தான் அம்பலவாணன். அவனைப் பார்த்ததும் எரிச்சல் வந்துவிட்டது அவனுக்கு.

“என்னடா இங்கே ராகம்? போ வெளியே. எங்கே யாவது போய் கத்து?” என்று கத்தினான் அவன்.

“அப்பா—” என்று அவன் கால்களைக் கட்டிக் கொண்டு தன்னைத் தூக்கிக்கொள்ளும்படி தாவினான் அம்பலவாணன்.

“ஏண்டா? தின்னாச்சல்லா? பாலும் குடிச்சிட்டியா? வயிறுதான் புடைச்சுக்கிடக்கே? போயேன் — வெளியிலே

விளையாட. இன்னும் எதுக்கு கத்தறே?'' என்று இரைச்சல் போட்ட அவன் அம்பலவாணனைக் கையைப் பிடித்து இழுத்து வெளியே திருப்பிவிட்டான்.

''டே! வாடா இங்கே?'' குரல் கொடுத்தாள் அவனுடைய அம்மா.

இங்கே நடப்பதைப் பார்த்துக் கொண்டுதான் இருந் திருக்கிறாள். ஆனால் சமையலறையை விட்டு வெளியில் வரவில்லை. அவனை நேருக்கு நேராகப் பார்ப்பதைத் தடுத்துக்கொள்ளும் முயற்சி.

''போடா போ!'' என்று முணுமுணுத்துக் கொண்டே அம்பலவாணனை வெளியே துரத்தினான் அவன்.

அன்றைக்கும் சேர்த்துதான் அலுவலகத்துக்கு விடுமுறை கோரியிருந்தான். ஆனால் வீட்டில் என்ன செய்வது? வழக்கத்துக்கு மாறாக மாறியிருக்கிறாள் ஆனந்தவல்லி. அவனே போய் அவளிடம் தஞ்சமடைவதுபோலப் பேசவும் அவனுக்கு வலிமை இல்லை. எப்படித் தொடங்குவது? எடுத்தவுடன் பெயரைச் சொல்லிக் கம்பீரமாக அழைத்துத் தான் அலுவலகம் செல்ல வேண்டும் என்றும் உடனே காலைச் சிற்றுண்டி பரிமாற வேண்டும் என்றும் கூறலாம். நண்பகல் உணவை அம்மணியிடம் கொடுத்தனுப்பச் சொல்லலாம். மாலையில் எங்கும் செல்லாமல் நேரே வீட்டுக்கு வருவதாகவும் கூறலாம். இயன்றால் புதிய திரைப்படம் ஒன்றுக்குச் சென்று வரலாம் என்றுகூட ஆசை காட்டலாம்.

அலுவலக நண்பன் ஒருவனிடம் அவன் சென்ற மாதம் வாங்கியிருந்த கடனை முதல் தேதி சம்பளம் வாங்கியதும் திருப்பித் தரவில்லை. மறுநாள் தருவதாகச் சொல்லித் தப்பித்துக் கொண்டான். இன்றைக்குப் பணம் எடுத்துக் கொண்டு போகாமல் அலுவலகம் சென்றால் அவன்

மானத்தை வாங்கிவிடுவான். கேவலம் ஐம்பது ரூபாய். இன்னொருவனுக்கு இருபது. வெளியில் பெட்டிக் கடைக் காரனுக்கு முப்பது ரூபாய் கொடுக்க வேண்டியிருக்கும்; சிகரெட்டு வெற்றிலைச் சீவல் புகையிலை வாங்கிய கணக்கு. ஒரு நூறு ரூபாய் அவள் கொடுத்தால் கொஞ்சமும் தயங்காமல் அலுவலகம் சென்றுவிடலாம் உண்மையிலேயே. அவள் கொடுப்பாளா? முன் போல இல்லை அவள். வரவர மாறிக்கொண்டே இருக்கிறாள். பீரோ சாவியை இடுப்பை விட்டு இறக்குவதே இல்லை. கணக்கும் கச்சிதமாக வைத்துக் கொண்டிருக்கிறாள். ஒரு காசு எடுத்தாலும் அவளுக்குத் தெரிந்துவிடும். சே! இது என்ன பிழைப்பு! என்ன வாழ்க்கை! என்ன அலுவலகம், என்ன வேலை! இரண்டுநாள் செலவுக்குக் கூட காணாத சம்பளம் —

மணி பதினொன்று. அறைக்குள்ளேயே அடைந்து கிடந்து செய்தித்தாளை மனம் ஒன்றாமல் பார்த்துக் கொண்டிருந்தான் அவன். ஒவ்வொரு கணமும் அவள் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். எவ்வளவு நேரம்தான் பட்டினி போட்டு வைக்கிறாள் பார்க்கலாம். அவளுடைய கோபம் ஆறியபிறகு அவள் வரட்டும். அவள் வந்த பிறகு தன்னுடைய கோபத்தைக் காட்டலாம் அவளிடம்.

வெளியில் காலடி ஓசை கேட்டது. தீவிரமாகச் செய்தித் தாளில் மூழ்கினான் அவன். ஓசை நெருங்கியது; நின்றது. தன் முகத்தை நன்றாக மூடிக் கொண்டான் செய்தித் தாளால். மேசையின் மீது தட்டுக்களும் குவளைகளும் வைக்கப்படும் ஓசை கேட்டது. சிற்றுண்டியை இங்கேயே கொண்டுவந்துவிட்டாள் போலும். ஆனால், கொண்டு வந்தவளோ—

"அம்மா டிபன் சாப்பிடச் சொன்னாங்க உங்களை!"

"ஓகோ? நீதான் இங்கே பரிமாற ஆளோ? போ எடுத்துகிட்டு—" கத்தினான் அவன். அது அடுப்பங்கரை வரை அதிர்ந்தது.

வேறு யாராவது என்றால் ஓடியேபோய் இருப்பார்கள். அம்மணி அசையவில்லை. வாழ்க்கையில் எவ்வளவோ அனுபவித்தவள்; அடிபட்டவள். நாற்பது வயதைக் கடந்தவள். அவள் எதற்காக அஞ்சவேண்டும்? அவளுடைய கணவனை விடவா? அவளுடைய மூத்த மகனை விடவா?

"அம்மா வேலையா யிருக்காங்க. அதனாலே என்னைக் கொண்டுவந்து வைக்கச் சொன்னாங்க. சாப்பிடுங்க. ஆபீசுக்குப் போகப் போறீங்களா? மத்தியானம் சாப்பாடு எடுத்து வரட்டுமா?"

"பதினோரு மணிக்கு மேலே ஆபீசுக்கா? நான் ஒன்பது மணியிலேருந்து காத்துகிட்டிருக்கிறேன் – தெரியுமா?'

"நீங்க ஆபீசுக்குப் போகலேன்னு நினைச்சுட்டாங்க போலிருக்கிறது அம்மா!"

"போனால் என்ன போகாவிட்டால் என்ன? அதற்காகப் பதினோரு மணிக்கா டிபன்?"

"நீங்க இன்றைக்கு வீட்டுக்கு வருவிங்கன்னு எப்படித் தெரியும்? உங்களைப் பார்த்தபிறகு தானே டிபனே செய்ய ஆரம்பிச்சாங்க?"

"ஏன்? வீட்டுக்கே வராமல் ஒழிந்தா போயிட்டேன்?"

"சம்பளம் கைக்கு வந்த உடனே சீட்டாடப் போயிருப்பிங்கன்னு அம்மாவுக்குத் தெரியுமே? எத்தனை நாள் கழித்து வருவீங்களோ?"

"எப்போ வந்தால் என்ன? நான் ஒன்றும் சீட்டாடப் போகலே. எனக்கு அதுதானா வேலை? நான் ஆபீசு வேலை யாக வெளியூர்க்குப் போயிருந்தேன். தெரியுமா உனக்கு?"

"சாப்பிடுங்க—"

"போய் அவள் கிட்டே நூறு ரூபா பணம் வாங்கிட்டு வா. சம்பளம் வாங்கறதுக்கு முன்னாலேயே வெளியூருக்குப் போய்விட்டேன். சம்பளம் வாங்கிக் கொடுத்துடறேன்—"

அம்மணி வெளியேறினாள் அறையை விட்டு.

அவ்வளவையும் ஒன்று விடாமல் கேட்டுக் கொண்டிருந் தவள்போல அம்மணியிடம் கூறினாள் ஆனந்தவல்லி:

"இங்கே குடும்பச் செலவுக்கே பணம் இல்லே. எது எதற்கெல்லாமோ வாங்கிச் செலவழிக்கிற கடனுக்கும் பணத்துக்கு எங்கே போவது? இங்கே சம்பாதித்துக் கொண்டு வந்து கொட்ட வேண்டாம். வீட்டுக் காசை வெளியிலே கொண்டு போய் இறைக்காமல் இருந்தால் போதும். ஒரு காசு கிடையாது. ஒன்றும் கொடுக்க முடியாது. நானும் பொறுத்துப் பொறுத்துப் பார்த்து விட்டேன்—"

ஒரு கணம் திணறினான் கருணாகரன்.

"எவ்வளவு பணத்தை வாரி இறைச்சுட்டேன்? குடிக்கிறேனா? கூத்தடிக்கிறேனா? வெளியிலே போற வர ஆம்பிள்ளைக்கு எவ்வளவோ செலவிருக்கும்?" என்றான் மெல்ல அவன்.

அதுவும் அவள் செவிக்கு எட்டியது.

"குடித்தாலும் கூத்தடித்தாலும் கூட பொறுத்துக் கொள்ளலாம் போலிருக்கு. அதிலே எல்லா காசுமா செலவாகிவிடப் போவுது? பெண்டாட்டி தாலியைக் கூட அடகு வைக்கச் சொல்கிற சூதாட்டப் பிசாசு அல்லவா பிடிச்சுகிட்டு ஆட்டுது?" அவள் இரைந்தாள்.

"நான் ஒண்ணும் சீட்டாடப் போகலே. நாளைக்குப் பேரய்தான் சம்பளம் வாங்கணும்."

"சம்பளத்தை வாங்கிக் கடனை அடைக்கலாம். என் கிட்டே பணம் கிடையாது!"

"அதுக்கு வேறே செலவு இருக்கு. எனக்கு இப்போ நூறு ரூபா வேணும். கொடுக்கச் சொல்லு அம்மணி!" அவன் குரல் உயர்ந்தது.

அம்மணி அங்கே இல்லை; இந்தத் தொல்லையின் நடுவில் அகப்பட்டுக் கொள்ள வேண்டாம் என்று அவள் வேறு வேலையாக நழுவிவிட்டாள்.

"அதெல்லாம் ஒரு காசு கூட இப்போது கொடுக்க முடியாது. அதனாலே என்ன வந்தாலும் சரி—" அழுத்த மாகக் கூறினாள் ஆனந்தவல்லி.

"ஏன் கொடுக்க முடியாது?"

"ஏன் கொடுக்கணும்? அவங்க அவங்க உழைச்சு சம்பாதிக்கிற காசிலேதான் சாப்பிடணும் என்கிற தன்மானமாவது இருக்கணும். யாரோ உழைத்துச் சேர்த்துக் கொடுத்ததை யாரோ உல்லாசத்துக்காக, கேடுகெட்ட வாழ்க்கைக்காகச் செலவழிக்கிறது என்ன நியாயம்?"

"ஓகோ? உங்க அப்பன் வீட்டுச் சொத்து என்கிற திமிரோ?"

"எங்க அப்பாவீட்டுச் சொத்தாக இருந்தால் என்ன, உங்க அப்பாவீட்டுச் சொத்தாக இருந்தால்தான் என்ன? யார் வீட்டுச் சொத்தாக இருந்தாலும் அழிக்க உங்களுக்கு உரிமை இல்லை. உங்கள் உழைப்பிலே உங்களையும் உங்கள் மனைவி மக்களையும் காப்பாற்றணும் என்கிற மான உணர்ச்சி வேணும். அது இல்லாதவர்கள் மனிதர்களா என்கிறேன்—"

"என்னடி சொன்னே?"

சீறிக்கொண்டு அறையை விட்டு வெளியில் ஓடிவந்தான் அவன். அந்த நேரத்தில் அம்மணி குறுக்கே வந்தாள். அவன் ஒதுங்கிக் கொண்டான். 'இவள் ஏன் இன்னும் வீட்டுக்குப் போகாமல் இங்கேயே சுற்றிக் கொண்டிருக் கிறாள்?' முணுமுணுத்துக் கொண்டே திரும்பவும் அறைக்குள் வந்து அமர்ந்தான். பிறகு பீரோவைத் திறந்து பழங்கணக்கைப் பார்த்துக் கிடைத்த காசுகளைப் பொறுக்கிக் கொண்டிருந்தான். எதை எதையோ போட்டு உருட்டிக் கொண்டிருந்தான்.

அம்மணி மீண்டும் அவன் அறைக்குள் வந்தாள். அவன் திரும்பிப் பார்த்துவிட்டு எரிச்சலுடன் பீரோவைச் சாத்தினான்.

"நீங்க இன்னும் சாப்பிடலேயா? ஆறிப் போகுமே!" என்றாள் அவள்.

"அவள் வீட்டுச் சாப்பாட்டை அவளையே சாப்பிடச் சொல்லு—" என்றான் அவன்.

"நீங்க சாப்பிட்டால்தான் அம்மாவும் சாப்பிடுவாங்க. அது தெரியாதா உங்களுக்கு?" என்று மெல்லக் கேட்ட அவள், "இதோ! நீங்க கேட்ட பணம். சம்பளம் வாங்கித் திருப்பி கொடுத்தால் போதும்—" என்று அவனிடம் பத்து ரூபாய் தாள்களை நீட்டினாள்.

"ஏது?"

"யார்தான் கொடுப்பாங்க? போய் சாப்பிடுங்க! குடும்பம் என்றால் எல்லாம்தான் இருக்கும்!" என்று கூறிவிட்டு அவனிடம் பணத்தைக் கொடுத்துவிட்டு வெளியேறினாள் அவள்.

அவனுக்குத் தெரியும். எப்படியும் ஆனந்தவல்லி தன்னிடம் அடிபணிந்தே தீருவாள் என்று எண்ணிக் கொண்டான். நூறு ரூபாய் இருந்தது. பிறகு சிற்றுண்டியை ஒருகை பார்த்தான். அம்மணிதான் காபியும் கொண்டு வந்தாள். அவன் சமையலறைப் பக்கம் எட்டிப் பார்த்துக் கொண்டே காபியைப் பருகினான்.

கையில் பணம் உறுத்தியது. கடனை எல்லாம் பிறகு கொடுத்துக்கொள்ளலாம். விடுதியை நோக்கிச் சென்றால் என்ன? புறப்பட்ட அவனுக்குத் துணிவு வரவில்லை. மெல்ல ஆனந்தவல்லியிடம் பேசி அவளை அமைதிபடுத்தி விட்டுச் செல்லலாம் என்பதற்காக மாலை வரையில் காத்திருந்தான். ஆனால், அவளாக ஒரு வார்த்தை பேச வில்லை. எந்திரம் போல இயங்கிக் கொண்டிருந்தாள். சோகச் சித்திரமாய்க் காட்சித் தந்தாள். அவனுக்கே மனம் உருகிவிட்டது.

மாலையில் ஏதோ வேலையாகத் தன் அறைக்குள் வந்தவளை வளைத்துக்கொண்டு வம்பு பேசினான் அவன்.

"பணம் இல்லை என்று சொல்லிவிட்டு மறுபடி எப்படி வந்தது? உன் மனசு கேட்காது என்பது எனக்குத் தெரியும்!"

சிரித்தான் அவன்.

"அது என் பணம் இல்லை. தெரியுமா உங்களுக்கு? நான் முடிவு செய்தது செய்ததுதான். என் பணத்தை நீங்கள் செலவு செய்து உங்கள் மரியாதைக்கு இழுக்கு வர நான் அனுமதிக்கப் போவதில்லை. அக்கம் பக்கத்தில் உங்களை எப்படிப் பேசுகிறார்கள் தெரியுமா உங்களுக்கு? பெண்டாட்டி பணக்காரி. அவள் பணத்தைத் அள்ளிக் கொண்டுபோய் கெட்டலைந்து விட்டு நீங்கள் வருவதாக உங்களையும் உங்களோடு என்னையும் பழிதூற்றுகிறார்கள். இனிமேல் நீங்கள் சம்பளத்தோடு இந்த வீட்டுக்குள்

வந்தால்தான் எனக்கும் சாப்பாடு. உங்களுக்கும் சாப்பாடு. இல்லை என்றால் நான் உண்ணாவிரதம்தான்—''

அவள் கூறியதைக் கேட்டு அவன் திடுக்கிட்டான்.

''அம்மணி கொடுத்த இந்தப் பணம் ஏது?''

''அவள் என்னிடம் கொடுத்து வைத்திருந்தாள். அவளுக்குக் கொடுக்க வேண்டிய ஆறு மாதத்துச் சம்பளப் பணம் இருந்தது. காலையில் கேட்டாள். கொடுத்தேன். அதை உங்களிடம் கொடுத்திருக்கிறாள். அப்படிக் கொடுப்பாள் என்பது எனக்குத் தெரியும். என்னை ஏமாற்றுவது போல நீங்கள் அவளை ஏமாற்ற முடியாதே—அவளுடைய மூத்த மகன் டாக்சி டிரைவராகச் சம்பாதிக்கிறான். இரண்டாவது மகன் ஏதோ தொழிற்சாலையில் வேலை பார்க்கிறான். மூன்றாவது மகன் கல்லூரியில் படிக்கிறான். அவனுக்காக அம்மணி இங்கே வேலைசெய்து சம்பாதித்துப் பணம் சேர்க்கிறாள். மற்றவர்கள் உழைப்பை நம்பாமல் தனக்காகவும் தன் மகனுக்காகவும் இங்கேயும் இன்னும் இரண்டு மூன்று வீடுகளிலும் உழைக்கிறாள். அப்படிப்பட்ட உழைப்பாளி கொடுத்து நீங்கள் கைநீட்டி வாங்கவேண்டிய நிலையில் இருக்கிறீர்கள். எதனால் அப்படி? புரியுமா உங்களுக்கு?''

ஆனந்தவல்லி வெளியேறிவிட்டாள்.

குன்றிப் போய் உட்கார்ந்திருந்தான் அவன்.

அறையைத் தூய்மைப்படுத்த வந்த அம்மணியிடம் அவன் சொன்னான்.

''அம்மணி! நீ கொடுத்த பணத்துக்கு வட்டி சேர்த்து நான் அடுத்த மாதச் சம்பளத்தில் உனக்குக் கொடுத்துடறேன். இன்றையிலிருந்து நான் மாறிட்டேன். என்னை நம்பு — என் இழிநிலையை மாற்றிவிட்டாய் நீ!''

அது ஆனந்தவல்லியின் காதிலும் விழுந்தபோது மனம் குளிர்ந்து அம்மணியை வாழ்த்தினாள் அவள். ●

# நாலாவது மருமகள்

புழுதிக் குப்பை மண்ணில் கொழு கொழுவென்று வளர்ந்து குலை தள்ளி நிற்கும் வாழை மரக் குடும்பங்கள் இருபது முப்பது இருக்கும்; அப்பால் தென்னந் தோப்பு— இளையனவும் முதியனவுமாகக் காவிரிக்கரை வரையில்.

அது முடியக் கொல்லை வேலி; முரட்டு எருமை கூட நெருங்க முடியாத, ஈ நுழைய முடியாத மூங்கில் முள்— நெருக்கப் பிடித்து அடைக்கப்பட்டது.

படலைத் திறந்துகொண்டு காவிரிக்கரையின் ஒற்றையடிப் பாதையில் மூங்கில் புதர் நிழலில் பத்துத் தப்படி சென்றால் அகன்ற கரையில் சரிந்து செல்லும் படிக்கட்டு; ஊரின் ஒருமைப்பாட்டைப் பாடிச்செல்லும் காவிரித்துறைப் படிக்கட்டு.

செவ்விய குளிர்ந்த நீரில் சிலிர்த்துக் கொண்டு நிற்கும் போதே கரையில் செல்லும் காத்தானிடம் ஒரு வார்த்தை சொன்னால் போதும்; கத்தரிப்பிஞ்சும் முருங்கைக் காயும் வீடு வந்து சேர்ந்திருக்கும், வீட்டிற்குச் செல்வதற்கு முன்னால்.

காலைக் கருக்கலில் பக்கிரியை அழைத்துக் கொண்டு வயலுக்குச் சென்ற 'அவர்' வாய்க்காலை அடைத்து மடை போட்டு வயல்களில் தண்ணீர் கட்டி விட்டுத் திரும்பி வரும் போது வரப்பில் போட்டுப் படர்ந்து பூவும் பிஞ்சுமாகக் குலுங்கிக் கிடக்கும் பறங்கியில் ஒரு பிஞ்சைப்பிட்டு எடுத்து வருவார்.

வரும் பாதையில் வழிநெடுகக் கண்ணில் பட்டவர் களிடமெல்லாம் பேச்சுத்தான்—அவராகப் பேசாவிட்டாலும் அவர்களாகப் பேசுவார்கள்; அவர்களாகப் பேசா விட்டாலும் அவராகப் பேசுவார்; அது உள்ளங்களின் உறவு.

வீட்டுக்கு வரும் வழியிலேயே கண்டவர்களிடமெல்லாம் நியாய விசாரணைதான். தீர்ப்புகள்;வழக்குகள்; கொடுக்கல் வாங்கல் கணக்குகள்; ஊரையே வளைய வரும் பருந்தின் கண்ணோட்டம் — இப்படி வீடு வரையில்.

வீடு இரண்டு கட்டு வீடு; நெற்களஞ்சியங்கள் சுவரோடு சுவராகத் தனி அறைபோல; பழக்கப்பட்டவர்களுக் குத்தான் தெரியும், அது களஞ்சியம் என்பது. எதிரே மாட்டுக் கொட்டகை. வீட்டுக்கு முன்புற மனையில் அரைத் தென்னை உயரத்துக்கு வைக்கோல் போர்; கறவைகளும் உழவு மாடுகளுமாகக் கொட்டகையை அடைத்துக் கொண்டு இருக்கின்றன.

யாரிடமாவது நிலங்களைக் குத்தகைக்கு விட்டு விட்டு, வீட்டை வாடகைக்குப் போட்டு விட்டுத் தன்னோடு வந்து இருக்கச் சொல்லிப் பெரியவன் முரளி எத்தனையோ முறை வற்புறுத்தி எழுதி எழுதி ஓய்ந்து விட்டான். அவன் புனாவில் இருந்தான். படித்து முடித்து வேலை கிடைத்தது முதலே அங்குதான்.

திருமணம் ஆகும் வரையில் நண்பர்களுடன் அறை வாசம்; மணம் ஆனதும் மனைவியை அழைத்துக் கொண்டு போய்த் தனிக்குடித்தனம்; இப்போது அவனுக்கும் இரண்டுகுழந்தைகள் ஆகிவிட்டன. இப்பொழுது அம்மாவை அழைக்கிறான்; அப்பாவை அழைக்கிறான்; நிலங்களைக் குத்தகைக்கு விட்டு விட்டு......

அடுத்தவன், 'நடுவிலவன்' முகுந்தன் சென்னையில் அதன் சிறப்பு மிக்க வாழ்வில் ஒன்றிக் கலந்து விட்டவன்; இதோடு மூன்று குழந்தைகள் அவனுக்கு. அவனும் அம்மா வுக்கும் அப்பாவுக்கும் எத்தனை எத்தனையோ அழைப்புகள் வேண்டுகோள்கள் விடுத்துப் பார்த்து விட்டான். அவர்கள் அவனோடு சென்னைக்கு வந்து விட்டால் 'உதவியாக' இருக்குமாம்; யாருக்கு என்பது மட்டும் தெரியவில்லை!

கணவனும் மனைவியுமாக வேலைக்குச் செல்பவர்கள் அவர்கள். குழந்தைகளையும் வீட்டையும் பொறுப்புடன், பார்த்துக் கொள்ள கிழங்கள் வீட்டில் வந்து கிடக்கட்டுமே என்னும் எண்ணம் போலும்!

இளையவன், கடைக்குட்டி கண்ணனுக்குத் திருமண ஏற்பாடுகள் ஒரு விதமாக முடிவாகி விட்டன. கோயமுத் தூரில் அவனுக்கு வேலை. படிப்பு முடிந்து ஓராண்டு வரை இங்கே அம்மாவுடனும் அப்பாவுடனும் இருந்தான். வேலைக்கு விண்ணப்பம் அனுப்பும் வேலையே அவனுக்குச் சரியாக இருந்தது. இன்சினியரான அவனுக்குக் கோயமுத் தூரில் பயிற்சிக்காக இடம் ஒதுக்கினார்கள். பயிற்சி முடிந்ததும் அங்கேயே வேலையை ஏற்றுக் கொண்டான். இனி திருமணம்.

திருமணம் முடிந்ததும் என்ன செய்வான்? தன் மனைவியை அழைத்துக் கொண்டு அவனும் ஓடிவிடுவான். பிறகு, 'அம்மா நீ வா, அப்பா நீ வா' என்று முரளியையும் முகுந்தனையும் போலவே கடிதம் வரைவான்.

குஞ்சுகள் கூட்டை விட்டுப் பறந்து விடுகின்றன என்றோ ஒரு நாள். பிறகு தாய்ப் பறவை எந்த நிலையில் எந்த இடத்தில் எந்தக் காலத்தில் அக்குஞ்சுகளைச் சந்திக்க நேருமோ, அப்பொழுது என்ன எண்ணுமோ? ஆனால், பிரிவை எண்ணும்போதே இப்படிக் கலங்கும் மனிதத்தாய்

உள்ளம் போல் வேறு எந்த உயிரினத்திற்கும் அமைய வேண்டாம்...

மகன்தான் அழைக்கிறானே என்று மகன் வீட்டுக்குப் போய்த் தங்கிவாலும் அவளும் அவள் கணவர் முத்துசாமி யும் எத்தனை நாட்கள் அங்கே தங்கி விட முடியும்? தங்கியிருக்கும் நாட்களிலும் அடிக்கடி ஊர் நினைப்பு. வீட்டு நினைப்பு தோட்ட நினைப்பு, அப்புறம் இருக்கவே இருக்கிறது காவிரி ஆறும், கரையும், படிக்கட்டும், மாடும், கன்றும், ஆளும்...

யார் வந்தாலும் யார் போனாலும் கடைசியில் அந்தச் சிற்றூரில் அவ்வளவு பெரிய வீட்டில் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டு, ஒருவருக்காக ஒருவர் அந்த நாள் முதல் இந்த நாள் வரையில் வளைய வளைய வந்து ஒருவருக்கொருவர் கடமையின் உயிராய் ஒன்றி விட்டவர்கள் மோகமும் முத்துசாமியும் தான். ஏதேனும் விழா, சிறப்பு நிகழ்ச்சி என்றால் மாதக்கணக்கில் கடிதப் போக்குவரவை வைத்துக் கொண்ட பிறகு புனாவிலிருந்து மூத்தவனும், சென்னையிலிருந்து அடுத்தவனும் தத்தம் குடும்பத்துடன் வந்து சேருவார்கள்.

இப்பொழுது வந்தாயிற்று...

வந்த இரண்டு நாட்களுக்குள் மூத்த மருமகளுக்கு ஊர் பிடிக்காமல் போய் விடுகிறது. அது எப்படி ஊர் பிடிக்காமல் போய் விடும்? அவள் தான் ஊர் பிடிக்கும் படியாக ஊரைப் பிடித்துக்கொள்ள வேண்டும். ஆனால் அவள் அடிக்கடி அலுத்துக் கொள்கிறாள்.

அவளோடு தானும் சேர்ந்து கொள்ளவில்லை என்றால் ஒரு நாகரிகக் குறைவுபோல அடுத்த மருமகளும் அவளோடு சேர்ந்து அலுத்துக் கொள்கிறாள்.

இருவரும் ஊரில் இல்லாத பொருள்களை, இல்லாத பொழுது போக்குகளை எண்ணிக் கொண்டு சோர்ந்து போகிறார்கள்— 'ஒரு சினிமா உண்டா, கடைவீதி உண்டா, அது உண்டா, இது உண்டா என்று, ஆரம்பித்து விடுகிறார்கள். அதற்கென்றே ஆங்கிலத்தில் ஒரு சொல்லைக் கற்றுக் கொண்டு அதையே திரும்பத் திரும்பப் பேசிக் கொள்கிறார்கள். 'போர்' அடிக்கறதாம் 'போர்' அது என்ன போரோ? அடிக்கிற போரைக் குவித்துப் போட்டால் மாடுகளுக்குத் தீனியாகி விட்டுப் போகிறது!

ஆனால், குழந்தைகளுக்கு எந்த ஊராக இருந்தாலும் கும்மாளம்தான். அவர்களோடு பேசுவது, அவர்கள் கூத்தடிக்கும் போது கண்டிப்பது, காவிரியில் காலடி வைக்கவே அஞ்சும் அவர்களுடைய அச்சத்தைக் கண்டு சிரிப்பது எல்லாமே மோகத்துக்கு நல்ல பொழுதுபோக்கு. இந்தக் குழந்தைகளைப் போல முரளியும் முகுந்தனும் குழந்தைகளாய் இருந்து இந்த வீட்டை நிறைத்து வந்த காலம் தான் அவளுக்கு அடிக்கடி நினைவுக்கு வரும்...

கூடத்தில் சின்னஞ்சிறு குழந்தை தரையில் கிடந்து தவழ்ந்து கொண்டிருப்பது தங்க விளக்கு ஏற்றி வைத்தது போல வீட்டுக்கே ஒரு தனி அழகுதான்.

ஆனால்... ஆனால்... இதோ நாளைக்கே ஓடிவிடத் துடிக்கிறார்கள் மருமகள்கள்.

கூடாரத்தைப் பிரிக்கத் தொடங்கி விட்டார்கள்.

அவர்கள் சொல்லுக்கும் கண்சாடைக்கும் ஆடும் அவர்களுடைய கணவன்மார்களும் பட்டுப் புடைவைகளை மடித்துக் கொடுக்க உதவி செய்கிறார்கள். மூட்டை முடிச்சுகளைக் கட்டத் தொடங்கி விட்டார்கள்.

கடைசியில் வெறும் சடங்கு போல ஒரு பேச்சு. "என்'மா. நீயும் அப்பாவும் எங்களோட வந்து ஒரு மாசம் இருந்து விட்டு வரக் கூடாதோ?"

'வரணும். என்னப்பா செய்யறது? நீயேதான் பார்க்கிறியே? வீட்டிலே எவ்வளவு கவனிக்க வேண்டியிருக்கிறது? இப்போ நீ மட்டும் போயேன். குழந்தைகளும் உன் மனைவியும் இங்கே ஒரு மாசம் இருக்கட்டும். அப்புறம் நானே அழைச்சுட்டு வந்து விட்டுவிட்டு வரேன்" என்பாள் மோகம்.

"நான் என்னம்மா செய்யறது சாப்பாட்டுக்கு?"

"ஒரு மாசம்தானே? உன் வீட்டுக்காரி ஒரு மாசம் இருக்கட்டும். முகுந்தன் வீட்டுக்காரி ஒரு மாசம் இருக்கட்டும். இப்படி மாற்றி மாற்றி இங்கே இருந்தால் எனக்குத் துணையாயிருக்கும். வீடும் கலகலப்பாக இருக்கும். ஊரில் எவ்வளவோ பேர் என்னைப்போல உள்ளவர்கள் மருமகளோட குழந்தைகுட்டிகளோடே இருந்து குடும்பம் நடத்துவதைப் பார்க்கும் போது எனக்குப் பொறாமையாகத்தான் இருக்கிறது. என்ன செய்யறது?"

"தூரத்துப் பச்சையாயிருக்கிறது தானம்மா அழகு. குழந்தைகள் கான்வெண்டிலே படிக்கிறாங்க. இங்கே விட்டு விட்டு என்ன செய்யறது?"

ஏதோ சொல்லி எதையோ பேசிப் புறப்பட்டு விடுகிறார்கள். விழிக் கடையில் தேங்கும் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு அவர்களுக்கு விடைகொடுத்து அனுப்புகிறாள் மோகம். ரயில் நிலையம் வரையில் சென்று விட்டு வருகிறார் முத்துசாமி.

இரண்டு நாட்களுக்குக் கிளிகள் பறந்து விட்ட மொட்டை மரம் போலவும் விடுமுறை காலப்பள்ளிக்

கூடம் போலவும் வீடு வெறிச் சென்றிருக்கிறது. பிறகு பழக்கமாகி விடுகிறது.

“ஏ பக்கிரி! மாட்டுக்குத் தீனி வச்சுட்டியா? கறக்க லாமா? தொட்டியிலே தண்ணி இருக்கா, பார்த்துட்டியா?”

எது எதிலோ கவனம்—ஏக்கத்தை, ஆசையைச் சிதறடித்து மனத்தில் நிறைவையும் அமைதியையும் ஊக்கத்தையும் நிரப்பி விடுகிறது.

எந்தக் குரலுக்கும் பக்கிரிதான். ஒரு வகையில் இந்த வீட்டில் வந்து பிறக்காத மகன் அவன். எதையும் பொறுப் புணர்ந்து தானே செய்பவன். ‘அம்மா, அம்மா’ என்று வளைய வருவான், எப்பொழுதும் ஏதாவது ஒரு வேலையுட னேயே வருவான். வேடிக்கையாகவும் பேசிச் சிரிப்பான். உரிமையுடன் எதையும் சொல்வான்; உரிமையுடன் செய்வான். அவனுக்கு நெருக்கத்தில் உறவினர் எவரும் கிடையாது. எல்லாம் மோகமும் முத்துசாமியும் தான். வீட்டில் ஒருவன் அவன்.

முகுந்தன் சின்னப்பிள்ளையாக இருந்தபோது பக்கிரி அந்த வீட்டுக்கு மாடு மேய்க்கும் சிறுவனாக வந்து சேர்ந் தான். வளர வளர அவனுக்கு வேலைகள் மாறின.அவனைக் கொண்டு வந்து சேர்த்த மாமன் காலமானதும் பக்கிரி இங்கேயே தங்கி விட்டான். இப்பொழுது முகுந்தனின் வயதுதான் அவனுக்கும் இருக்கும்.

விளையாட்டுப் போலக் காலம் ஓடிக் கொண்டே இருக்கிறது.

இப்பொழுது கடைசிப் பிள்ளைக்கும் திருமணம் வந்து விட்டது. ஓடியாடி அலுக்காமல் சலிக்காமல் வேலை செய்கிறான் பக்கிரி. கண்ணனின் மீது மோகத்துக்கு மற்றப் பிள்ளைகள் இருவரையும் விட அன்பும் பாசமும் மிகுதி.

ஆனாலும் என்ன? திருமணம் ஆகும் வரையில் தானே அவளுக்கு அவன் பிள்ளை? அதன் பிறகு யார்வீட்டுக்கோ அவன் மாப்பிள்ளை; கணவனாகவும், தந்தையாகவும் மாறி விட்டதும் மூத்தவர்களைப் போலவே அம்மா வீட்டுக்கு ஒரு பத்து நாள் வந்து இருந்து விட்டு ஓடிப் போவான். அவனோடு வரும் மருமகளும் யார் வீட்டுக்கோவந்த விருந்து போலப் பட்டும் படாமலும் ஒட்டியும் ஒட்டாமலும் சுடுமணலில் நடப்பவள் போல இருந்து விட்டுப் போய் விடுவாள். மூன்று பிள்ளைகளைப் பெற்று என்ன? வாழ வைத்து என்ன? இத்தனை வயதுக்குப் பிறகும் தனிக் கட்டையாய்-அதாவது பெயரளவிலாவது ஒரு மருமகளோடு இருந்து, மருமகளுக்கு மாமியாராக இருந்து வாழாமல் என்ன வாழ்க்கை?

இந்த ஏக்கம் மோகத்துக்கு இன்று நேற்றல்ல. தன்னிடமிருந்து விடுபட்ட தனித் தனிக் குடும்பங்கள் பிய்த்துக்கொண்டு பறந்தேகும்போது அவள் விடும் பெரு மூச்சிலும், அவள் கடை விழியில் கசிந்திடும் கண்ணீர்த் துளியிலும் அந்தச் சாதாரண ஏக்கம், சாதாரண ஆசை கரைந்து கரைந்து உள்ளத்தையும் கரைத்தபடியே தான் இருக்கும்.

"நீ ஒரு பைத்தியம் மோகம்!" என்று கேலியாகச் சிரித்து விட்டு வேறு ஒன்றும் கூறாமலே போய்விடுவார் முத்துசாமி.

அவரைப் பொறுத்தவரையில் மோகம் மட்டும் இருந்தால் போதும். அவளுடைய சமையல், அவளுடைய உபசாரம், அவளுடைய கையால் பரிமாறல், அவளுடன் பேச்சு, வம்பு—அது போதும் அவருக்கு. வேறு யார் செய்தாலும் அவருக்குப் பிடிக்கவும் பிடிக்காது. வெளியூர் போனாலும் அடுத்த வேளைச் சாப்பாட்டுக்கு வீட்டுக்கு ஓடி வந்து விடுவார்.

அப்படிப் பட்டவருக்கு எதைப் பற்றி என்ன கவலை இருக்கப் போகிறது? 'மோகம் பைத்தியம் தான்!'

கண்ணனுடைய திருமணத்துக்குப் பதினைந்தே நாட்கள் இருந்தன. மூத்தவன் முரளியும் அவன் மனைவி பிள்ளைகளும் வந்து சேர்ந்து விட்டார்கள். சென்னையிலிருந்து முகுந்தனும் இரண்டாவது மருமகளும் பிள்ளைகளும் ஐந்தாறு நாள் சென்ற பிறகே வந்தனர். வேலை பார்க்கும் மனைவிக்கு விடுமுறை கிடைக்காததால் முன்பே வரமுடிய வில்லையாம். தங்களோடு தங்கள் வீட்டு வேலைக்காரப் பெண்ணையும் இந்தத் தடவை இழுத்து வந்தார்கள். புதிதாக வேலைக்கு வந்தவளாம் அவள். யாரும் இல்லாத அனாதை போலவாம். வீட்டுக்கு வந்தவர்களில் மோகத்துக்கு உதவியாகக் 'கூடமாட' வேலை செய்ய முன்வந்தவள் அந்த வேலைக்காரப் பெண் தமிழரசிதான். மருமகள் இருவருக்கும் தங்கள் தங்கள் பிள்ளைகளைக் கவனிக்கவும் தத்தம் கணவருடன் கூடிப் கூடிப் பேசவும்தான் நேரம் இருந்தது, என்னவோ இன்பச் சுற்றுலா வந்தவர்கள் போல.

தமிழரசி மிகவும் நல்லப் பெண்ணாகக் காணப்பட்டாள். எவ்வளவு வேலையானாலும் கொஞ்சமும் முகம் சுளிக்காமல் புன்னகையுடனும் கலகலப்பான பேச்சுடனும் எந்த வேலையிலும் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு செய்தாள். அவளுக்குக் குறைந்த வயதுதான் இருக்கும். என்ன வயது என்றால் அவளுக்கே தெரியாதாம். ஆனால் ஏதோ ஒரு வகைக் கணக்கில் பதினேழுக்கு மேல் தாண்டாது. அனுபவத்தில் நாற்பதைத் தாண்டியவள் போலப் பேச்சு, உலகையே கரைகண்டவள் போல! 'புத்திசாலிப் பெண்' என்று மோகமே பாராட்டும் அளவுக்கு அவள் வேலைத் திறமை இருந்தது.

எதற்கெடுத்தாலும், 'தமிழரசி, தமிழரசி' என்று அழைத்து வேலைகளை அவளிடம் பணித்துக் கொண்டிருந் தாள் மோகம். அதில் பக்கிரிக்குப் பொறாமையாகக் கூட இருந்தது. மோகத்தின் அன்பு வேறு இடம் மாறி விட்டது போல் உணர்ந்தான். புது வேலைக்காரி தனக்கே உரிய இடத்தைப் பறித்துக் கொண்டு விட்டது ஆற்றாமையாக இருந்தது அவனுக்கு. காரணம் இல்லாமலே அவளிடம் சண்டைக்குப் போனான் அவன். ஆனால், அவனுடைய சண்டையைப் பற்றிக் கவலைப் பட்டவளாகத் தெரிய வில்லை அவள்.

அவன் தன்னை வெறுத்தாலும், தமிழரசி தானே தவறு செய்து விட்டவள் போலவும், தானே திருத்திக் கொள்பவள் போலவும் அவனிடம் பணிவுடனும் அன்புடனும் நடந்து கொண்டாள்.

அந்த வீட்டுக்குத் தானே உரிமையுடையவன் போலவும் தானே பொறுப்புடையவன் போலவும் அவன் நடந்து கொண்டான். அவனுடைய கடுமை எல்லை மீறியும் சென்றது சில வேளைகளில். மோகமே ஒரு தடவை அவனைக் கூப்பிட்டுக் கண்டித்து விட்டாள்.

"என்ன பக்கிரி, ஓயாமல் உனக்குத் தமிழரசியிடம் சண்டையும் சச்சரவும்? பாவம், நல்ல பெண் அவள்!" என்றாள் மோகம்.

"நானாம்மா சண்டை போடறேன்? புது வேலைக்காரி வந்ததும் என்னையே உங்களுக்குப் பிடிக்காமல் போய் விட்டது போலிருக்கு! அந்தப் பெண்தான் என்கிட்டே சண்டைக்கு வருது, தெரியுமா உங்களுக்கு?" என்று கத்தினான் பக்கிரி.

"எனக்கு எப்படியடா தெரியும்?" என்ற மோகம் சிரித்தாள். "என்ன சண்டை? எதுக்குச் சண்டைக்கு வந்தாள் உன்னிடம்?"

"சும்மா இருக்கும்போதே என்னைத் திட்டுறாம்மா அந்தப் புது வேலைக்காரி! பெரிய பட்டணத்திலிருந்து வந்து குதிச்சுட்டாளே! எனக்கு நாகரிகமா நடந்துக்கத் தெரியலையாம். நாகரிகமாகப் பேசத் தெரியலையாம். அவகிட்டே கொடுமையா நடந்துக்கிறேனாம். எப்போதும் மூஞ்சியைச் 'சுள்'ளுனு வச்சுகிட்டு கடுப்பா இருக்கிறேனாம். ஏன்மா நான் அப்படியா இருக்கேன்?" என்று கேட்டான் பக்கிரி.

அப்பொழுது அந்தப் பக்கமாக வந்து எட்டிப் பார்த்த தமிழரசியையும் அழைத்துக் கொண்டாள் மோகம்.

அவள் என்னவோ ஏதோ என்று அஞ்சி நடுங்கி வந்து நின்றாள்.

"நீ தான் தமிழரசியிடம் கொஞ்சம் அன்பாக நடந்து கொண்டால் என்ன பக்கிரி? உன்னைப் போலத்தானே அவளும்? அவளுடைய மனசு மட்டும் வருந்தாதா? அவளுடைய மனசு அன்புக்காக ஏங்குகிறது. இதோ நான் ஏங்குகிறேனே—மருமகள் இரண்டுபேர் வந்தும் ஒருத்திகூட என்னோடே இல்லாமல் போனதற்கு நான் ஏங்குகிறேனே? இப்போது வரப்போகிற மூன்றாவது மருமகளும் வந்த ஒரு வாரத்தில் கண்ணனோடு தனிக்குடித்தனம் போய்விடப் போகிறாள். அதற்குப் பிறகு நானும் நீயும் அவரும்தான் இங்கே இந்த வீட்டில் இருக்கப் போகிறோம். அதை நினைத்து நான் எவ்வளவு ஏங்குகிறேன் தெரியுமா? அது போலத் தமிழரசியும் ஒருத்தி—அன்புக்காக ஏங்குகிற அவளுடைய மனசைப் புரிந்து கொள்ளாமல் சண்டை போடுவதாக எண்ணிக் கொள்கிறாய் நீ. அவள்கிட்டே அன்பாகப் பேசி அன்பாகப் பழகேன்?" மோகம் தன் கலக்கத்தை அடக்கிக் கொண்டுதான் சொன்னாள். ஆனால் அவளுடைய கண்கள் காட்டிக் கொடுத்து விட்டன.

இந்த வேலைக்காரி வந்து தன் 'அம்மா'வையும் கலங்க வைத்து விட்டாளே என்று சினம் பொங்கியது பக்கிரிக்கு. ஆனாலும் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டான்.

"அன்பா பழகறதாவது மண்ணாவது? எனக்கு அதெல்லாம் தெரியாதம்மா! என்கிட்டே இந்தப் பொண்ணு ஒண்ணும் பேச வேணாம், பழக வேணாம். அது, அது வேலையைப் பார்க்கட்டும் நான் என் வேலையைப் பார்த்துக்கொள்றேன்—நான் காட்டான்தான். நாகரிகம் தெரியாதவன்தான். எனக்குத் தெரிஞ்சது வரைக்கும் போதும். என் வேலை என்னோடேயே இருக்கட்டும். அதிலே இந்தப் பெண்ணையும் சேர்ந்து வந்து செய்யச் சொல்ல வேணாம்!" என்றான் அவன் கண்டிப்புடன்.

"ஏன் தமிழரசி? பக்கிரிக்கு நாகரிகம் தெரியலேன்னு சொன்னியா?" என்று கேட்டாள் மோகம்.

"நான் அப்படிச் சொல்லலீங்கம்மா! தலையைக் காடு மாதிரி வச்சிக்கிட்டு அதிலே எண்ணெயும் தடவாமே, புளி பிடிச்சமாதிரி முண்டாசு கட்டிகிட்டு இருப்பானேன்? கொஞ்சம் கட்டையா முடி வெட்டிக்கிட்டு அப்பப்போ எண்ணெய் தடவிச் சீவிகிட்டு சுத்தமாயிருந்தால் அழகா இருக்குமேன்னு சொன்னேம்மா! அதுக்குத்தான்—" தலை குனிந்தாள் தமிழரசி. அடுத்த விநாடியே அழுது விடுவாள் போலிருந்தது.

'ஏன்டா? அதுக்காகவா நீதமிழரசிகிட்டே சண்டைக்குப் போனே?"

"நான் எப்படி இருந்தால் இந்தப் பொண்ணுக்கு என்னம்மா வந்திச்சு? நீங்க சொல்லுங்கம்மா எனக்கு. என்ன சொன்னாலும் நான் கேட்கறேன். இந்தப் பொண்ணு யாரு எனக்குச் சொல்றதுக்கு? இன்னைக்கு இருந்து விட்டு நாளைக்குப் போறதுதானே?"

"ஓ! அவளும் போறவதானா? என் மருமகள்கள் மூன்று பேருமே போய் விடுவாங்க. இவளும் போய்விடுவாள். இல்லையா? ஆமாம், நாளைக்குப் போறவளுக்கு இன்றைக்கு என்ன வந்தது உன்னைப் பற்றிச் சொல்ல?" சிரித்தாள் மோகம். பிறகு பக்கிரியைப் பார்த்துச் சொன்னாள்:

"நான் இவ்வளவு காலம் உன்னைச் சரிவர கவனிக்கா மலே இருந்ததை இப்போதுதான்டா உணர்கிறேன். தமிழரசி சொல்லித்தான் எனக்கே புரிகிறது. சரி, நீ போ. சொன்னதைச் செய். எதிர்த்துப் பேசாதே!"

பக்கிரி அதன் பிறகு ஒன்றும் சொல்ல முடியாமல் தமிழரசியை வெறுப்புடன் பார்த்து விட்டுச் சென்று விட்டான்.

அவன் சென்றதும் மோகம் சிரித்தாள்.

"தமிழரசி! அவன் வெறும் முரட்டுப் பயல். கொஞ்சம் கொஞ்சமாக நீதான் அவனைத் திருத்திக் கொண்டு வர வேண்டும். போகப் போகப் புரியும் அவன் குணம் உனக்கு. தங்கமென்றால் தங்கம் அவன்!" என்றாள்.

தமிழரசி தலை நிமிர்ந்து அவளைப் பார்த்தாள்.

"எனக்கென்னாங்கம்மா வந்தது? இன்னைக்கு இருந்து விட்டு நாளைக்குப் போறவள் தானே நான்?" என்றாள் அவள்.

"அது கிடக்கட்டும். நீ போகும் போது பார்த்துக் கொள்ளலாம். உனக்கு இந்த ஊர் பிடிக்கிறதா தமிழரசி?" என வினவினாள் மோகம்.

"ஏம்மா அப்படிக் கேக்கறீங்க?"

"இல்லே... வந்து — நீ பட்டணத்திலேயே இருந்த வளாச்சே?"

"எனக்கு இந்த ஊர் ரொம்ப பிடிக்குதுங்க அம்மா! நெருக்கடி இல்லே, சத்தம் இல்லே, பரபரப்பு இல்லே. காவேரியிலே தண்ணி போறது மாதிரி எவ்வளவு அழகா நிம்மதியா இருக்கு! இந்த ஊரைக் காட்டிலும் உங்களை ரொம்ப ரொம்பப் பிடிக்குது!"

"அப்படியா? அது சரி. பக்கிரியைப் பிடிக்குதா உனக்கு?" குறும்பாகப் புன்னகை புரிந்தாள் மோகம்.

"எனக்கொன்றுமில்லையே—" அவள் தலை தாழ்ந்தது.

"பிறகு? அவன் எப்படி இருந்தால் உனக்கென்னவாம்?"

"ஏதோ கொஞ்சம் சுத்தமாயிருந்தால் தானே நம்ம வீட்டுக்கு வர்றவங்க போறவங்களுக்கும் அழகாயிருக்கும்? இல்லைங்களா அம்மா? அவரைக் கொஞ்சம் சுத்தமா இருக்கச் சொன்னேன். அவ்வளவுதான்—"

"ஆமாம் ஆமாம். நீ சொல்வதும் சரிதான். அவனை நீ தான் திருத்தணும். அவனை நீ கொஞ்சம் கவனித்து அவனுக்குச் சொல்லிக் கொடு. நான் மற்றதைக் கவனிச்சுக் கறேன். அவன் கோபிச்சுக்கிறானே, சண்டை போடறானே என்று கவலைப்படாதே! உண்மையில் அவன் நல்லவன்—" என்றாள் மோகம்.

"அடே! மாப்பிள்ளை போல் இருக்குறானே பக்கிரி! கண்ணன் மாப்பிள்ளையா, பக்கிரி மாப்பிள்ளையா என்று தெரியாத அளவுக்கு மாறிவிட்டானே பக்கிரி!" என்று கேலி பேசினான் முரளி.

"அவனும் இப்போ மாப்பிள்ளை மாதிரி இருக்கத்தான் ஆசைப் படுகிறான். எங்கள் வீட்டு வேலைக்காரப் பெண் தமிழரசி இங்கே வந்ததிலிருந்தே பக்கிரி மாறிவிட்டான்!" என்றான் முகுந்தன்.

"தமிழரசி அப்படி என்ன சொக்குப் பொடி போட்டாள் பக்கிரிக்கு?" என்று கேட்டுக் கொண்டே வந்தாள் முகுந்தனின் மனைவி.

"நீங்க எல்லாரும் இப்படிப் பேசினால் எனக்குக் கெட்ட கோபம் வந்து விடும். ஆமாம். நான் ஒன்னும் உங்க வீட்டுத் தமிழரசிக்காக மாறிப் போகலே. அம்மா சொன்னாங்க, நான் இப்படி இப்படி நடந்து கொள்ளணும்னு. அவங்க சொன்னதைச் செய்யறேன். அவ்வளவுதான். நீங்க வேணு மானா அம்மா கிட்டே கேளுங்க—" என்று கூறிய பக்கிரி அங்கிருந்து ஓடிவிட்டான்.

அவர்கள் சிரித்தார்கள். தோட்டத்தில் துணி உலர்த்திக் கொண்டிருந்த தமிழரசியும் சிரித்துக் கொண்டிருந்தாள்.

"சிரிப்பு என்ன வேண்டியிருக்கிறது ஒரு பொம்பளைக்கு, தனியா நின்னுகிட்டு? அவங்க தான் சிரிக்கறாங்க உள்ளே. இங்கேயும் என்ன சிரிப்பு? சிரிக்கட்டும். இன்னும் எத்தனை நாளுக்கு?" என்று சாடையாகக் கேட்டபடி மாட்டைப் பிடித்துத் தொட்டி அருகே கட்டிப் போட்டான் பக்கிரி.

"இந்த ஊரிலே நல்லதுக்குச் சொன்னாதான் குற்ற மின்னா, சிரிச்சாகூடக் குற்றமா? அடியம்மா! நல்ல ஊரு. நல்ல மனுசங்க!" என்று மீண்டும் மெல்லச் சிரித்த தமிழரசி, "இப்போதான் அழகாயிருக்கு 'இவரு' மாதிரி!" என்று திரைப்பட நடிகர் ஒருவரைக் குறிப்பிட்டுச் சொன்னாள்.

"ஊம் இருக்கும் இருக்கும். நீ 'இவள்' மாதிரின்னு நினைப்போ?" என்ற பக்கிரி தானும் அவளுக்குப் போட்டி யாக நடிகை ஒருத்தியின் பெயரைக் குறிப்பிட்டான்.

"ஓ! சினிமா உலகமே நம்ம வீட்டிலேதான் இருக்கு போலிருக்கு?" என்று கேட்டுக்கொண்டே அங்கே வந்த

மோகத்தைக் கண்டதும் இருவரும் திடுக்கிட்டு ஓடி மறைந்து விட முயன்றனர்.

கண்ணனுக்குத் திருமணம் முடிந்தது. ஒருவாரத்திற்குப் பிறகு மெல்ல மெல்ல விருந்தினர் கூட்டம் கலைந்து விட்டது.

"முரளியும் முகுந்தனும் கண்ணனுக்குக் கோயமுத்தூரில் அவனுடைய மாமனார் ஏற்பாடு செய்து கொடுத்திருந்த வீட்டில் அவன் புதுக்குடித்தனம் புகுவதற்கு வேண்டிய காரியத்தைக் கவனிக்கச் சென்றிருந்தனர்.

மோகத்துக்குத் தன்னுடைய புது மருமகள் தன்னோடு ஒரு மாதமாவது இருந்துவிட்டுப் போக வேண்டும் என்று ஆசை. ஆனால், கண்ணனுக்கு விடுமுறை இல்லையாம். அவனுடைய மனைவிக்கும் இங்கே கிராமம் பிடிக்க வில்லையாம்...

மோகம் சிரித்துக் கொண்டாள். பிறகு தனிமையில் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

மூன்றாவது மருமகள் விடை பெற்றுக் கொண்டபோது மோகத்தைத் தன்னோடு வந்து இருக்கும்படி அழைத்தாள்.

"அறுவடை முடியட்டும், வருகிறேன்!" என்று பெரு மூச்சுடன் கூறினாள் மோகம்.

அடுத்த நாளே முரளியும் முகுந்தனும் தங்கள் தங்கள் பரிவாரங்களுடன் ஊருக்குப் புறப்பட ஆயத்தமாகி விட்டனர். பக்கிரி எல்லாருக்கும் மூட்டை கட்டி விட்டான். தமிழரசியும் உதவி செய்தாள். தானும் புறப்பட்டாள்.

வெளியில் மூன்று மாட்டு வண்டிகள் தயாராக நின்றன.

மருமகள்கள் இருவரும் வண்டிக்குள் ஏறி அமர்ந்து விட்டனர். குழந்தைகளை அதட்டி அடக்கி வைக்க முனைந்தனர்.

"நானும் வரேன்கம்மா!" என்றாள் தமிழரசி மோகத்திடம். அவளுடைய பார்வை வீட்டுக்குள் சென்று தோட்டத்தையும் ஆராய்ந்தது. பக்கிரி கண்ணில் படவில்லை.

"முகுந்தா!" என்று அழைத்த மோகம், "முகுந்தா! தமிழரசியை இங்கேயே விட்டு விட்டுப் போ. அவள் இங்கேயே இருக்கட்டும். நீ வேண்டுமானால் வேறே வேலைக்காரப் பெண்ணைப் பார்த்து அமர்த்திக் கொள்!" என்றாள் அழுத்தமான குரலில்.

"ஏம்மா?" அவன் மட்டும் அல்லாமல் மற்றவர்களும் திகைத்தார்கள்.

"எனக்குத் துணையாக இருக்கட்டுமே? நீ வேறே ஆளை அமர்த்திக் கொள்ளேன்! தமிழரசி இங்கே என்னோடு தான் இருக்க வேண்டும். மூன்று மருமகள்கள் இருந்தும் ஒருத்தரும்தான் என்னோடு இல்லை. எல்லாம் பேரளவுக்குத்தான். இவளாவது இருக்கட்டுமே என்னோடு!" என்றாள் அவள்.

"மருமகளுக்குப் பதிலாகத் தமிழரசியை வைத்துக் கொள்ளப் போகிறாயா மோகம்!" என்று கிண்டலாகக் கேட்டுச் சிரித்தார் முத்துசாமி.

"மருமகளுக்குப் பதிலாக மட்டும் இல்லை. மருமகளாகவே ஆக்கிக் கொள்ளப் போகிறேன்—"

"என்ன சொல்றே?"

எல்லாருடைய கவனமும் மோகத்தின் மீதே மொய்த்தது.

"ஆமாம். எனக்கு வீட்டோடே இருக்கிற மருமகளாகத் தமிழரசிதான் இருக்கப்போறா; அவளைப் பக்கிரிக்குக்

கலியாணம் பண்ணி வைக்கப் போறேன். வீட்டோடே இருக்கிற மகன் அவன். வீட்டோடே இருக்கப் போற மருமகள் தமிழரசி! என்னுடைய இந்த ஆசையைக் கூட யாரும் தடுத்துடாதிங்க!'' என்ற மோகம், தமிழரசியின் அருகே சென்று அவள் கையைப் பிடித்துக் கொண்டாள். ''வாம்மா தமிழரசி! ரொம்ப சாதாரணமா வந்து அழைக்கிறேனே என்று வருத்தப்படாதே. உன்னைக் கண்ணுக்குக் கண்ணா வைச்சு வாழ வைக்கிறேன். நீ தான் என் நாலாவது மருமகள். வா உள்ளே. நீ தான் என்னைக் கடைசி வரைக்கும் பிரியாமல் இருக்கக் கூடியவள்—'' என்று வீட்டுக்குள் அழைத்துச் செல்ல முயன்றாள்.

''தமிழரசியோட சம்மதம் தெரிஞ்சுக்காமே இது என்ன மோகம் பைத்தியக்காரத்தனம்?'' என்றார் முத்துசாமி.

''எனக்குத் தெரியும் அவளைப் பற்றி. நீங்க சும்மா இருங்க. நாளைக்கே ஒரு நல்ல நாள் பார்த்து நம் ஊர் கோயிலிலேயே பக்கிரிக்கும் தமிழரசிக்கும் கலியாணம் பண்ணி வைக்கிற வேலையைப் பாருங்க. இல்லேன்னா எனக்கு இருக்கிற ஏக்கத்திலே உண்மையிலேயே பைத்திய மாயிடுவேன்.''

அவளுடைய இயல்பு அவர்களுக்குத் தெரியும். அதற்கு மேல் அவர்கள் ஒன்றும் கூறவில்லை.

''இந்தா தமிழரசி, உன்னுடைய பை. ஊருக்குப் போய் உன்னுடைய திருமணப் பரிசை அனுப்பி வைக்கிறோம்!'' என்று அவளிடம் பையை எடுத்துக் கொடுத்தான் முகுந்தன்.

வண்டிகள் கலகலப்பாகப் புறப்பட்டன.

தோட்டத்திலிருந்து மெல்ல வந்து எட்டிப் பார்த்தான் பக்கிரி. அவனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. அங்கே நின்ற

தமிழரசியைப் பார்த்து விட்டு, "என்னம்மா இது? வண்டியெல்லாம் போயிட்டுது. இந்தப் பொண்ணு இங்கேயே நிற்குதே பையை வச்சுகிட்டு? இதை அழைச்சுக்கிட்டுப் போக மறந்துட்டாங்களா?" என்று கத்தினான் திகைப்புடன்.

"ஏன்டா பக்கிரி? என்னுடைய நாலாவது மருமகளையும் பிரிக்கப் பார்க்கிறியா நீ, என்னை விட்டு? அதைப் போல ஏதாவது செய்துட்டே உன்னைத் தொலைச்சுக் கட்டிடுவேன் தொலைச்சு!" என்று செல்லத்துடன் கடிந்து கொண்டாள் மோகம்.

"என்னம்மா இது? நாலாவது மருமகளா?" வியந்து போய் நின்றான் பக்கிரி.

"போடா, போய் வேலையைப் பார்! தமிழரசி புறப்படுகிற நேரத்திலே அந்தப் பிரிவைத் தாங்கிக் கொள்ள முடியாமதானே நீ தோட்டத்துப் பக்கம் போயிட்டே? எனக்கா தெரியாது?" என்றாள் அவள்.

"நான் ஏதோ வேலையாப் போனேன். யார் ஊருக்குப் போனால் என்னா, போகாட்டி எனக்கென்னாம்மா? நான் தோட்டத்துப் பக்கம் போனதுக்கும் இந்தப் பொண்ணு ஊருக்குப் போகாததுக்கும் என்னம்மா சம்மந்தம்?"

"அதுதாண்டா இதய சம்பந்தம்! போடா பேசாமல்! இப்படியே வாழ்நாள் முழுக்கத் தனிக் கட்டையாகவே ஓட்டிடலாம்னு பார்க்கிறியா? இனிமே அது நடக்காது. எனக்கு நாலாவது மருமகள் வந்தாச்சு — என்னை விட்டுப் பிரியாமல் என்னோடேயே இருக்கிற மருமகள்! போடா வழியை விட்டு —"

மோகம் கூறிய பிறகும் மேலும் மேலும் விளக்கம் கேட்டுக் கொண்டு நின்றான் பக்கிரி.

தமிழரசி உள்ளே ஓடிவிட்டாள். ●

# அவள் போட்ட மோதிரம்

"திடுதிப்பென்று வந்து என்னைப் புறப்படச் சொல்கிறீர்களே? காலையில் நீங்கள் ஆபீசுக்குப் போவதற்கு முன்னாலே சொல்லியிருக்கக் கூடாதா?" கசந்து கொண்டாள் சுசீலா.

"ஏன், காலையிலிருந்து புறப்படத் தொடங்கினால் தான் இப்போது முடியுமோ தேவியின் ஒப்பனை?" அவள் கொண்டு வந்து வைத்த சிற்றுண்டியை விழுங்கி வைத்து விட்டுக் கிண்டல் பேசினான் கண்ணப்பன். காப்பியையும் வாயில் ஊற்றிக் கொண்டாகி விட்டது. இனி அவன் புறப்பட்ட மாதிரிதான். ஆனால் அவள்?

"ஒப்பனையும் இல்லை, கற்பனையும் இல்லை. என்னிடம் என்னத்தை விட்டு வைத்திருக்கிறீர்கள், நான் ஒப்பனை பண்ணிக்கொள்ள? நான்தான் ஒற்றைப் பனைமரம் மாதிரி நிற்கிறேனே!" என்று காய்ந்தாள் அவள்.

வகை தெரியாமல் வாயைக் கொடுத்து அவளிடம் மாட்டிக் கொண்டோமே என்று தலையைச் சொறிந்தான் கண்ணப்பன்.

"அதற்காகத்தானே இந்த ஏற்பாடு சுசீலா? இரண்டு வருஷம் நீ வேலை பார்த்தால் போதும். அடகு வைத்திருக்கிற உன் நகையை யெல்லாம் மீட்டு விடலாம். உன் பேரிலே பாங்கிலே கூட ஒரு அக்கௌண்ட் ஆரம்பிக்கலாம். பால்காரன், மோர்க்காரி, பூக்காரிக்கெல்லாம்

ஆளுக்கு ஒரு செக் நீ கிழிச்சுக் கொடுக்கலாம் —'' அவன் சிரித்து அவள் சினத்தை அடக்கி விடப் பாடுபட்டான்.

''ஐயே போதுமே! நான் சொல்ல வந்ததே வேறு. இப்படிக் கழுத்திலே கையிலே ஒன்றும் இல்லாமல் அவ்வளவு பெரிய ஆபீசர் வீட்டுக்கு வந்தால் என்ன நினைப்பார்கள்? காலையிலேயே சொல்லியிருந்தால் கமலி கிட்டேயாவது இரவலாய் நகை வாங்கி வந்திருப்பேனே? இதோ வந்து விடுகிறேன்'' என்று கமலியின் வீட்டுக்குப் புறப்பட்டாள் அவள்.

''அவளிடம் நீ போகக் கூடாது என்றுதான் சொல்லவில்லை. இப்போது புறப்பட்டு விட்டாய்... சரி. ஆனால் எங்கே போகிறாய். எதற்காகப் போகிறாய் என்று அந்தக் கமலியிடம் எதையும் சொல்லி விடாதே! வேறே எங்கேயோ போவதாய்ச் சொல்லி நகை கேள்!'' என்று கண்ணப்பன் சொன்னான்.

''ஏன்? எப்படியும் நாளைக்கு வேலையானால் அவளுக்குத் தெரியாமல் இருக்குமா?'' என்றாள் சுசீலா அப்பாவித்தனமாக.

''நீ ஒரு மண்டு,'' என்று சீறினான் கண்ணப்பன். அவளுக்குத் திருமணம் ஆவதற்கு முன்பே ஒரு கம்பெனியிலே டைப்பிஸ்டாய் வேலை பார்த்திருக்கிறாள். முன் அனுபவம் உள்ளவள். அவள் கணவன் சிதம்பரமும் இந்த வேலையைத் தன் மனைவிக்கு வாங்கித் தர ஏற்பாடு பண்ணிக் கொண் டிருக்கிறான். நீ ஹையர் பாஸ் பண்ணி இருந்தாலும் முன் அனுபவமே கிடையாது. இருப்பதோ ஒரே வேலை. புரிகிறதா?''

''ஓகோ! அப்படியா சேதி!''

''உனக்கு மட்டும் டைப்பிஸ்ட் வேலை கிடைத்து விட்டால், அங்கே ஆபீசிலே வேலை என் ஜோர்! நான்

சொல்கிறபடிதான் நீ டைப் அடிக்கணும்! இங்கே வீட்டிலே நீ சொல்றதுக்கெல்லாம் என் கையும் காலும் கிடுகிடென்று டைப் அடிக்கிறதே, அதெல்லாம் அங்கே நடக்காது!'' அவளுடைய கன்னத்தைப் பலம் கொண்ட மட்டும் பிடித்துத் திருகினான் அவன்.

வலி தாங்காமல் கத்தினாள் சுசிலா. ''கத்தி வேணுமானால் எடுத்துத் தருகிறேன். கன்னத்தை அரிந்தே எடுத்து விடுங்கள்! கொஞ்சுகிற லட்சணத்தைப் பார்க்கவில்லை! அதுக்குக்கூடச் சொல்லிக் கொடுக்க வேண்டியிருக்கிறது உங்களுக்கு. விடுங்கள் என்னை!''

கமலியின் வீட்டுக்கு இரவல் நகை வாங்குவதற்கு ஓடினாள் அவள், கன்னத்தை ஒரு கையால் தடவிக் கொண்டே.

வெறுங்கழுத்துடனும் வெறுங்கையுடனும் சென்றவள், பளபளக்கும் கழுத்துடனும் கலகலக்கும் கையுடனும் திரும்பி வந்தாள். வந்ததும் அலங்காரம் ஆரம்பமாயிற்று.

கண்ணப்பன் நாற்காலியில் காலைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தான். ''அங்கே சிதம்பரம் இருந்தானா? என்ன சொன்னான்?''

''எங்கே புறப்படுகிறீர்கள் என்று கேட்டார். நான் ஏதோ சொல்லிச் சமாளித்துவிட்டு ஓடி வந்து விட்டேன்.''

''சரி, புறப்படு. இருட்டுவதற்குள் போயிடணும்!''

''மோதிரம் இது தான் இருக்கிறது. சுண்டு விரலுக்குத் தான் போட முடியும்...'' பெட்டியிலிருந்து ஒரு மோதிரத்தை எடுத்துக் கொண்டு வந்து அவனிடம் காட்டினாள் அவள்.

"அடகுக் கடைக்குப் போகாததா? அதுதான் புதுசா யிருக்கிறது. பரவாயில்லை. மாட்டிக் கொண்டு கிளம்பு." அவன் வீட்டைப் பூட்டினான்.

"நீ வேலைக்குப் போகும்போது இப்படி நகைகளை அள்ளி மாட்டிக் கொண்டு வரமாட்டாயே?"

"தெரியும். உங்களைப் போலவா?"

"சரி, சரி. என்னை இளப்பமாய் எதுவும் பேசாதே. இப்போது நீ என்னைக் காக்கா பிடிக்க வேண்டிய அவசியத்தில் இருக்கிறாய். மறக்காதே. ஆபீசரிடம் உன்னைச் சிபாரிசு செய்வதற்கு அழைத்துக் கொண்டு போகிறேன்—"

"போகட்டும். இது 'ரோடா'க இருக்கிறது. இல்லையானால் உங்களை வசமாய்க் காக்காய் பிடிப்பேன்—" என்று சிரித்தாள் சுசீலா.

அந்தச் சிரிப்பில் அர்த்தத்துடன் ஐக்கியமானான் கண்ணப்பன்.

"அதுதான் உங்கள் ஆபீசர் வீடா?" என்று நின்றாள் சுசீலா. "இன்றைக்கு என்ன விசேஷம் அவர்கள் வீட்டிலே? ஒரே தடபுடலாய் இருக்கே? யார் யாரோ வந்திருக்கிறார்கள்!"

"இன்றைக்கு அவர்கள் கடைக் குட்டிக்குப் பிறந்த நாள் விழா! ஏன் நின்று விட்டாய்? இந்த மாதிரி அயனான சந்தர்ப்பம் கிடைக்குமா! சந்தோஷமாய் இருக்கிற வேளையில் சம்சாரத்துக்குச் சிபாரிசு, எப்படி?"

"ரொம்பச் சாமர்த்தியம் தான் போங்கள்!" என்று கோபமாக அவன் விலாவில் இடித்தாள் சுசீலா.

"உங்களுக்குத்தான் ஒரு கண்ணராவியும் தெரியாதே. என்னிடம் முன்பே சொல்லக் கூடாது, ஆபீசர் வீட்டுக் குழந்தைக்குப் பிறந்த நாள் விழா நடக்கப் போகிறது என்று? சும்மா வெறுங் கையை வீசிக்கொண்டா வருவது?"

அப்பொழுதுதான் அவனுக்கும் உறைத்தது.

"வீட்டுக்குத் திரும்பலாம், வாருங்கள்," என்றாள் சுசீலா.

"நீ ஒன்று! சந்தர்ப்பத்தை விடுவதாவது! அழைப்பு இல்லாமலே வந்திருக்கிறோமே. அது ஏன்? காக்காய் பிடிக்கத்தான். அதெல்லாம் பண்ணாமல் அந்த அப்பாவி சிதம்பரம் போல இருந்தால் பிழைக்க முடியாது!" என்று உபதேசம் செய்யத் தொடங்கி விட்டான் அவன்.

"ஐயே! உங்கள் பிழைப்பை நீங்கள் தான் மெச்சிக் கொள்ள வேண்டும். சரி. எனக்கு ஒரு யோசனை தோன்று கிறது. வாருங்கள், உள்ளே போகலாம்!" என்று அவனை ஆபீசர் வீட்டுக்குள் அழைத்தாள் சுசீலா.

கண்ணப்பன் அவளைப் பின்தொடர்ந்தான்.

அவர்களுக்கு வரவேற்பு நடந்தது.

"எனக்குத் தெரியும் கண்ணப்பா, நீ வருவாய் என்று. அதனாலேதான் உனக்குத் தனியாய் அழைப்புக் கொடுக்க வில்லை. மனசிலே வைத்துக் கொள்ளாதே," என்று சிரித்தார் ஆபீசர் சொக்கலிங்கம். அதை நாலு பேருக்கு முன்னால் அவர் சொல்லியிருக்க வேண்டாம் என்று நினைத்துக் கொண்டான் கண்ணப்பன்.

"எல்லாம் நாங்களே முன்னே இருந்து செய்ய வேண்டிய காரியமாயிற்றே சார்!" என்றான் கண்ணப்பன், சந்தனப் பேலாவில் விரலைத் தோய்த்துக்கொண்டு.

சுசீலா, விழா நாயகமான குழந்தையை யாரிட மிருந்தோ பறித்துத் தூக்கிக் கொஞ்சிப் பாராட்டுரை வழங்கிக் கொண்டிருந்தாள், ஆபீசரின் மனைவியிடம். கண்ணப்பன் பார்த்துக் கொண்டேயிருந்தான். திடீரென—

தன் சுண்டு விரலில் அணிந்து கொண்டிருந்த தன்னுடைய ஒரே இருப்பான மோதிரத்தை, யாருக்கும் தெரியாமல் கழற்றி அந்தக் குழந்தையின் கைவிரல்களில் போட்டு விட்டாள் சுசீலா.

ஆபீசரின் மனைவிக்கு வாயெல்லாம் பல்.

"குழந்தையுடைய கைக்கு அளவு எடுத்துக் கொண்டு போய் வாங்கி வந்தது போலக் கச்சிதமாயிருக்கிறதே மோதிரம்?" என்று சுசீலாவைப் பாராட்டினாள்.

முதலில் கோபமும், உடனே பெருமிதமும் கண்ணப்ப னுக்கு ஏற்பட்டன.

'ஐந்தாறு ரூபாய் அன்பளிப்போடு முடிய வேண்டிய சடங்கை முப்பது ரூபாய் மோதிரத்தோடு அமர்க்களப் படுத்தி விட்டாளே சுசீலா?' என்று குமுறினான். ஆபீசரின் மனைவி மகிழ்ச்சியடைவது தெரிந்ததும் ஆறுதல் ஏற்பட்டது.

விருந்தினர் கூட்டம் கலைந்தது. கண்ணப்பன் ஆபீசரிடம் விடைபெற்றுக் கொண்டபோது, சிறிது தயங்கிய மாதிரி நின்றான்.

"என்ன கணணப்பா?" என்றார் சொக்கலிங்கம், குஷியான குரலில்.

"நம் ஆபீசிலே டைப்பிஸ்ட் இடம் காலி இருக்கிறதே... அதற்கு என் ஒய்ப் சுசீலாவைப் போட்டால்... அவள் ஹையர் பாஸ் பண்ணியிருக்கிறாள்..."

"ஏனப்பா, இரண்டு பேருமே வேலை பார்க்கணுமா? உன் சம்பளம் போதாதா?"

"ரொம்ப நெருக்கடியான நிலைமை சார்... கொஞ்ச காலம் வேலை பார்த்தால் வசதியாய் இருக்கும்..."

"சரி. பார்க்கலாம் போ!" அவர் வேறு வேலைகளைக் கவனிக்கத் திரும்பினார்.

"நாளைக்கு ஆபீசிலே நினைவு படுத்துகிறேன் சார்!"

அவர் தலையை அசைத்து விட்டார். அதுவே அவனுக்கு வெற்றி.

ஆபீசரின் மனைவியிடம் காதைக் கடித்துவிட்டுச் சுசிலாவும் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டாள்.

இருவரும் பஸ் நிற்குமிடம் வந்ததும் ஒருவரைப் பற்றி மற்றவர் பாராட்டுதல்களைப் பரிமாறிக் கொண்டனர்.

"இனிமேல் சிதம்பரத்திடம் போய் மாதக் கடைசியிலே பல்லைக் காட்டிப் பத்து இருபது கடன் கேட்க வேண்டிய தில்லை." என்றான் கண்ணப்பன்.

"இந்தக் கமலி, இரவல் கொடுத்தால் தேய்ந்து போய் விடும் என்று பயந்தமாதிரி கொடுக்கிறாள்! ஆகட்டும், அவளே என்னிடம் வந்து இரவல் கேட்கும்படியான காலம் வரும்," என்று கறுவினாள் சுசிலா.

"என்ன, எங்கேயோ போவதாய்ச் சொல்லி விட்டு இங்கே வந்து நிற்கிறீர்களே?"

குரல் கேட்டு இருவரும் திடுக்கிட்டுப் பார்த்தார்கள்.

சிதம்பரமும் கமலியும் வந்து கொண்டிருந்தார்கள்.

"நீங்கள் எங்கே புறப்பட்டீர்கள்?" திருப்பிக் கேட்டான் கண்ணப்பன்.

"உனக்குத் தெரியாதா கண்ணப்பன்? இன்று நம்ம ஆபீசர் சொக்கலிங்கத்தின் கடைசிக் குழந்தைக்குப் பிறந்த நாள் விழாவாயிற்றே?"

"அதுக்கு இப்போதா போறது? நேரமாகியிருக்குமே?" என்றான் கண்ணப்பன். சுசிலாவோ, "கழுத்திலே கையிலே ஒண்ணுமில்லாமல் சாதாரணப் புடவையோடு புறப்பட்டிருக்கிறாயே கமலி? உன் நகையை எல்லாம் என்கிட்டே இரவல் கொடுத்து விட்டாய் என்றா? கழட்டிக் கொடுக்கிறேன், போட்டுக் கொள்கிறாயா?" என்று அக்கறையுடன் கேட்டாள்.

"நீ தான் எங்கேயோ போகணும்னு அவசரமாய்க் கேட்டாய். எனக்கு ஒன்றும் வேண்டாம். நீ நாளைக்கு வந்து கொடு, போதும். ஆபீசர் வீடாய் இருந்தால் என்ன? நகைக்காகவும் புடவைக்காகவுமா மதிக்கப் போகிறார்கள்?" என்றாள் கமலி. அந்தச் சொற்கள் சுசீலாவின் உள்ளத்தைச் சுட்டன. என்ன திமிரான பேச்சு!

"பஸ்ஸை எதிர்பார்த்தால் முடியாது சுசீலா. வா ஏதாவது டாக்ஸி கிடைக்கிறதா பார்ப்போம்!" என்று தப்பித்துக் கொள்ள முயன்றான் கண்ணப்பன்.

"நீங்கள் வரவில்லையா? நாளைக்கு ஆபீசர் என்ன நினைப்பார்?" என்று கேட்டான் சிதம்பரம்.

"குழந்தைக்காக என்ன பரிசு வாங்கிக் கொண்டு போகிறீர்கள்?" என்று விசாரணை நடத்தினாள் சுசீலா.

"என்னத்தைப் பரிசு கொடுக்கிறது? நமக்கு அந்த அளவுக்கு என்ன தகுதி இருக்கிறது? சும்மா போய், ஒரு

மரியாதைக்கு விசாரித்து விட்டு வரவேண்டியதுதான்," என்று கணவனுடன் சென்று விட்டாள் கமலி.

இருக்கிறாரா, சூடாக இருக்கிறாரா என்று பதம் பார்த்துக் கொண்டு உள்ளே சென்று எட்டிப் பார்த்தான் கண்ணப்பன்.

அவனுக்குப் பின்னாலேயே, ஏதோ பைல்களுடன் வந்து நின்றான் சிதம்பரம்.

"அர்ஜண்ட் பைலா? நீ போய் விட்டு வா, பிறகு நான் போகிறேன்!" என்று பின் வாங்கினான் கண்ணப்பன்.

"பரவாயில்லை. நீ பார்த்து விட்டு வா. அப்புறம் போகிறேன் நான்!" என்றான் அடக்கமாக, சிதம்பரம்.

"என்ன இவ்வளவு தூரம் வந்தாய்? வழக்கமாய் ஆபீசர்கிட்டே போகவே பயப்படுவாயே? கையில் என்ன கடிதம்?" என்று கேட்டான் கண்ணப்பன்.

"ஒன்றுமில்லை... என் மனைவி கமலிக்கு டைப்பிஸ்ட் வேலை கிடைத்திருக்கிறது. அப்பாயிண்மெண்ட் ஆர்டர் டைப்படித்து எடுத்துக்கொண்டு போகிறேன், அவரிடம் கையெழுத்து வாங்க," என்றான் சிதம்பரம்.

கண்ணப்பனுக்குத் தலை சுழன்றது. "உன் மனைவிக்கு வேலையா...எங்கே?"

"இங்கேதான். நம்ம ஆபீசிலேயே கமலி டைப்பிஸ்டாய் வரப்போகிறாள் நாளையிலிருந்து. என்னுடைய நிலைமைக்கு ஒருத்தருக்கு இரண்டு பேர் சம்பாதிச்சால்தான் காலம் கழிக்க முடியும். என்ன பண்ணுவது? நீ எப்படியோ சமாளிக்கிறாய்," என்று சொல்லிக் கண்ணப்பனுக்கு ஒரு பாராட்டுதலையும் வழங்கி விட்டு, ஆபீசர் அறைக்குள் சென்று மறைந்து விட்டான் சிதம்பரம்.

கண்ணப்பனின் கண்கள் கனல் தெறித்தன. பிறகு கலங்கின.

சிதம்பரம், ஆபீசரிடம் கையொப்பம் வாங்கிக் கொண்டு வெளியேறினான். அவன் மனைவி நாளை முதல் இங்கே வேலைக்கு வரப் போகிறாள்!

முகத்தைத் துடைத்துக் கொண்டு அறைக்குள் நுழைந்தான் கண்ணப்பன்.

எதிரில் வந்து நின்ற கண்ணப்பனை நிமிர்ந்து பார்த்த சொக்கலிங்கம் தலையை ஆட்டினார். "என்ன சேதி?" என்று பொருள்.

"என் மனைவிக்கு டைப்பிஸ்ட் ஆர்டர் போட்டுத் தருவதாய்ச் சொன்னீர்களே, சார். ஆபீசிலே நினைவு படுத்தச் சொன்னீர்கள்..." என்றான் இழைந்த குரலில் கண்ணப்பன்.

"ஓ அதுவா? ஆர்டர் போட்டாயிற்றே கண்ணப்பன்? உன் சினேகிதன் சிதம்பரத்தின் மனைவிக்கு ஆர்டர் போட்டேன். பாவம், பெரிய குடும்பம் போலேயிருக்கிறது. ரொம்பக் கஷ்டமான நிலைமையாம். என் சம்சாரம் கூடச் சொன்னாள், அவள் உடம்பில் ஒரு பொட்டு நகை இல்லை யாம். எல்லாம் விற்றுச் சாப்பிட்டு விட்டார்களாம். நீ பரவாயில்லை. வசதியான குடும்பப் பையன். நீ நேற்று ஒரு மோதிரம் வாங்கிப் போட்டாயாமே என் குழந்தைக்கு? அதையும் என் 'ஒய்ஃப்' சொன்னாள். சிதம்பரத்தையும் அவன் மனைவி கமலியையும் பார்த்து ரொம்பப் பரிதாபப் பட்டு, கமலிக்கு வேலை போட்டுக் கொடுக்கச் சிபாரிசு பண்ணினாள். அதுவும் சரிதானே, கண்ணப்பன்? துன்பப் படுகிறவர்களுக்கு உதவி செய்வதுதானே சிறந்த உதவி. உனக்குக் கவலை இல்லை. பிறகு பார்த்துக் கொள்ளலாம்.

என்ன?" என்று சொல்லிவிட்டு மேஜை மேலிருந்த காகிதங்களைப் புரட்டத் தொடங்கினார் சொக்கலிங்கம்.

"இல்லை, சார்! வந்து—"

"கமலிக்கு வேலை போட்டுக் கொடுத்ததிலே உனக்கு மகிழ்ச்சிதானே? அப்புறம் ஏதாவது இடம் காலி ஏற்பட்டால் உன் மனைவிக்கும் கொடுக்கலாம். என்ன?"

"எஸ் சார்!" முணுமுணுப்பு வாயை விட்டு வெளிவராமலே ஆபீசர் அறையை விட்டு வெளியேறினான் கண்ணப்பன்.

மாலையில் கண்ணப்பனின் வீட்டில் இரைச்சல்-

"எல்லாம் உன்னாலேதான் கெட்டது. உன் ஆடம்பரமும் நீயும்!" என்று இரைந்தான் அவன்.

"எல்லாம் உங்களால்தான்! காக்காய் பிடிக்கிற லட்சணத்தைப் பார்க்கவில்லை! கமலி வீட்டுக்காரர் காக்காயும் பிடிக்கவில்லை, குருவியும் பிடிக்கவில்லை. என்ன மாதிரி வேடம் போட வேண்டுமோ அந்த மாதிரிப் போட்டு, காரியத்தைச் சாதித்துக் கொண்டார். நீங்களும் இருக்கவே இருக்கிறீர்கள்!" என்று பதிலடி கொடுத்தாள் சுசீலா.

—❀—

எழுத்துத்துறையில் இறங்கும் எவர்க்கும் இரண்டு கடமைகள் காத்திருக்கின்றன; நடைபெறும் நிகழ்ச்சிக்கு உண்மையோடு இருத்தல். அதனை எடுத்துக் கையாள்வதில் நல்ல உணர்வு. எவ்வளவு கீழ் நிலையில் இருந்தாலும் 'பெயர் சொல்ல'த் தகுதியற்றதாக இருந்தாலும் ஒவ்வொரு இலக்கியப் பகுதியிலும் கல்விக்கு இன்றியமையாதது உண்மையின் சார்பாக இருப்பதேயாகும். அது மனிதத் தன்மைக்கு ஆறுதல் அளிப்பதாக இருத்தல் வேண்டும். அதனை அளிக்கும் எழுத்தாளனையும் அது உயர்வடையச் செய்யும். எழுதுபவனுடைய முதல்கடமை அறிவுடைமையே. மக்களின் அறிவுக்குத் தலைவனாக அவன் தன்னை வளர்த்துக் கொண்டிருக்க வேண்டும். அவன் தன்னுடைய உள்ளம் இரக்கம் உடைமையுடன் பெருந்தன்மையுடன் ஒளி நிறைந்ததாக இருக்குமாறு பார்த்துக் கொள்ளுதல் வேண்டும். தவறுகளைத் தவிர மற்ற ஒவ்வொன்றும் அவன் வழியாகவே குரல் கொடுக்கப்படுதல் வேண்டும். அவன் எல்லாவற்றிலும் நல்லதையே காணவேண்டும்.

முழுமையாகப் புரிந்து கொள்ள முடியவில்லை என்னும் அச்சம் அவனுக்கு இருந்தாலும் அவன் அமைதியாக இருக்க வேண்டும். அவன் தன்னுடைய தொழிற்சாலையில் ஒரே ஓர் ஆயுதம் மட்டுமே வைத்திருக்கிறான் என்பதைத் தொடக்கம் முதலே உணர்ந்திருத்தல் வேண்டும்; அது இரக்கம் உடைமை என்னும் ஆயுதமாகும்.

அவனுடைய இரண்டாவது கடமையை உருவாக்கிக் கூறுவது கடினமானது; அது பண்புடைமையாகும்.

**ஆர். எல். ஸ்டீவன்சன்**

**படைப்பாளி + சமுதாயம் = இலக்கியம்**

'டிரெய்னுக்கும் பஸ்சுக்கும் காத்திருக்கும் போதும் படிக்கத்தான் புத்தகம்! என்று பல இலக்கியப் படைப்பாளி களும் எது விற்பனையாகிறதோ அதுதான் இலக்கியம் என்று கூச்சலிடுகிற பத்திரிகையாளர்களும் நம்மிடையே உள்ளனர். படைப்பே பொழுதுபோக்கு என்ற எண்ணம் நம்மிடம் பரவியிருக்கிறது.

'மக்கள்-மன்னன்-மதம்-மக்கள் என்ற தமிழ் இலக்கிய வரலாறு சுழற்சி முறையில் மீண்டும் மக்களை நோக்கி நங்கூரம் கொண்டுள்ளது. என்றாலும், மக்கள் வாழ்க்கை காமத்தையும் பணத்தையும் நோக்கியே அமைந்து விட்டதால், இலக்கியத்தின் பொருள்ாகவும் அவையே அமைந்துவிட்டன.

துணைவேந்தர் க. ப. அறவாணன்

## ஆசிரியரின் பிற நூல்கள்

• **இன்பத்துள் இன்பம்** - நாடக நூல்; தமிழ் வளர்ச்சித் துறையின் இரண்டாம் பரிசு பெற்றது. • **சூடினர் இட்ட பூ** - சிறுகதைத் தொகுப்பு. • **வா, நெஞ்சமே துணையாக, வா** - புதினம். • **உதய குமரன் காதல்** - ஆய்வு நாடக நூல் தமிழ் வளர்ச்சித் துறையின் முதல் பரிசு பெற்றது. • **பஞ்சம் பொழைக்க** - குறுநாவல் அமுதசுரபியின் முதல் பரிசு பெற்றது. எம்.ஜி.ஆர். அறக்கட்டளையின் சிறப்புப் பரிசும் பெற்றது. • **பேரறிவாளர் நேருவின் சீரிய சிந்தனைகளும் சிதைந்த கனவுகளும்** - வரலாற்று ஆராய்ச்சி நூல். • **பாரதியார் காட்டிய பகுத்தறிவுப் பாதை** - ஆராய்ச்சி நூல் • **புரட்சித் தலைவன் மாசே - துங் நடந்த புரட்சிப் பாதை** - வரலாற்று நூல் • **அழகுக்காக** - சிறுகதைகள் தொகுப்பு. தலைநகர் தமிழ்ச் சங்கத்தின் - முனைவர் வ.சுப. மாணிக்கனார் நினைவுப் போட்டி முதல் பரிசு பெற்றது. • **பாலையில் பெய்த மழை** - நெடுங்கதைகள் தொகுப்பு. • **காட்டுக்கு எரித்த நிலா** - புதினம். • **ஆனந்த நடனம்** - புதினம்; பாரத ஸ்டேட் பாங்கின் இலக்கியப் போட்டியில் இரண்டாம் பரிசு பெற்றது. • **நெல்சன் மண்டேலாவின் போராட்டக் களங்கள்** - வரலாறு. • **ரோம் நாட்டு மாமன்னன் மார்கஸ் அரேலியசும் திருவள்ளுவரும்** - சிறுவர் இலக்கியம். • **காகித ஓடம்** - சிறுகதைத் தொகுப்பு. • **நெல்சன் மண்டேலா - சிறுவர்க்கு ஒரு வரலாறு** - குழந்தை எழுத்தாளர் சங்க வெள்ளிப் பதக்கம் பரிசு பெற்றது. • **காலம் ஒரு நாள் மாறும்** - புதினம். • **ஒரு நாடகம் நடைபோடுகிறது** - சிறுவர் நாடகம். குழந்தை எழுத்தாளர் சங்கத்தின் முதல் பரிசு பெற்றது. • **இரு நாடகங்கள்** - துன்பியலும் இன்பியலும்.

யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ், சிதம்பரம் - ☎ : 23040 - சென்னை - 4 ☎ : 4984693, 4661807.